*An edition is also published elegantly bound as Reward, Presentation and Library Books. A part of the profit of this publication is to be given to H. E. Lady Ampthill's*
***Women's Victoria Memorial Fund, Madras City.***



**VICTORIA, R.I.**

*(In her Coronation Robes, 1837.)*

TO

THE REVERED MEMORY

OF

QUEEN-EMPRESS VICTORIA,

*A MOTHER TO INDIA,*

WHOSE WELFARE SHE EVER HAD AT HEART,

THIS SERIES OF

BRIEF BIOGRAPHIES OF THE GREAT & GOOD WOMEN

OF

HER GLORIOUS REIGN

IS MOST RESPECTFULLY DEDICATED

IN BEHALF OF

THE AUTHOR'S LOYAL COUNTRY-WOMEN.

சுபத்திரசாலைகளிலும், புத்தகங்களை யெழுதிப் பிரசுரஞ்செய்வதிலும் அமர்ந்து உலகத்திற்குப் பலவாறாக நன்மையைச் செய்துவந்தார்கள்.

மார்த்தினோவின் குடும்பத்தார் ஆதியில் பிரான்ஸ்தேசத்திலிருந்தவர்கள். 1688-ம் வருஷத்தில் மதவிஷயமாக அங்குள்ளவர்கள் அவர்களைப் படுத்திவைத்த பாடுகளைப் பொறுக்கமாட்டாமல், அவர்கள் இங்கிலாந்துக்குச் சென்று அங்குள்ள அழகிய நகரமாகிய நார்வுச்சில் குடியேறினார்கள். இதுதான் எலிஜபெத் ப்ரை வாழ்ந்த இடம். வெகுநாளளவும் இவருடைய முன்னோர்கள் அந்நகரத்திலே வைத்தியஞ்செய்துகொண்டிருந்தார்கள். அவர்களெல்லோரையும்போல இவரது தந்தை ரணவைத்தியராயிராமல், சாதாரணமான மருந்து மாத்திரைகளைமட்டுந்தான் செய்யப் பழகியிருந்தார். அவருடைய மனைவி இங்கிலாந்தின் வடநாட்டிலே சர்க்கரை சுத்திசெய்துகொண்டிருந்த ஒருவன் மகள். மார்த்தினோவெண்ணும் துரைசானியுடன் கூடப்பிறந்தவர்கள் எட்டுப்பேர்; அவர்களுள் மார்த்தினோ ஆறாவது குழந்தை. பேர்பெற்ற மாதுசிரோமணிகளின் தாய்மார்களைப்பற்றிப் படிப்பது முக்கியமானதல்லவா? மார்த்தினோவின் தாய் அதிக நேர்மையுடையவர்; அவர் ஒருபொழுதும் நன்னெறி தவறி நடவார்; ஆனால் மேட்டிமை பாராட்டுபவர்; அதிகாரத்தை வகிப்பவர்; உபசரிக்கத் தெரியாதவர்; மனதிலுள்ளதை இங்கிதங்களால் வெளியிடாதவர்; தாய்க்குத் தம்மக்களிடத்திலுள்ள அன்பும், ஆதரவும் இவரிடத்தில் ஒருவாறு மறைந்திருந்தன. குழந்தைகளிடத்தில் சிரிப்பும் விளையாட்டுமாக நடந்துகொள்ளாமலிருப்பது, அவர்களுக்கு வேண்டிய உணவைக் கொடாமலிருப்பது எவ்வளவு தீதோ, அதனிலும் தீதென்று இவர் அறியவில்லை. குழந்தைகள் ஓடி விளையாடித் திரிந்தால்மட்டுமே தேகம் சுகமாயிருக்குமென்பதும் இவருக்குத் தெரியாது. மனதிலே

நினைப்பதை வெளியே சொல்லாமலும், அப்படிச் சொல்லுவது கெட்டதென்று நினைத்துக்கொண்டுமிருக்கிற தாய்மார்கள், ஹாரியட் சிறுகுழந்தையாயிருந்த காலத்தில் இவருக்கு நேர்ந்ததை அறிவார்களேயானால் அப்படிச் செய்யார். ஹாரியட் சிறு குழந்தையாயிருக்கும்போதே காது ஒருவாறு செவிடாகிவிட்டது. இவருக்கு நினைவு தெரியுமுன்பே மோத்தலறிவு மட்டுப்பட்டது; மோத்தலறிவும், சுவையறிவும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையவையாதலால் சிறிது நாளுக்குள்ளே அதுவும் இவருக்கு இல்லாமற்போயிற்று. இவ்வாறாக இவர் பெரிய பெண்ணாவதற்குமுன் மூக்கினால் மோந்து பார்க்கவும், நாவினால் சுவைக்கவும், கண்ணால் பார்க்கவும் கூடாமற்போயிற்று. மனிதருக்குள்ளே ஐம்புலன்களுள் காணுதலும், சுவைத்தலும், மோத்தலும் ஆகிய இம்மூன்றும் அவருக்கில்லை. ஆதலால், சந்தோஷமாக வாழ்ந்திருப்பது வருத்தமாயிற்று. இத்தனை சங்கடங்களோடு போகாமல் சிறு குழந்தையாயிருக்கும்போது உண்ட உணவு செரிக்காமல் மந்தந்தட்டி வருத்தப்பட்டதுமுண்டு; பால் இவர் உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை. ஆயினும் சிறு குழந்தைக்குப் பாலும், ரொட்டியும் இல்லாதிருப்பது நன்றல்லவே. ஆதலால் இவர் தாயார் அவற்றை இவருக்கு மல்லுக்கட்டி ஊட்டவேண்டியதாயிற்று. ஆனதினால், பகலிலும் இரவிலும் உண்ட உணவு செரிக்காமல் வயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு இவரை அதிகமாய்ச் சங்கடப்படுத்தியது. இயற்கையாகவே எளிதில் பயப்படத்தக்க இந்தப் பெண் காரணமின்றிப் பகலிலும் எதைக்கண்டாலும் நடுங்குவாள்; இவளைவிட்டு அச்சம் ஒருபொழுதும் நீங்கினதில்லை.

இத்தனையாகப் பிறந்த குழந்தையை ஏற்றபடி பார்த்து வருவதற்கு இவர் தாயார் நல்ல புத்திசாலியல்ல; இவர் பெரிய குடும்பத்திலே பிறந்தவர்; இவர் தாய்க்குப் பிடி

வாதமும், கண்டிப்பும், அதிகாரம் வகிக்குங் குணமும் அதிகம். இத்தனையிருந்தும் அவள் தன் மக்கள்மேல் கருத் தாயிருந்து தன் வருத்தத்தைப் பாராமல் எந்த வேலையை யுஞ் செய்யச் சோம்பாமல் பாடுபட்டாள். அவள் மற்ற வர்களைவிட ஆழ்ந்த புத்தி நுட்பமுடையவள். அவள் எந்தக் காரியத்தையும் ஆராய்ந்துபார்த்து ஏற்றவண்ணமாகச் செய்துவந்தமையால், அவள் கணவன் தான் செய்யவேண் டிய காரியங்களையெல்லாம்பற்றி அவளோடு கலந்து யோசித் துச் செய்யத் தவறினதில்லை. அவள் நல்ல தர்மசிந்தையும் அன்புமுள்ளவள்; சண்டையிட்டுப் பிடாரியைப்போலக் கத்திதிட்டுகிற துர்க்குணம் அவளிடத்திலில்லை. வீட்டு வேலைகளைப்பார்ப்பதில் எல்லாவற்றையும் முக்கியமாகத் தன் மனப்போக்கின்படியே பிடிவாதமாகச் செய்துவந்ததனால் அவள் குணம் ஒருவாறு கெட்டுப்போயிற்று; இதுவுமல் லாமல் பிறரிடத்தில் அவளுக்குள்ள அன்பை வெளியே காட் டாதிருந்தாள். ஹாரியட் மார்த்தினோ தாம் எழுதிய கதை யொன்றில் தன் தாயின் குணானுபவங்களையெல்லாம்பற்றி அன்னியதேசத்து ப்ராக்ட்டர் துரைசானி சொல்லுகிற பாவனை யாக நன்றாய் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

அந்தக் கதையில் ப்ராக்ட்டர் என்பவள் யாரையும் புகழ்ந்து பேசுகிறதில்லையாதலால் அவள் வாக்கினால் புகழப் பட்டவர்களுக்கு அதிக மரியாதையுண்டு. அவள் காணும் படி யாருங்கண்ணீர் விடுகிறதில்லை; அவளுங் கண்ணீர்விடுவ துண்டென்றாலும், அப்படி விடாதிருப்பதே மேன்மையென்று எல்லோருக்கும் புத்திசொல்லிக் கண்டித்துவந்தாள். அந்தக் கதையில் அவளுடைய மகன் சிறுபிராயத்தில் வீட்டைவிட்டுக் கல்விபயிலுதற்பொருட்டு முதலில் பாடசாலைக்குப் புறப்பட் டுப்போனவுடன் அவனைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டாமல் அந்த வீட்டிலிருந்தவர்களெல்லாரும் அழுதபோது அவள்

மட்டும் துக்கத்தை வெளியே காட்டாமலும், கண்களினின் றும் ஒரு துளி நீரையாயினுஞ் சிந்தாமலும் தைரியமாயி ருந்தாள். அதன் பின்பு ஒரு காலத்தில் அந்தச் சிறுவ னுக்கு ஒரு ஆபத்துநேர்ந்து அதனால் வைத்தியன் அவன் காலை வெட்டிப்போடும்படி நேர்ந்ததென்றாலும், அவன் துக்கம் இன்னும் அதிகரித்து அதுகாரணமாக மனம் நொந்து ஏக்கங்கொள்ளுவானென்று அவள் பயந்து, தனக்குண்டான துக்கத்தை அவன் முன்னே வெளியிடாதிருந்தாள். இவ் வாறே அந்தப்பிள்ளையும் தன் தாய் தன்னோடுகூடவே இருக்க வேண்டுமென்பதைவிட்டு, அவளைப்பார்த்து, "அம்மா! இந்த நோய் கொடிது; நீ என்முன் இப்பொழுது நிற்கவேண்டாம்; இந்த வேதனையை நான் பொறுக்கமாட்டேன்; நீ இப்போதே இதைவிட்டுத் தூரச்செல்; வைத்தியனை உள்ளே வந்து சீக்கிரம் பார்க்கச் சொல்" என்று சொன்னான். காலைவெட் டிய புண் ஆறினபின்பு அவன் தன் தாயைக் கண்டபோது அவனைத் தெரியாமலே அவனுக்குத் துக்கம் பொறுக்காத படி வெளிப்பட்டது; ஒருநாள் அவனும், அவன் தாயும், சகோதரியும் உட்கார்ந்து வார்த்தைசொல்லிக்கொண்டிருக்கை யில், அவனுக்குத் தன்னையறியாதபடி துக்கம் மேலிட்டு, "நான் என் வருத்தத்தை எப்படிப் பொறுப்பேன்; இப்படி எத்தனை காலந்தான் சங்கடப்பட்டுக்கொண் டிருப்பேன்; எல்லோரையும்போல ஓடியாடித் திரிந்து சுகமாயிராமல் இந்தக்கஷ்டத்தை ஆயுள்காலமெல்லாம் எப்படிச்சகிப்பேன்" என்று சொன்னான். ஒருநாளும் தான் பட்ட வருத்தத்தை வெளியே சொல்லாத தன் சகோதரன் அன்று தன் தாய் முன்னே அப்படிச் சொல்லியதைக் கேட்டு, அது இவ்வள வென்று வாயாற் சொல்லவொண்ணாத மரணவலியாயிருந்த படியினாலேதான் அவன் வாயைவிட்டு வெளியிட்டானென்று நினைத்தாள்.

அவளது குழந்தைகளுக்கும் அவளுக்கும் இத்தனையாக உள்ளத்தில் அன்பு மிகுந்திருந்தது. குழந்தைகள் தங்களுக்கு உண்டாகும் வருத்தங்களைத் தாயினிடஞ் சொல்லிக்கொள்ளுவது உலகத்தியற்கையல்லவா? அவளுடைய மக்கள் தாங்கள் பட்ட வருத்தங்களைப்பற்றி அவளோடு அதிகமாக ஒன்றுஞ் சொன்னதில்லை. தாயும், குழந்தைகள் இவ்வாறு படும் வருத்தத்தைக்கண்டு அதைப்பற்றி ஒன்றும் வாயைவிட்டுச் சொல்லாமல், அவ்வருத்தங்களெல்லாம் நீங்குதற்பொருட்டு இடைவிடாமல் ஓடியுழன்று வருந்திக்கஷ்டப்பட்டாள். அவளுக்குத் தம்மக்களிடத்தில் பூர்ணமான விசுவாசமுண்டு; அம்மக்களுடைய இளம்பிராயத்தில் அவள் அவர்களுக்கென்று பட்டவருத்தங் கொஞ்சமன்று. ஆனால் மனதிற்குள்ளே யிருந்ததுபோலவே, வெளித்தோற்றத்திலும் அவர்களோடு கொஞ்சிக் குலாவி முத்தமிட்டுச் சிரிப்பும் விளையாட்டுமாயிராதிருந்த தோஷமொன்றுதானுண்டு. குழந்தைகளோடு கொஞ்சி முத்தமிட்டு விளையாடுவது வீணல்ல. முன் சொன்ன எலிஜபெத் ப்ளையை எப்படி நினைத்தார்களோ அப்படியே இவளை வீட்டிலிருந்த குழந்தைகளெல்லாரிலும் மந்தமான புத்தியுடையவளென் றெண்ணியிருந்தார்கள். இவருக்கு நாளடைவில் உடம்பிலே பலமுண்டாகத் தலைப்பட்ட பின்புதான் அறிவு விருத்தியாயிற்று. குழந்தைகள் எவ்வளவுக்கெவ்வளவு சந்தோஷமாயிருக்குமோ, அவ்வளவுக்கவ்வளவு புத்தி கூர்மையாயிருக்கும்; மனம் தெளிவாகும்; மூளை பலமாயிருக்கும்; எதைப்பார்த்தாலும் கருத்து மனதில் நன்றாய் ஊன்றி மறந்துபோகாமலிருக்கும். கல்வியை நன்றாய்க் கற்றவளாகிய மேரி என்பவளைப்போலவே இவர் சிறு குழந்தைப் பருவமுதற்கொண்டு கல்வியில் நன்றாய்த் தேர்ந்தார்; ஏழுவயதாயிருக்கும்போதே மில்ட்டன் ஆசிரியர் செய்த செய்யுட்களைப் பாடஞ்செய்யத் தொடங்கி அதன் சுவையை

யறிந்து அவனைக் கொண்டாடினர். அவருக்குப் படிப்பதில் அதிகமான பற்றுண்டானபொழுது மிகவும் விரைவாய்ப் படித்தார். ஷேக்ஸ்பியர், கோல்ட் ஸ்மித், தாம்ஸன், மில்டன் இந்தக் கவிகள் எழுதிய செய்யுட்கள் பல இவருக்கு வாய்ப்பாடமாகத் தெரியும்.

மார்த்தினோ சிறுபெண்ணாயிருந்தகாலத்தில் பெண்கள் படிப்பு ஒருவகையாயும், பிள்ளைகள் படிப்பு வேறொருவகையாயு மிருந்தன. ஆனால் இவருடைய தமையன்மார்களும், தமக்கைமார்களும் வீட்டிலே இவருக்குப் பாடஞ்சொல்லி வந்தபடியால் அத்தனையாக வேறுபடவில்லை. அவர்கள் இவருக்கு இவ்வாறாக வீட்டிலிருந்தபடியே லத்தீன் பாஷையையும், பிரெஞ்சுபாஷையையும் நன்றாய்ச் சொல்லிக் கொடுத்ததுமல்லாமல், இன்னும் பலவிஷயங்களையும் ஒருவாறு கற்றுக்கொடுத்தார்கள். மார்த்தினோவுக்குப் பதினொரு வயதானபொழுது இவருடைய சகோதரியான ராச்சல் என்பவள் ஒரு பள்ளிக்கூடத்திற்குப் போனாள். அப்பாடசாலை உபாத்தியாயர் நல்லவர். அந்தப் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளும் படித்துவந்தார்கள். மார்த்தினோ இந்தப் பள்ளிக்கூடத்திலே சேர்ந்து நன்றாய்ப் படித்துவந்தார். அதின் உபாத்தியாயராகிய பெர்ரி என்பவர் சாந்தமுடையவர்; பாடஞ் சொல்லிக்கொடுப்பதில் நன்றாய்த் தேர்ந்தவராதலால், மார்த்தினோ சிறிதும் வருத்தத்தைப் பாராமல் நன்றாய்ப் படித்தார். அங்ககணிதம் அவருக்குப் பாடமாகத் தோற்றி வருத்தத்தைக் கொடாமல் விளையாட்டைப்போல வேடிக்கையாயிருந்தது. அங்கிலேய பாஷை பிழையற நன்றாய்க் கற்றுக்கொடுக்கப்பட்டு, இவருக்கு இனிய பாடமாயிற்று. இவ்வாறு இரண்டுவருஷகாலம் அந்தப் பள்ளிக்கூடத்திலே படித்தபின்பு மறுபடியும் வீட்டிலேதா[ன்] இருந்துகொண்டு படித்தார். இவர் லத்தீன், பிரெஞ்சு, [கணி]தம் இவற்றை வெளி உபாத்தியாயர்களிடஞ் சென்று ச

வந்தார். சரித்திரம், கதை, காவிய முதலியவற்றைத் தரமும் படித்துவந்தார். ஒரு பெண் உரத்துக் கூவிப் படித்துக்கொண் டிருக்கையில் இன்னொருபெண் தையல்வேலை செய்துவரு வாள். மார்த்திநோ பூத்தையல்வேலையில் கைதேர்ந்தவரா னார். இவர் எழுதவேண்டிய விஷயங்கள் அதிகமாயிருந்தன வென்றாலும் அவற்றுடன் வாழ்நாள் முழுவதும் தையல் வேலை யையும் விடாமல் செய்துவந்தார். 82938

முற்காலத்திலே இங்கிலாந்தில் தையல்வேலை பெண்க ளுக்கு முக்கியமானது; இதற்கென்று பெண்கள் பட்டபாடு கொஞ்சமல்ல. மார்த்திநோவின் காலத்தில் பெண்கள் தையல் வேலைக்காகப் பட்டகஷ்டம் இத்தனை அத்தனையென்று சொல்ல முடியாது. இக்காலத்திலோ, எங்கும் தைக்கும் யந்திரங்கள் வழங்கிவருகிறதினால் அவ்வளவாகப் பெண்கள் தையல் வேலைசெய்ய முயலுகிறதில்லையென்று காண்கிறது. மார்த் திநோ என்பவர் தையல்வேலையைப் பற்றிச் சொல்லிய தாவது:—"இக்காலத்தில் தையல்வேலை தேகசவுக்கியத்திற் கென்றே பெரும்பான்மையாகச் செய்யப்படுகின்றது; அன்ன வஸ்திரத்துக்குக் குறைவில்லாதவர்களும் இதை விட்டுவிடு கிறதில்லை. எனக்குத் தையல்வேலையினால் உண்டாகும் ஆனந்தம் கொஞ்சமல்ல. என்னைப்போல் தைப்பதில் பாடு படுகிறவர்கள் அதிகமாயிரார். என்னுடைய அனுபவத்தில் தையல்வேலையைப்போல வருத்தமானது வேறொன்றுமில்லை; மிதமாகச் செய்தால்மட்டுமே நல்லதாகத் தோற்றும். எந்நேர மும் உட்கார்ந்து குனிந்துகொண்டிருப்பதிலுங்கூட அத்தனை யாக வருத்தமிராது; இடைவிடாது தைத்துக்கொண்டிருக்க வேண்டியதனால் கை ஓய்ந்துபோய் வலிக்கும். எந்நேரமும் தைத்துக்கொண்டிருந்தால் எப்படிப்பட்டவர்களுக்கும் இளைப் புண்டாகும். சிறு பெண்ணாயிருந்த காலத்தில், தைக்கும் போது மற்றவர்களைத் தூஷித்துப் பேசிய வம்பளப்பினால்

வலிமை குன்றியது; பிற்காலத்திலே அதற்காக எவ்வளவு துக்கப்பட்டுப் பரிகாரஞ் செய்துகொண்டாலும் பயன்படுகிறதில்லை" என்று பின்னிட்ட காலத்தில் தாமே அனுபவசித்தமாகக் கண்டு எழுதியிருக்கிறார்.

இவ்வாறு மார்த்திஞெவினால் அங்கீகரிக்கப்படாத தையல் வேலையை இந்தியாவில் வீடுதோறும் அதிகமாக வருந்திச் செய்வது நலமென்று எனக்குத் தோற்றவில்லை. ஏனெனில், இந்தியாவிலுள்ள புருஷர்களும் ஸ்திரீகளும் உடுக்கும் உடைகள் கிழித்துத்தைக்கப்படாதவைகளாதலாலும், சீதளதேசங்களில் வசிப்பவர்களுக்கு தேகம்முழுமையும் போர்க்க வஸ்திரங்கள் வேண்டியிருப்பதைப்போல உஷ்ணதேசத்திலே வசிக்கிறவர்களாகிய இந்துக்களுக்கு வேண்டுவதில்லையாதலாலும், இந்துதேசத்தில் வீடுதோறும் தையல்வேலை அத்தனை அதிகமாகவேண்டாம். இப்போது தான் இந்தியாவில் பெண்கள் வீடுகளிலே ஏதோ கொஞ்சம் படிக்கத் தலைப்பட்டிருக்கிறபடியால், அதனோடு தையல்வேலையை அதிகமாக வைத்துக்கொள்ளுவது தீது; அல்லாமலும், அங்கிலேயர்களுக்கிருப்பது போல இது இந்துக்களுக்கு அத்தனையாக தேசாசாரமுள்ளதுமன்று. தைப்பதினாலே கல்வி அபிவிருத்தியாவது மில்லை; பின்னாலே வரப்போகிற விஷயங்களை ஊன்றிப் பார்க்கும்படி புத்திநுட்பமுமுண்டாவதில்லை; வீண்வம்பு பேசுவதை நிறுத்துவதுமில்லை. எவரையும் தூஷித்துப் பேசுவது எந்தத்தேசத்திலுமுள்ள வழக்கம். எந்த நாட்டிலே படிப்புக் குறைவுபட்டு, படிக்கப் புத்தகங்கள் அகப்படுவது வருத்தமோ, அங்கேதான் வீண்வம்பளப்பு அதிகமாயிருக்கும். "பெண்காள்! நீங்கள் கற்றுத்தேர்ந்து முன்னுக்கு வாருங்கள்; முன்காலத்திலிருந்தது போல இக்காலத்திலே கல்வியானது புருஷர்களுக்கு மாத்திரமே உரியதென்று மூடிவைத்து முத்திரைபோடப்பட்டிருக்கவில்லை. ஆதலினால் நீங்கள் நிறைகல்வியைக் கற்று, அ

யாமை நீங்கிப் பழிபாவங்களுக்கு அஞ்சி வீண்வம்பளப்பை யொழித்துப் பகையை மறந்து சுகமாக வாழ்ந்திருங்கள்" என்று தென்னிஸன் கவி பாடியிருக்கிறார். மார்த்திேனா பெரிய பெண்ணாகிப் பாடசாலையை விட்டபின்பு, ஊரிலுள்ள மற்றப் பெண்களெல்லாரையும்போலக் கல்விப்பொருளை விருத்தி செய்யாதிருக்கவில்லை; வீட்டிலே விளையாடி வம்புபேசாமலும், சோம்பித் திரிந்து வீணே காலத்தைப் போக்காமலும் எப்பொழுதும் படித்துக்கொண்டு நற்பொழுது போக்கினார். மிகுந்த தனத்தைத் தேடவேண்டுமென்று இவர் கவலைப்பட்டதில்லை. அக்காலத்தில் இவர் தாய் தந்தையருக்கு வேண்டிய பொருளிருந்தது. இவர் குடும்பத்திலுள்ள பெண்களுக்கெல்லாம் எந்தக்காலத்திலும் கவலையற்றுச் சுகமாக உண்டுடுத்து வாழ்தற்குப் போதுமான செல்வமுண்டாகையால் பாடுபடவேண்டுமென்கிற விசாரம் அவர்களுக்கில்லை. ஆயினும் அந்த வீட்டுப் பெண்களெல்லாம் கல்விபயின்று, எந்தவிஷயத்திலும் நன்றாய்த் தேர்ந்திருந்ததைக் கண்டு ஊரார் அவர்களை அத்தனை பாகப் பணக்காரர்களென் றெண்ணவில்லை. "நான் சிறுமியாயிருந்தகாலத்திலே, சிறுபெண்கள் கல்வியை அதிகமாகக் கற்றல் நன்றல்லவென்றும், அதிலும் எழுதும் இறகைக் கையிலே வைத்திருப்பது கூடாதென்றும் நினைத்திருந்தனர்" என்று அவர் எழுதியிருக்கிறார். ஆகையாலேதான் இவர் பின் மாலைவேளைகளிலும், இருட்டியபின்னும் மற்றவர்க்குத் தெரியாமல் படிக்கவேண்டியதாயிற்று. இவர் தமது சகோதரனோடு லத்தீன் பாஷையையும், அத்தைமகளாகிய லீ என்பவரோடு இத்தாலிய பாஷையையும் படித்தார். வேதபுத்தகத்தை விடாமல் படித்துவந்து, கேட்டதற்கெல்லாம் உடனே உத்தரஞ்சொல்ல வல்லவரானார். இவர் தனியே படித்த படிப்பு இதனிலுஞ் சிறந்தது. இவர் பலர் எழுதிய தத்துவ சாஸ்திரங்களையும், நீதிசாஸ்திரங்களையும் கருத்தாகப் படித்

தார். இவர் பின்னிட்டுத் தாம் எழுதத் தொடங்கியபோது இவை இவருக்கு நன்றாய் உதவியாயின.

இந்தக்காலத்தில் இவருக்குக் காதுகேட்பது வரவர மந்தப்பட்டதனால், மற்றவர்களோடு பேசுவதை மட்டுப்படுத்தினார். இந்த வருத்தத்தை இவர் பொறுத்தது ஆச்சரியமானது. 1834–ம்வருஷத்தில் இவரால் எழுதிப் பிரசுரஞ்செய்யப்பட்ட செவிடர்க்கெழுதிய கடிதத்தில், தமக்கு இதனாலுண்டான வருத்தங்களையெல்லாம் நன்றாய் எழுதியிருக்கிறார். எப்படிப்பட்ட துன்பம் நேர்ந்தாலும், நமது சவுக்கியத்தை மாத்திரம் பாராமல், தைரியம், பொறுமை, கபடமின்மை இவற்றால் அவற்றைப் பொறுத்தலே நலமென்று இவர் அதிக கம்பீரமாயும், அழகாயும் எழுதியிருப்பதைக் காணலாம். இவர் சொல்லியிருக்கும் புத்திமதியெல்லாம் இவர் முதலிலே தாமாகவே நன்மையென்று கண்டவையாம்; சிலரைப்போல இவர் பிறர்க்குச் சொல்லுவதொன்றும், தாம் செய்வது வேறுமாயிருக்கவில்லை.

ஹாரியட்கலியாணம்செய்துகொள்ளும்படி நிச்சயித்திருந்த வர்த்திங்ட்டன் என்பவர் அவருடைய சகோதரராகிய ஜேம்ஸ் என்பவருக்கு மிகவும் வேண்டியவர்; அவர்கள் இருவரும் ஒரு பாடசாலை மாணாக்கர். மார்த்திநோ அவரைக் காண்பதற்கு முன்னமே அவரைப்பற்றிக் கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தாராகையால், அவ்விருவருக்கும் நல்ல சிநேகமுண்டாகிப் பாடசாலையில் விடுமுறைநாள் வந்தபோது வர்த்திங்ட்டன் சிறிதுநாள் நார்விச் நகரத்துக்கு வந்து தமது தோழராகிய ஜேம்ஸ் என்பவருடன் வசித்தார். அப்போது அவருக்கும் மார்த்திநோவுக்கும் அதிகமான பழக்கமுண்டாகி இருவரும் ஒருவருக்கொருவர் மிக்க அன்புடையவரானார்கள். இப்படியிருந்தும், அவர்கள் மணம்புரிந்துகொள்ள வாய்க்கவில்லை. வர்த்திங்ட்டன் ஏழைவீட்டுப் பிள்ளை; அப்பொழுது

அவர் மாணுக்கராயிருந்தார். தாம் எண்ணியபடி மணஞ் செய்துகொள்ளக் கூடாமற் போய்விட்டதைப்பற்றி அவர் மனங்களைந் துருகினுர். இவ்வாருக, இருவருக்கும் உண்டான நட்பு நாளுக்குநாள் விருத்தியடைந்து மணஞ்செய்துகொண்டு சுகமாயிருக்கவேண்டியது போகத் துன்பத்திற் கிடமாயிற்று. ஆயினும், மார்த்தினேவின் தாய் தந்தைகள் சிறிதுநாள் சென்றபின் இதை நல்ல சம்பந்தமென்று ஒப்புக்கொண்டார்கள். அந்தக் கலியாணத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளுவதற்கு மூன்று வருஷமாயிற்று. இப்படி நெடுங்காலந் தாமதித்ததாயினும், அதனுல் இருவர்க்குமுள்ள அன்பு நாளுக்குநாள் விருத்தியாகித் திட்பமான நட்புண்டாயிற்று. மார்த்திஞே பருவமடைந்து பெரிய பெண்ணுக விருந்தகாலத்தில் ஆவலோடு கல்வி பயின்று வந்தவரென்றும், அதிகமாக வருந்திய கஷ்டப்பிராணியென்றும், காது செவிடாயிருந்ததை நினைக்க அவர் மனது சங்கடப்பட்டதென்றும், தமக்கு நடக்கப்போகிறதாயிருந்த விவாகத்தைப்பற்றிச் சந்தோஷமும், ஆனுல் அது எப்போ நடக்கப்போகிறதோவென்ற விசாரமுமாயிருந்தனரென்றும் அவர் எழுதிய புத்தகங்களிலே எங்குங் குறிப்பாகக் காணலாம்.

மார்த்திஞே தமக்கு இருபது வயதானபோது புத்தகங்களை எழுத ஆரம்பித்தார். தெய்வபக்தி இன்னதென்று விளக்கி எழுதிய பெண்களின் பெருமையைப்பற்றி ஒரு பிரபந்தத்தை எழுதினுர். அவர் முதலிலே எழுதிய புத்தகங்களைப் படிப்பதற்கு இன்பமாயிருக்கும். அவற்றைப் படிப்பதனுல் அவர் பின்னிட்டு எழுதிய புத்தகங்களின் கருத்தையெல்லாம் நன்ருயறிந்துகொள்ளலாம்:—"தெய்வபக்தியுண்டாகும் விதத்தைப்பற்றி நான் எழுதியவை அனைத்தும் சிறப்புடையவைகளானதற்குக் காரணம் என்னவெனில், "இதற்குமுன்னே அங்கிலேயபாஷையில் பெண்கள் இவ் விஷயத்தைப்

பற்றி நன்றாய் எழுதிவைத்திருந்த புதைபொருள்தான்; இந்த இரகசியம் மற்றவர்களுக்குத் தெரியாமலிருப்பினுமிருக்கலாம். பெண்களின் மனது இயல்பாகவே இளகியதாகையாலும், நல்லதைக் கண்டால் அதில் பற்றுண்டாய்க் கொண்டாட்ட முண்டாகு மியல்புடையதாகையாலும் இப்படி யிருக்கலாம். மத விஷயத்திலும் சன்மார்க்கத்திலும் இவ்வாறு பெண்களுக்கு அதிக ஆசையுண்டாவதைக் கண்டு எனக்குச் சந்தோஷ முண்டாகிறது" என்று எழுதியிருக்கிறார். பெண்கள் புத்தகங்களை எழுதி அவற்றின் மூலமாக மற்றவர்களுக்குப் போதிக்கக் கூடுமென்பதை அவர் முதலிலே கண்டார். தெய்விகம் இத்தன்மையதான தென்பதைப்பற்றி அவர் எழுதியிருப்பது அதை விடச்சிறந்ததே. மதங்களின் கோட்பாடுகளைப் பற்றியும் அவர் வாதிக்கிறதில்லை. சிறிதுவேளைகளில் நீதிகள் மதக் கோட்பாடுகளோடு பொருந்தாமலிருப்பதும் உண்டாகையால், அவற்றை அங்கீகரிப்பது கூடாதென்று யாரென்ன விரோதஞ் செய்தாலும் அவர் கேட்பதில்லை. பெண்களின் பெருமையைப்பற்றி அவரெழுதியது முக்கியமானது; அது உண்மையென்று அதை நிலைநிறுத்தற்பொருட்டு அவர் நேராகவும் மற்றவர்கள் மூலமாகவும் செய்தமுயற்சி கொஞ்சமல்ல. பெண்கள் முக்கியமான எப்படிப்பட்ட விஷயங்களையும் ஆராய்ந்தறிய வல்லவர்களென்றும், குற்றமற்று வாழ்ந்திருக்கக் கூடுமென்றும் அவர் நன்றாய் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

அவருக்கு இருபத்துநாலாவது வயதில் இரண்டுவிதமான பெருந்துன்பங்கள் நேர்ந்தன. அதற்கு முன்னெல்லாம் நன்றாய் வர்த்தகஞ்செய்து, நல்ல ஊதியம் பெற்றுவந்த அவருடைய தந்தைக்கு நஷ்டம் நேர்ந்து அதனோடு ஒருவாறு நோயுமுண்டாகி, அதனால் அவர் அதுவே விசாரமாக மரணமடைந்தார். அவர் அவ்வாறு இறந்துபோகுங்காலத்தில் மார்த்திநோவால் செய்யப்பட்ட உபந்நியாசம், ஸ்தோத்திரம், கீர்த்தி

இவை அடங்கிய புத்தகத்தைப் படித்து அவருக்கு அதிகமான ஆறுதலுண்டாயிற்று.

மற்றொரு பெருந்துன்ப மென்னவென்றால், உயிருக்குயிரா யிருந்த அவருடைய பர்த்தாவாகிய வர்த்திங்டன் என்பவர் நோய்கொண்டு இறந்துபோய்விட்டார். வர்த்திங்டன் எந்த நாளிலும் தேகவலிமை இல்லாதவராகவே இருந்தார். அவர் குருபீடத்திற்குரிய காரியத்தில் அமர்ந்தபின் எப்பொழுதும் அதுவே நினைவாக வேலைபார்த்துவந்தார். அவருக்கு அந்த வேலையைச் செய்வதும் அதிக வருத்தமாயிற்று. இருந்தாற் போலிருந்து மூளையைப்பற்றிய சுரம் வந்து மயக்கமுண்டா யிற்று. இவ்வாறு உண்டான நோயைக் கண்டு அவர், அதற்கு மருந்து வேண்டாமென்றும், தம் காதலியாகிய மார்த்தினோ தம்மிடம் வந்திருந்தால் அந்நோய் நீங்கிவிடுமென்றுஞ் சொன்னார். அதன்படியே அவர் மார்த்தினோவின் தாயாருக்குக் கடிதமொன்றெழுதி, தன்னை வந்து பார்த்துவிட்டுப் போகும்படி தன் மனையாளையனுப்ப வேண்டிக்கொண்டார். அவரைப் போலவே மார்த்தினோவுக்குத் தமது நாயகனைப் பார்க்க வேண்டுமென்று அதிக ஆசை. ஆனாலும் அப்படிப் போய் பார்த்துவிட்டு வருவது அவர் தாயாருக்கு சம்மதமில்லை. அப்படியுண்டான ஆபத்துக்காலத்திலே தாம் தம் கணவனண்டை யிருக்கக்கூடாமற்போனதைப்பற்றி மார்த்தினோ மனம்வருந்தினார்; ஆயினும், தமது தாயின் மனங்கோண நடப்பது கூடாதென்றெண்ணி அவளிட்ட கட்டளையை மீறி நடவாமலிருந்தார். தமது கண்ணுயிருந்த காதலனைக் காணதிருக்கும்படி யாயிற்றேயென்று அவர் நினைத்துத் துக்கித்தார். இவ்வாறு அவர் துக்கித்துக்கொண்டிருக்கையில், வர்த்திங்டன் இறந்து போனார். அன்றுமுதல் அவர் அதுவே விசாரமாக ஆயுள்நாளளவும் கைம்பெண்ணாகவே யிருந்தார். அவர் ஆயுள் காலமெல்லாம் எப்பொழுதும் சோம்பலின்றி உழைத்தார்.

அவருக்கு நல்ல ஞாபகசக்தி யிருந்ததுமன்றி, புத்தியும் மிகக் கூர்மையாயிருந்தது. அவ்வளவு பாலியத்திலே ஷகம் பெண்ணுகாமலிருப்பாரேயாயின் அவர் இன்னும் எவ்வள வோ அன்புடையவராயிருப்பார்.

மேலும் அவர் இயல்பாகவே பெருந்தன்மையுடையவர். வர்த்திங்ட்டன் இறந்துபோன மறுவருஷம் தாம் அதிகமாக வியாதியினால் வருத்தப்பட்டதாகவும் அவர் எழுதினார். அவர் எதைச்செய்தாலும் "செய்வன திருந்தச் செய்" என்றபடி நன்ருகச் செய்கிற வழக்கமுடையவராதலால், இடையில் சோர்வு அடைகிறதில்லை; செய்வதில் குற்றமொன்று மிராது. அவரிடம் 11 வருஷகாலம் கூடவேயிருந்து வேலைசெய்து வந்த வேலைக்காரி யொருத்தி "நான் அவளை முதலிலே பார்த்த காலத்தில் அவர் நாற்காலியில் சாய்ந்துகொண்டிருந்தார்; அப் பொழுது அவர் கைகளிரண்டையும் தொங்கவிட்டு ஒன்றி லும் நினைவில்லாமல் நோயினால் வருந்திக்கொண்டு இருந்தார். அப்படியிருந்ததனால் அவருக்கு ஏதோ பெரிய நோயிருந்த தென்றெண்ணினேன்" என்று சொன்னாள். அவர் முதலில் புத்தகங்களை எழுதியகாலத்தில் அதனால் வருமானம் கிடைக்க வில்லை. அப்படியிருந்தும் அவர் சோர்வடையாமல் எழு திக்கொண்டே வந்தார். தாம் எழுதும் புத்தகங்களால் நன்மை எப்படியும் கிடைக்குமென்கிற நம்பிக்கை அவருக்குப் பூர்ண மாக வுண்டாதலால், எடுத்த காரியத்தை விட்டுவிடவில்லை; அவர் பெருமை உடனே வெளிப்படாமல் வரவர வெளிப் பட்டது. இவ்வுலகத்திலே பெரும் புகழடைந்தவர்களெல் லோரும் இப்படியேதான். கடைசியில் அவர் பிரசித்தி எங் கும் பரவத் தொடங்கியது; கல்வியில் அவர் நல்ல தேர்ச்சி யுடையவரானார். சிறுமியாயிருந்தகாலத்தில் அவருக்கு இத் தனை சாமர்த்தியம் உண்டென்று அவர் தாய் அறிந்துகொள்ள வில்லை. அவளைப்பற்றி அவர் தாய், என் மக்களைப்பற்றி

எனக்கு விசாரமில்லை; மார்த்தினோ செவிடியாதலால் அவள் எப்படிச் சுகமாக வாழ்ந்திருப்பாளோ வென்பதை நினைக்க விசனமா யிருக்கிறதென்று சொல்லுவதுண்டு. லண்டன் நகரத்தில் வருஷமொன்றுக்கு 2000 பவுன் சம்பளமுள்ள வேலையொன்று மார்த்தினோவுக்குக் கிடைக்கிறகாலத்தில், அவளை விவாகஞ் செய்துகொள்வதற்கிருந்த வர்த்திங்கட்டனும் அவரும் சேர்ந்திருந்ததை அவர் தாயார் கண்டு தமது மகளை யழைத்து அப்பொழுதே அந்த விடத்தைவிட்டு வீட்டுக்குப் போகவேண்டுமென்று கட்டளையிட, அவர் அதை மீறாமல் தாயார் சொன்னபடியே செய்தார்.

அந்தக்காலத்தில், ரோமன் மார்க்கம், யூதமார்க்கம், மகம்மதுமார்க்கம் ஆகிய இந்த மதங்களைச் சேர்ந்தவர்கள் ஒவ்வொருவரும் அவற்றைவிட்டுக் கிறிஸ்தவராகும்படியாக பிரபந்தங்களை யெழுதுகிறவர்களுக்குத் தனித்தனியே மூன்று வெகுமதிகள் கொடுக்கப்படுமென்று பிரசித்தஞ் செய்யப்பட்டது. அதுகேட்டு மார்த்தினோ மூன்று பிரபந்தங்களை யெழுதி, தனித்தனியே வெவ்வேறு மனிதரைக்கொண்டு மூன்று பிரதிகள் எழுதச்சொல்லி, வெவ்வேறான இடங்களிலேயிருந்து தபாலில் அனுப்பும்படி செய்தார். அந்த மூன்றிலும் அவரே வெகுமதி பெற்றார். 1831-ம் ஞு தனநிர்வாகநூலை எல்லோர்க்கும் பயன்படும்படி கருத்துகளைக் கதாரூபமாக எழுதி யாவருக்கும் விளங்கச் செய்தார். அவர் எழுதியகாலம் அதற்கேற்றது: அப்பொழுதுதான் மகாஜன சபையார் நூதனமாகக் கற்பித்த சீர்திருத்தச் சட்டத்தைப் பிரபுக்கள் சபையார் இணங்காமல் வேண்டாமென்று தள்ளிவிட்டார்கள். ஜனங்களுக்கு வேண்டிய விஷயங்களையெல்லாம் சாஸ்திர முறைபாக நன்றாய் எடுத்துக் காட்டுவதற்கு அது ஏற்றகாலம். அவர் கதைகளை நன்றாக எழுதத் தொடங்கினார்; அவரெழுதியவற்றை யெல்லாம் பிரசுரப்படுத்துவதற் கேற்றவர்

ஒருவர் அகப்படுவது சற்றே வருத்தமாயிற்று. இதற்கென்றே அவர் தாமே லண்டன் நகரத்துக்குச் சென்றார். மூன்று வார மட்டும் அவர் தெருத்தெருவாய் அலைந்து, மழையிலும் ஈரத்தி லும் நின்று சங்கடப்பட்டார்; அவரென்ன முயன்றும் பயன் படவில்லை. இரவெல்லாம் அதிகமாக முயன்றுஎழுதிக்கொண் டிருந்தார். கடைசியில் ஒருவர் அவற்றையெல்லாம் பிரசுரஞ் செய்ய உடன்பட்டார்; அதில் மார்த்திநோவுக்கு அதிகலாபம் கிடைக்க வில்லையாயினும், அத்தனைகாலமாக மறைந்துகிடந்த கையெழுத்துப் பிரதிகள் அச்சிடப்பட்டு அவர் பெருமை வெ ளிக்கு வந்தது. அச்சிட்ட பத்து நாளைக்குள்ளே 1500 பிரதி கள் விலைப்பட்டன; ஆதலினால் அதை அச்சிட்டவர் மீண்டும் 5000 பிரதிகளை உடனே அச்சிடவேண்டியதாயிற்று. பின் னும் எல்லோரும் அவர் எழுதியதைக் கொண்டாடத் தலைப் பட்டார்கள். அவர் பார்வைக்கு வந்த கடிதங்களுக்கும், சிறு புத்தகங்களுக்கும், மாத சஞ்சிகை பத்திரிகைகளுக்கும் அள வில்லை. லார்ட் ப்ரூகாம் பிரபுவானவர் அவரால் பல புத் தங்கள் பிரசுரஞ் செய்யப்பட்டதைக் கண்டு ஆச்சரியப்பட்டு, அப்படிப் புத்தகங்களை விசேஷமாக எழுதிப் பிரசுரப்படுத்தி எங்குங் கல்வியைப் பரவச்செய்வதில் புருஷர்களுக்குள்ளு மொருவருமில்லையென்று சொல்லியிருக்கிறார். இத்தனையி ருந்தும் மார்த்திநோவுக்குக் காதுகேளாது. அது முதல் அவர் லண்டன் நகரத்திற்கு வந்து வசிக்கத் தலைப்பட்டார். அங்கே அவர் தாயாரும் அவரோடிருந்தார். அது முதற்கொண்டு அவருடைய பாண்டித்தியம் எங்கும் வெளிப்பட்டு எல்லோ ரும் அவளைக் கொண்டாட ஆரம்பித்தார்கள். வித்துவான் களும், பட்டம் பெற்றவர்களும் மகாஜன சபையார்களும் அவ ளைக் கண்டு சம்பாஷணை செய்யத் தொடங்கினார்கள்.

அவர் லண்டன் நகரத்தில் வசித்த இரண்டுவருஷ காலத் திற்குள்ளே 34 புத்தகங்களை யெழுதினார். அவ்வாறு எழுதி

அச்சிடப்பட்ட புத்தகங்கள் ஒவ்வொன்றிலும் நூற்றிருபது பக்கத்துக்குக் குறைவில்லை. அவர் காலையில் ஏழுமணிக்கு எழுந்திருப்பார்; தாமே காப்பிக்கொட்டைக் கஷாயம் செய்து குடிப்பார். காலைப்போஜனமானவுடன் செய்காரியத்தைத் தொடங்கி மத்தியான்னம் ஒருமணிவரையிலும் வேலை செய்வார். பின்பு இரண்டுமணிமுதல் நாலுமணிவரையிலும் தம்மைக் காணவந்தவர்களுடன் வார்த்தை சொல்லுவார். அதன் பின்பு உலாவிவிட்டுச் சற்றுநேரமளவும் வர்த்தமான பத்திரிகைகளைப் பார்த்துக்கொண்டிருந்து அதற்குப் பிறகு மாலைவேளைப் போஜனஞ் செய்தற்பொருட்டு வேறு ஆடை உடுத்துக்கொள்ளுவார். அவர் பெரும்பாலும் பிறர் வீட்டிலே இராத்திரி விருந்துக்குப்போவது வழக்கம். அந்நேரத்திலும் யாராவது இரண்டொருவர் வந்து வார்த்தை சொல்லிக்கொண்டிருப்பார்கள். அவ்வளவோடு அன்றைப்பொழுது கழிந்துவிடுமென்று அவரைப்பற்றி எழுதப்பட்டிருக்கிறது.

தேகத்திலே நல்ல பலமில்லாத ஒரு பெருமாட்டி இத்தனை அருமையான காரியங்கள் செய்ததைக் காண யாருக்கும் வியப்பாகவே தோன்றும். வெறுங் கதைகளைமட்டுஞ் சொல்லுகிறதென்றால் வருத்தமாக இருக்கும்: அவர் சொல்லுங் கதைகள் ஒவ்வொன்றிலும் மனிதர்களுடைய மனத்தோற்றமெல்லாம் நன்றாய் விளக்கிக் காட்டப்பட்டிருக்கும்; இராஜாங்கத்திலும், மானிட சமுதாயங்களிலும் வழங்கிவருகிற நடவடிக்கைகளெல்லாம் அவற்றில் ஏற்றவண்ணமாக அமைத்துச் சொல்லப்பட்டிருக்கும். அவர் எந்தக்கதையை எழுதத் தொடங்கினாலும், அந்தக் கதையினாலுண்டாகும் பயனை முன்பே அறிந்து எந்தெந்த விஷயங்களை எப்படியெப்படி சொல்லவேண்டுமோ அப்படியே சமயோசிதமாகச் சொல்லுவார். ஆதலினால் அவர் எழுதிய கதைகளெல்லாம் உபயோகமற்ற வீண் கதைகளாய்ப் பொழுது போக்குவதற்

கேற்றவைகளாக மட்டுமிராமல், ராஜ்யதந்திரமுறை முதலிய நல்லயுக்திகள் அடங்கிய சிறந்த கதைகளாகவேயிருக்கும். அன்றியும் அவற்றில் சிலருடைய குணகுணங்களும் மறை பொருளாகச் சொல்லப்பட்டிருக்கும். "தெய்வநூல் விளக்கம்" என்னும் புத்தகத்தைப் பிரசுரஞ் செய்தபின்பு அவர் வுட அமெரிக்காவுக்குச் சென்று இரண்டு வருஷகாலமளவும் அங் குள்ள இடங்களைச் சுற்றிப்பார்த்தார். "யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே" என்றவண்ணமாய் அவர் அவ்விடம் போவதற்கு முன்பே அவர் கீர்த்தி அங்கெங் கும் பரந்திருந்தமையால், தங்கள் முன்னோருடைய ஜன்ம பூமியாகிய இங்கிலாந்து தீவிலிருந்துவரும் பரோபகார சிந் தையுள்ள மகானுபாவர்களை ஆதரிப்பதற்குச் சித்தமாயிருந்த அந்தேசத்தார் ஹாரியட் மார்த்தினோவை அன்புடன் உபசரித் தனர். அவர் அமெரிக்கா தேசத்தைப்பற்றிப் புத்தகமொன்றை எழுதினார். அதனால் அவருக்கு 9000 பொன் கிடைத்தது. 1838-ம் வூத்தில் அவர் "உபசார முறைமை" என்னும் புத் தகத்தை யெழுதினார். பிறகு "பற்பல சேவகவிதி"யென்று துவக்கிப் புத்தகமஞ்சரியாகப் பல நூல்கள் எழுத ஆரம்பித் தார். அவர் எழுதியிருக்கும் "வீட்டில் குற்றேவல் செய்ப வள்," "வீட்டின் பணிவிடைக்காரி," "துரைசானி வேலைக் காரி," "தையற்காரி" என்னும் புத்தகங்கள் அந்த மஞ்ச ரியைச் சேர்ந்தவை. அவருக்கு வீட்டுவேலை யனைத்தையும் நன்றாய்ப் பார்க்கத் தெரியும். மற்ற விஷயங்களிற்போலவே இதிலும் அவர் மனச்சாக்ஷிக்கு விரோதமாக ஒன்றுஞ் செய்த தில்லை. இல்வாழ்க்கைக்கு மிகுந்த புத்தி நுட்பமும், நல் லொழுக்கமும் இன்றி யமையாதவை. இவையனைத்தும் அவரிடம் பொருந்தியிருந்ததனால், மனை மாட்சிமையை யும் தையல்வேலையையும்பற்றி அவர் சொல்லியிருக்கும் புத் திமதிகளின் வழிகள் பிழைபாடின்றி யிருக்கின்றன. ஹாரி

பட் பெருமாட்டியார் அன்னியதேச வர்த்தமானங்களை நன்ருயறிந்து ராஜ்யதந்திர முறையைப்போன்ற கடினமான விஷயங்களை நன்ருய்க் கிரகிக்கும் புத்திகூர்மையை யுடையவரா யிருந்ததுமன்றி, அவ்விதமான விஷயங்களை ஜனங்களுக்குச் சொல்லிக்கொடுக்கவும் வல்லவராயிருந்தார். மனதிற்கு விருப்பமான விஷயங்களிலே மாத்திரமன்றி வெறுப்பான விஷயங்களிலும் புத்திமான்கள் உட்புகுந்து மனதைச் செலுத்துவார்கள். எப்பொழுதும் அவர் தம் வீட்டுக்காரிய மெல்லாவற்றையும் தாமே செய்வது வழக்கம். வீட்டிலிருக்கும் பொழுது அவர் தாமே விளக்கைச் சுத்திசெய்து அதில் எண்ணெய் வார்த்துத் திரியிடுவார்; தாமே தம் புத்தகங்களை அழுக்குப்போகத் துடைப்பார்.

அப்பொழுது மார்த்திஞேவின் உடம்பு நோய்கொண்டு ஆரோக்கியம் குன்ற ஆரம்பித்தது. புத்தகம் எழுதுவதற்காக இரவும் பகலும் உழைத்ததாலும், வீட்டு விசாரத்தாலும் அவருடம்பு இளைத்தது. ஐந்துவருஷ காலமளவும் இடைவிடாமல் எப்பொழுதுமிருந்த நோயால் அவர் பட்ட கஷ்டம் இவ்வளவவ்வள வல்ல. அப்பொழுது அவர் வெளியேபோகச் சக்தியற்றவராய்ப் படுக்கை யறைக்கும், படிக்குமறைக்கும் நடுவிலேயே அலைந்துகொண்டிருந்தார்.

இவ்வாறு அவஸ்தைப்படுகையிலும் அவர், நோயில்லாமல் சௌக்கியமா யிருக்கையில் அதிக சுறுசுறுப்பான ஒருவன் எத்தனை புத்தகங்களை எழுதக்கூடுமோ, அதற்குச் சிறிதுங் குறைவில்லாமலே எழுதிவந்தார். அதில் வர்த்தகர்களுடைய காரியங் கைகூடுவதற்காக அவர் எழுதின "தற்கால மனித நிலைமை" என்னும் கதை அழகாயும், கேட்பவரை மனமுருகச் செய்வதாயுமிருப்பதுமன்றி, அதி கம்பீரமாயு மிருக்கிறதென்று ஜப்ரி பிரபு எழுதியிருக்கிருர். அதைப்பற்றியே

ப்ளாரென்ஸ் நைத்திங்கேல் பெருமாட்டியார் "இதனினுஞ் சிறந்த கதை வேறொன்றுமில்லை யென்பதில் சிறிதேனும் சமுசயம்வேண்டாம்" என்று சொல்லியிருக்கிறார். அவர் நோயால் வருந்திக்கொண்டிருக்கையில் துரைத்தனத்தார் அவருக்கு வருஷமொன்றுக்கு ரூ. 2400 நன்கொடைச் சம்பளம் கொடுப்பதாகச் சொன்னார்கள். அவர் ஒரு காரணம்பற்றி அதைத் தமக்கு வேண்டாமென்று சொல்லிவிட்டார். துரைத்தனத்தார் ஏழைகளுக்கும் தனவான்களுக்கும் பேதமில்லாமல் வரிபோட்டுப் பணம் சேகரம்பண்ணுவதாலும், நன்கொடைச் சம்பளங் கொடுக்கும் அதிகாரம் தேச நன்மைக்காக ஏற்பட்ட பார்லிமெண்டார் வசத்தில் இல்லாததாலும், தமக்கு அது வேண்டாமென்றும், ஒருவேளை தமக்கு அதிகமான வறுமை வந்துவிட்டால் யாசகஞ்செய்து ஜீவனஞ் செய்வதேயொழிய அவ்வாறுசெய்கிறதில்லையென்றுஞ் சொல்லிவிட்டார். அவர் அப்பொழுது அதிக ஏழையாயிருந்ததால், பந்துக்களிடமிருந்து உபகாரம் பெற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. ஆயினும் இவ்வளவு ஏழையா யிருந்தகாலத்திலும் சித்திரவேலை முதலியவற்றைச் செய்து பணம் சம்பாதித்து தர்ம காரியங்களுக்காகப் பணங்கொடுத்துக்கொண்டிருந்தார்.

1841-ம் வருஷத்தில் "வீட்டிற் குடியேறுவோர்," "இராஜகுமாரனும் ஏழைக்குடியானவனும்," "ஆற்றைக் கடத்தல் முதலிய வீரச் செய்கைகள்," "லண்டன் நகரத்தில் சிறுவர்களுக்கான கதைகள்" என்கிற நான்கு புத்தகமெழுதினார். இந்தக் குழந்தைக் கதைகள் இனிய சொற்கள் நிறைந்தனவாயிருக்கின்றன. சென்னைச் சகல கலாசாலையிலிருந்து வருஷந் தோறும் பட்டம் பெறுகிறவர்களுள் எவரேனும் இக்கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து, இங்கிலாந்திலிருக்கும் குழந்தைகள் இவைகளைப் படித்து ஆனந்தப்படுவதுபோலவே, இத்

தேசத்துக் குழந்தைகளுக்கும் ஆனந்தத்தை யளிப்பார்களே யாயின் நலமாயிருக்கும்.

1843-ம் வருத்தில் அவருடைய தரித்திரத்தையும், துரைத தனத்தார் கொடுக்கவந்த சம்பளத்தை அவர் வேண்டாமென்று சொல்லிவிட்டதையும் கேட்ட அவருடைய நண்பரில் சிலர், அவர் ஜனங்களுக்குச் செய்த நன்மைக்காக அவருக்கு நன் கொடை கொடுக்கவேண்டுமென்று கருதி, அவரை யறிந்தவ ரிடஞ் சென்று பணம் சேகரஞ் செய்தார்கள். அவ்வாறாகக் கிடைத்த ரூபாய் 21,000-த்தையும் அவர் பேரால் ஓரிடத் தில் வட்டிக்குக் கொடுத்துவைத்தார்கள்; இன்னம் கொஞ்சம் பணம் செலவழித்து ஒரு தாம்பாளம் செய்து அவருக்குத் தந்தார்கள். அப்பொழுதுதான், கிரிமியா சண்டையில் காயம்பட்ட போர்வீரர்களுக்குச் செய்த உபகாரத்தாற் பிர சித்திபெறுவதற்கு முன்பே, நோயாளிகளை அன்புட னுதரித்து வந்த ப்ளாரென்ஸ் நைத்திங்கேல் பெருமாட்டியார் நோயால் வருந்தும் ஹாரியட் மார்த்தினோவை யாதரிக்க வந்தார். அவர்க ளிருவருக்கும் அப்பொழுதுண்டான பழக்கமானது பிற்கா லத்தில் அவர்களிருவரும் பொது நன்மைக்காக ஒன்றுசேர்ந்து முயற்சி செய்வதற் கேதுவாயிற்று.

அவரை நெடுநாளாய் வருத்திய வியாதி 1844-ம் வருத்தில் ஔஷதப்பிரயோகத்தால் லகுவாயிற்று. ஆனால் அந்த மருந்து வியாதியை உடனே ஒழிக்கவில்லை; சில மாதங்கள் சென்ற பின்புதான் குணப்படுத்தியது.

ஹாரியட் மார்த்தினோ நாற்பதாம் வயதில் தமக்குச் சொந்தமாக ஒரு வீடு சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினார். இங்கிலாந்திலிருக்கும் ஏரிகள் நிறைந்த பிர தேசங்களின் அழகைக்கண்டு அவர் அங்கேயே வாசஞ்செய்ய வேண்டுமென்று கருதினார். அவர் அவ்விடத்தில் இரண்டு

காணி நிலம் வாங்கி, அதில் கட்டடம் கட்டுவதற்காகச் சில பொருள்களை யீடுவைத்துத் தம்முடைய பணக்கார அத்தானிடமிருந்து கொஞ்சம் பணம் வாங்கினார்; தம்மனதுக்கு இசைந்தபடித் தாமே வீட்டின் மாதிரிப்படத்தை யெழுதிக் கொடுத்து, வீடுகட்டும்போதும் பக்கத்திலேயே யிருந்தார். மனம்கொண்டது மாளிகை யல்லவா. அவருடைய வீட்டுத் தோட்டம் அழகிய புஷ்பச்செடிகளால் நிறைந்திருந்தது.

அந்தப் புதுவீட்டுக்குக் குடிபோவதற்கு முன்னே ஹாரிபட் மார்த்தினோ தம் தோழர் சிலரோடு எட்டுமாதம் எகிப்திற்கும், பலஸ்தீனாவிற்கும் பிரயாணம் போனார். அந்தப் புதுவீட்டிற்கு வந்தபிறகு, அவர் தமது நாளைப் பின்வருமாறு கழித்துவந்தார்:—அதிகாலையில் சூரியோதயத்திற்கு முன்பே எழுந்திருந்து பதினைந்துமைல் நடந்துவிட்டு ஏழுமணிக்குள்ளே பகற்போஜனத்துக்கு வீடுவந்து சேருவார். பிறகு வீட்டுக்காரியங்களைப் பார்த்துவிட்டு எட்டுமணி முதல் இரண்டுமணி வரையில் மற்றொன்றையும் பாராமல் எழுத்து வேலையைச் செய்வார். பிறகு அதிதிகள் யாரேனும் வந்திருந்தால் அவர்களை யுபசரிப்பார். இறைத்த கிணறு ஊறும், இறையாத கிணறு நாறும் என்றறிந்தவர். குளிர்காலமாயிருந்தால் அந்த வேளையில் ஆட்டுரோமத்தைத் திரித்துக் கம்பளமாகப் பின்னுவார். அப்பொழுது அவர்மனம் வேறுவேறு விஷயங்களிலே இருந்ததனால், தாம் செய்வ தின்னதென்ற ஞாபகமில்லாமலே எத்தனையோ கஜம் நீளம் பின்னுவார். அவர் தம் வேலைக்காரர்களை நன்றாகப் பழக்கி அவர்களிடத்தில் பிரியமாக இருந்தார். அவர்களும் அருமையறிந்த அந்த உத்தமியிடத்தில் அனேக வருஷகாலமிருப்பார்கள். கல்லியாணம் பண்ணிக்கொள்ளவாயினும், அயல் வீட்டிற்குக் குடிபோகவாயினும் நேரிடும் காலத்திலேதான் அவளை விட்டுப் பிரிந்துபோவார்கள்.

சில வருஷங்கள்வரையிலும் குளிர்காலத்தில் தம் வீட்டிற்குப் பின்புறத்திலிருந்த பாடசாலையின் கூடத்தில் அவ்வூரிலுள்ள கூலி வேலைக்காரர்களுக்கும் வியாபாரிகளுக்கும் சில பிரசங்கங்கள் செய்தார். கண்டதைக் கற்றுக்கொண்டு கரையேறுங்கள் என்று அவர் இவ்வாறு செய்த உபந்நியாசங்களில் வெவ்வேறு விஷயங்களைப்பற்றி விவரித்துச் சொன்னார். அவற்றுள் சில வைத்தியத்தைப் பற்றியவை; சில அவர் பிரயாணம்போயிருந்த இடங்களைப் பற்றியவை; சில இங்கிலாந்தின் சரித்திரத்தைப் பற்றியவை; சில வட அமெரிக்காவைப் பற்றியவை; 1854-ம் ௵ நவம்பர் ௴த்தில் அவர் கடைசியாகச் செய்த பிரசங்கங்கள் கிரிமியா சண்டையையும், அச்சண்டையில் ருஷியா துரைத்தனத்தாரின் நடவடிக்கையையும் பற்றியவை. மார்த்திேனோவின் பிரசங்கங்களை நேரில் கேட்டுக்கொண்டிருந்த சில பெரியோர்கள் அவரைப் பற்றிப் பின்வருமாறு சொல்லுகிறார்கள். — "அவற்றின் பொருள் குழந்தைகளுக்கும் எளிதில் விளங்கும்; அவர் நடுவில் நிறுத்தாமல் பேசுவார்; அவை கேட்க மிகவும் இனிமையாயிருந்தன; எத்தனைதரம் கேட்டாலும் சலியாது." அவர் செய்த உபந்நியாசங்கள் ஒன்றேனும் வீண்போகவில்லை. அவர் அங்குள்ள வேலைக்காரர்களை வீடுகட்டுஞ் சங்கமொன்றை ஏற்படுத்தும்படி செய்து, ஒவ்வொருவரும் கொடுக்கும் வாடகைப் பணத்தைக்கொண்டு எளிதில் வீடுகட்டிக்கொள்ளலாமென்று அவர்களுக்கு வழி காண்பித்தார். அவர் அவர்களுக்காக ரூபாய் 7500 கடன்பட்டு, ஒரு நிலத்தை வாங்கி, அதைப் பல பாகங்களாக வகுத்து, அதில் நீரைவடிக்க வாய்க்கால் ஜலதாரை முதலியவற்றைக் கட்டி, அதற்கு வழிகளையும் செய்து கொடுத்தார். இன்றளவும் அங்கே அக்குடிசைகள் அவர் தமது எளிய அயலாருடைய நன்மைக்காக எடுத்துக் கொண்ட பிரயாசத்திற்கு அடையாளமாக நிற்கின்றன.

அவ்வூரிலுள்ள புத்திசாலிகளான சிறுவர்களைத் தம்மிடமிருந்த புத்தகங்களைப் படிக்கும்படி செய்தார்.

பிறகு அவர் புத்தக மெழுதுவதைத் தவிர்த்து, தம்முடைய் இரண்டு ஏகரா நிலத்தில் தாமே வேளாண்மைசெய்ய ஆரம்பித்தார். 'சினைத்தேடின் ஏனைத்தேடு' என்றபடி கிருஷி சாஸ்திரத்தையும், வேளாண்மையையும் நன்ருய்க் கற்கவேண்டுமென்ற ஆசையுள்ளவராய் அவர் இவ்வாறு செய்யப் புகுந்தார். அவர் ஆரம்பித்த வேலையை நன்ருகச் செய்தார். சில கனவான்கள் அவரை வேண்டிக்கொண்டதனுல் அவர் கிருஷியில் தமக்குள்ள அனுபவத்தை, "தேக சௌக்கியம், பயிர்த்தொழில், கைத்தொழில், எனது இரண்டு ஏகரா நிலம்." என்னும் பெயருள்ள சில புத்தகங்களாக எழுதியிருக்கிருர்.

அவர் புது வீட்டிற்கு வந்த பத்து வருஷங்களில் நோயின்று நீங்கிச் சௌக்கியமாயிருந்ததனுல் "கீழ்நாட்டில் உயிர் வாழ்க்கை," "இறந்தகாலமும், நிகழ்காலமும்" "குடித்தனப்பாங்கு," "அமெரிக்காவின் முப்பது வருஷத்துச் சரித்திரம்" என்னும் பல புத்தகங்களையும் எழுதினுர். அமெரிக்காவின் "முப்பது வருஷத்து சரித்திரம்" என்பது அத்தன்மையான புத்தகங்களுள் நிகரில்லாதது. அவர் எழுதியிருக்கும் பல புத்தகங்களில் இதுவே வெகுகாலமளவும் நிற்கத்தக்கதும், மிகச் சிறந்ததுமாகும். இதனுல் பிற்காலத்தோருக்கு அவருடைய புத்தி எவ்வளவு கூர்மையானதென்றும், அவருடைய குணங்கள் இத்தன்மையானவையென்றும் தெரியவருகிறது. "குடித்தன வாழ்க்கை" என்னும் பத்திரிகையில் சுகமாக ஜீவிக்கும் வழியைப் போதிக்கும் சில கதைகளை யெழுதினுர். கடல்மட்டத்திற்கு வெகுதூரம் கீழேயிருக்கும் கீழ்வானதேசங்களில் வசிப்பதனுல் விளையுந் தீமைகளையும் மற்ருெரு புத்தகத்தில் எடுத்துக் காட்டியிருக்கிருர்.

1852-ம் ஞூத்தில் "தினவர்த்தமானி" என்னும் பத்திரிகைக்குப் பற்பல விஷயங்கள் எழுதும்படியாக ஹாரியட் மார்த்தினோவைக் கேட்டுக்கொண்டார்கள். அவர் அதை ஒப்புக்கொண்டு தம் வாழ்நாள் முடிவதற்கு முன் ஆயிரத்து அறுநூற்று நாற்பத்திரண்டு விஷயங்களை எழுதினார். இதுவல்லாமலும் "கலாசோதனைப் பத்திரிகை" யிலும் அவர் எழுதின விஷயங்கள் அனேகமுண்டு.

1854-ம்ஞூத்தில் மறுபடியும் மார்த்தினோவின் தேகசௌக்கியம் கெட ஆரம்பித்தது. இரண்டு வருஷத்திற்கெல்லாம் லண்டன் நகரத்து வைத்தியர்களிடஞ் சென்று அது என்ன வியாதியென்று கேட்டார். அவர்கள் அதை நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்து அது இரத்தாசய வியாதியென்று கண்டு, அதற்கு யாதொரு சிகிச்சையு மில்லையென்றும் அவர் மேலுலகம் செல்லச் சித்தமாயிருக்கவேண்டுமென்றும் சொன்னார்கள். அடிக்கடி வலிப்புவந்து சொரணையில்லாமல் கிடப்பார்; இரவில் படுத்துக்கொண்டவுடனே வெகுநேரமளவும் மூச்சுத் தடுமாறித் தவிப்பார்; இப்படி அவஸ்தைப்படுவதைக் காட்டிலும் பிராணன் போய்விடுவதே நலமென்று எண்ணினார். நோயாளிக்குத் தெரியும் நோயின் வருத்தம். ஆனால் மரணம் அவர் கஷ்டத்தை நீக்க வரவில்லை. இப்படியே வந்த கஷ்டமனைத்தையும் பொறுத்துக்கொண்டு இருபத்தொரு வருஷகாலம் ஜீவித்திருந்தார். சிலநாள்கள் கழித்து மறுபடியும் அவர் தம்முடைய எழுத்துவேலையைச் செய்ய ஆரம்பித்தார். நோயால் அவஸ்தைப்படுகையிலும், "தினவர்த்தமானி"க்குப் பிரதிவாரமும் விஷயங்களை யெழுதிக் கொண்டிருந்தார்.

1855-ம் ஞூத்தில் லண்டன் நகரத்திற்கு வந்தபிறகு அவர் வீட்டைவிட்டு அசையவில்லை. ஒவ்வொரு தினமும் அவர் பட்ட கஷ்டத்திற்கு அளவில்லை; சரியாக மூச்சுவிடச் சாத்தி

யப்படவில்லை; தலை கனத்தது; இரத்தவோட்டம் சரியாக இல்லாதிருந்ததனால் கண் மங்கியது; அடிக்கடி அவருக்கு மூர்ச்சை வந்துவிடும். அவருக்கு வந்த ஆபத்துக்கள் சாதாரணமானவையல்ல; பிராணனையே அபகரிக்கத்தக்கவை. இந்தச் சங்கடத்திலிருக்கையிலும் அவர் தம்வேலையைச் செய்ததுமன்றி, ஏழை அயலாருக்கும் உபகாரம் செய்தார். அவர் தமக்காகவென்று பிரியமாய் தம்முடைய நண்பர் அனுப்பிய மதுரமான பணியாரங்களை அவ்வேழைகளுக்குக் கொடாமல் தாம் உண்ணார். "நாடிய வரமெல்லாம் நல்கும் நாயகி" யாகையால் அவர்களும் தங்களுக்கு ஏதேனும் வேண்டியிருந்தால் அவரிடமே போய்க் கேட்பார்கள்.

1859-ம் வருஷத்தில் "இங்கிலாந்தும் அத்தேசத்துக்குப் போர்வீரர்களும்" என்னும் பெரும் புத்தக மொன்றை யெழுதினார். தமது நற்றோழராகிய ப்ளாரென்ஸ் நைத்திங்கேல் போர்வீரர்களின் க்ஷேமத்திற்காகச் செய்துவந்த வேலைக்கு உதவியாக அப்புத்தகத்தை யெழுதினார். தொண்ணூறு பெரிய உபந்நியாசங்களை யெழுதி, அவற்றைப் பிரசுரஞ்செய்வதற்காக அமெரிக்காவுக்கு அனுப்பினார். வெளியேபோகச் சக்தியில்லாமல் நோயால் வருந்திக்கொண்டு வீட்டிலேயே யிருந்தார். "நாடு எங்கும் வாழக் கேடு ஒன்றுமில்லை" என்னும் பழமொழிப்படி ஒரு பெண் உலகத்தில் நடந்த சங்கதிகளையெல்லாம் அறிந்து பொதுநன்மைக்காகப் பாடுபட்டது ஆச்ச்சரியம்.

1861-ம் வருஷத்தில் தேச சரித்திரங்களை யெழுத ஆரம்பித்தார். அவர் தாம் செய்த கம்பளங்களை விற்று அனேக தர்மகாரியங்களுக்குப் பணம் கொடுத்தார். உடம்பு குணப்படாமலிருந்த காலங்களில் அவர் எழுதின புத்தகங்களின் பெயர்களைமட்டும் எழுதுவதென்றாலும் எத்தனையோ பக்கங்கள் பிடிக்கும். அவருக்கு எழுபத்துநான்காம் வயது கிட்

டும்பொழுது அவர் தேகம் மிகவும் மெலிந்து சக்தியேயில்லாமற் போய்விட்டது. இந்தக் கடைசி நாட்களிலும் காணி சோம்பல் கோடி வருத்தமென்று எண்ணி அவர் சோம்பலைவிட்டுத் தொழிலையே நாடினார். அவர் விருத்தையாகையால் கை மரத்துப்போய்விட்டது; பார்வை மங்கிவிட்டது; களைப்பு சகிக்கக்கூடாமலிருந்தது; அப்படியிருக்கையிலும் அவர் தமது இரண்டு சினேகிதர்களுக்குக் கடிதமெழுதிக்கொண்டும், சித்திரவேலைகளைச் செய்துகொண்டு மிருந்தார். தம்முடைய நண்பர்களின் குழந்தைகளுக்குக் கட்டிறகம்பளிகளைச் செய்து கொடுத்தார். எப்பொழுதும் அவருக்குக் குழந்தைகளைக் கண்டாற் கொண்டாட்டம். தம்மைக் காணவந்த பெரியோர்களைப் பார்க்கக் கூடாமல் நோய்கொண்டிருக்கையிலும் அவர் ஒரு குழந்தை வந்தால் சிறிதுநேரமட்டுமாவது அதனுடன் கொஞ்சிக் குலாவுவார். அவரால் குழந்தைகளுக்கென்று எழுதப்பட்ட கடிதங்கள் மனோரஞ்சகமானவை. குழந்தைகளின் மனதையறிந்து நடப்பதில் அவர் அதிக சாமர்த்தியமுடையவர். அவ்வாறே அக்குழந்தைகளுக்கும் அவனைக் கண்டமாத்திரத்திலே சந்தோஷம் உண்டாகும். "குழந்தையும் தெய்வமும் கொண்டாடின இடத்திலே" யல்லவா.

மார்த்தினோ தமது வாழ்நாளின் கடைப்பாகத்தையும்பொறுமை, அன்பு, மகிழ்ச்சி இவற்றுடனே கழித்தார். 1876-ம் ஹு ஜூன்மீ 27உ அன்றையதினம், அவருக்கு எப்பொழுதும் களிப்பையளித்த மேனாட்டுமலைகள் அஸ்தமிக்கும் சூரியனுடைய கிரணங்களால் சோபித்திருக்குந்தருணத்தில், ஹாரியட் மார்த்தினோ கஷ்டத்தினின்று விடுபட்டுப் பரலோகஞ் சென்றார். அவருடைய கடைசிநாட்களும், அவர் மரணமும், வந்த துன்பங்களையெல்லாம் அவர் பொறுத்ததும், பின் எழுதியிருக்கும் வேதவாக்கியத்திற்கு நல்ல திருஷ்டாந்தமாகும். "குழந்தையைப்போல நிஷ்கபடமாயிருந்து, ஒரு

பொழுதும் தப்புவழியில் செல்லாமல் நேர்பட நடந்தால் தான் முடிவிலே சுகமுண்டாகும்."

இக்காலத்தில் பொதுநன்மைக்காகப் பாடுபடும் ஸ்திரீ ரத்தினங்களுக்கு மார்த்திேைவ வழிகாட்டியவர். அங்கிலேய துரைசானிகளுக்கு அவர் மிகச்சிறந்த வழிகளைக் கற்பித்துக் கொடுத்ததற்காக அவர்கள் "நன்றி மறவேல்" என்பதை நினைத்து அவருக்கு நன்றிபாராட்டவேண்டும். தங்கள் கொள்கைகள் வேருயிருப்பினும் மகான்களனைவரும் மெச்சும்படியாக அவர் நடந்தார். அவர் செய்திருக்கும் மேன்மையான காரியங்களை யோசித்துப் பார்க்குமளவில், பெண்களும் ராஜாங்கவிஷயங்களை ஊன்றிப் பார்க்கும் திறனுடையவராயிருக்கலாமென்றும், ஆண்பிள்ளைக்கும் புத்திசொல்லக்கூடுமென்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெளிவாய்த் தெரியவருகிறது. அவர் தம்முடைய சுயநன்மையைச் சிறிதுமெண்ணுமல் பொதுநன்மைக்கென்றே பாடுபட்டு "குளவி புழுவைத் தன் நிறம் ஆக்குவதுபோல்" தம்முடன் பழகினவர்களையும் அவ்வாறே செய்யப் பழக்கிவிட்டார். அவருடன் பழகினவர்கள் அவரிடத்தில் "காந்தமும் ஊசியும் போல்" அதிக நேசமாயிருந்தார்கள். அவர் தம் வேலைக்காரர்களைக் கண்ணுக்குக் கண்ணுகப் பார்த்து வந்தார். அவர் சினேக தர்மத்தை நன்ருய் அறிந்தவர்; குழந்தைகளிடத்தில் மிகுந்த அன்புடையவர்; பிச்சைக்கென்று தம் வீட்டிற்கு வரும் பேதைகளுக்கு உபகாரஞ் செய்யாமலிரார்; "அடுத்துவந்தவர்க்கு ஆதரவு சொல்லுவோன் குரு;" அவர் மாசிலா மாணிக்கம்.

இத்தனை பெருமையுடையராகி மார்த்திேை பெருமாட்டியார் செய்ததையெல்லாங் கேட்டால் இந்துதேசத்திலுள்ள ஸ்திரீகளுக்கு வியப்புண்டாகாதிராது. மார்த்திேைவப் போல இளமைப்பருவ முதற்கொண்டே ஆயுள்காலமெல்

லாம் கைம்பெண்களாயிருப்பவர்கள் ஆயிரக்கணக்காக இருந்கிறார்கள். இந்தியாவிலுள்ள விதந்துக்களில் எல்லோருமே முயலாவிட்டாலும், அவர்களில் பெரும்பான்மையோராவது மார்த்திஞேவைப்போல முயன்று பெண்களின் நன்மைக்கென்று நன்றாகக் கல்வியைப் பயின்று, நீதியை விருத்தி பண்ணி, நன்னடக்கையை ஓங்கச்செய்து, எங்கும் சுத்தமாயிருக்கச்செய்து, கல்வி யறிவை யுண்டாக்கி, நாட்டுக்கு நன்மை செய்யவேண்டும். இப்பொழுதிருப்பதுபோலல்லாமல் அறிவு விருத்திக்கேற்றவைகளும், தெய்வபக்தியுண்டாகத் தக்கவைகளுமான பல நல்ல கதைகளை ஒழிந்தநேரங்களிலே சொல்லும்படி செய்யவேண்டும். பெண்களில் பெரும்பான்மையோர வீட்டைவிட்டு வெளியே போகிறதுமில்லை; மற்றவர்களோடு தாராளமாகக் கலந்து வார்த்தை சொல்லுகிறதுமில்லை; பகல் முழுதும் தனியேயிருந்து காலத்தைக் கழிக்கிறார்கள். இப்படிப்பட்ட ஸ்திரிகள் மார்த்திஞேவின் சரித்திரத்தைப் படிப்பார்களேயானால் அவர்களுடைய புத்தி எவ்வளவோ திருந்திப் பெருமை பெறும். இச்சரித்திரம் படிப்பதனால் பெண்கள் வெளிப்படாமல் வீட்டிலிருந்துகொண்டே வாஞேருக்கு ஏற்ற கரும நிஷ்டை தவறாமல் எத்தனையோ பல நன்மைகளைச் செய்யலாம். மிகப்பெரிய நாடான இந்தியாவிலுள்ள பெண்களெல்லாரும் அந்தகாரத்தை விட்டு நீங்கி முன்னுக்கு வந்து நலம்பெறவேண்டுமாஞல், இந்தியாவிலுள்ள ஸ்திரீகள் "வித்தை விரும்பு" என்று ஔவையார் சொன்ன முதுமொழியை நினைத்து நன்றாகக் கல்விபயின்று, உயர்ந்தோர் தாழ்ந்தோரென்று பேதம்பாராட்டாமல் எல்லோரும் ஒன்றுசேர்ந்து, மார்த்திஞே, நைத்திங்கேல் என்னும் பெருமாட்டிகளைப் போலவே நன்மையானவற்றைக் கடைப்பிடித்து அவற்றிலேயே ஓயாமல் மனதைச் செலுத்திப் பாடுபடவேண்டும்.

# HARRIET BEECHER STOW.

## 1811–1896.

## ஹாரியட் பீச்சர் ஸ்டோ.



நாம் இப்பொழுது சொல்லப்போகிற பெருமாட்டியின் சரித்திரம் இதுவரையில் சொன்ன நால்வருடைய சரித்திரம் போலிருப்பதல்ல; அவற்றிற்குச் சற்று வேறுவிதமானது. இவளது குலம் நடுத்தரமானது. மிகவும் ஏழைக்குடி. யோசித்துப் பார்த்தால் இவள் செல்வமும் செல்வாக்கும் பெற்று வாழ்ந்தது வருந்தமாயிருக்குமென்றே முதலில் தோன்றியது. ஆயினும் இவள் உலகத்தில் மிகவும் மேன்மை பெற்றவளானாள்; முன்சொன்ன நான்குபேர்களைப் பார்க்கிலும் இவள் அதிகமாகச் சிறப்புப்பெற்றாளென்றே பலர் சொல்லுவார்கள். எப்படியென்பீர்களோ? அது பின்னால் விளங்கும். ஒருவருக்குச் சிறப்பு வருவதெல்லாம் அவர் தமது நன்மைகளைப் பெரிதாகப் பாராட்டாமல், இப்பூமியில் தாம் பிறந்தது பரோபகாரம் செய்வதற்காகவேயென்று கருதி நடப்பதனாலேதான்.

இக்கதைக்கு நாயகியான பெருமாட்டி பிறந்து வாழ்ந்த விடம் இந்த இந்துதேசமன்று, ஐரோப்பாவுமன்று, இவ்விடத்திற்கு வெகு தூரத்திலுள்ள அமெரிக்காகண்டமாம். தேச சரித்திரங்களாகட்டும், மனுஷ்ய சரித்திரமாகட்டும், யாத்திரைகளாகட்டும் எதைப் படித்தாலும் எதிரில் பூகோளப் படத்தை வைத்துக்கொண்டுதான் படிக்கவேண்டும். நாம் சரித்திரத்தில் படிக்கும் தேசங்களாகட்டும் மனிதர்களாகட்

டும் இருக்குமிட மின்னதென்று நன்றாய்ப் பார்த்துத் தெரிந்து கொண்டு படித்தால், அதைப்போல் ஆனந்தமுண்டாக்குவது வேறொன்றுமில்லை. ஆகையால் இதைப் படிப்பவர்களும் அப்படியே படிக்கக்கடவர்கள். இப்பொழுது அமெரிக்கா கண்டத்துப் படத்தைத் திருப்பிப் பாருங்கள். அதில் மிகப் பெரிய தேசமொன்று இருக்கின்றதல்லவா? அதற்கு ஐக்கிய மாகாணங்களென்று பெயர். அந்த மாகாணம் வடபாதி, தென பாதியென்று இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

அம்மாகாணத்தில் கன்னெக்ட்டிகட்டு என்னும் நாட்டில் லிச்சுபீல்டு என்னும் ஊரில் 1811-ம் வருஷ ஜூன் மீ 14ல ஹாரி யட் பீச்சர் என்பவள் பிறந்தாள். அவளுடைய தந்தை கிறிஸ்துமதப் பிரசங்கம் செய்கிற ஒரு பண்டிதர். அவர் அந் தப் பக்கங்களிலெங்கும் பிரசித்திபெற்றவர். அவளுக்குச் சகோதரர்களும் சகோதரிகளும் ஐந்துபேர் இருந்தார்கள். அவளுக்குப் பிறகு இரண்டு இளைய சகோதரர் பிறந்தனர். ஆக மொத்தம் அவர்கள் எட்டுப்பேரானார்கள். ஐயோ! ஹாரி யட்டுக்கு நான்குவயதிலேயே அப்பிள்ளைகளின் தாயார் இறந் துபோனாள். அதைப்பற்றி ஹாரியட் பிற்காலத்தில் எழுதி யிருப்பதாவது:—

"ஒரு தருணத்தில் என் தாயாருக்கு உடம்பு சௌக்கிய மில்லையென்று எல்லாரும் சொல்லிக்கொண்டிருந்தது எனக்கு ஞாபகமிருக்கின்றது. அப்பொழுது ஒருநாளைக்கு ஒருதரமே என் தாய் படுத்திருக்கும் அறைக்குள் தாயண்டை போவதற்கு எனக்கு உத்தரவு கொடுப்பார்கள். அப்பொழுது போய்ப் பார்த்த தாயின் அழகான முகமும், கன்னங்களிலிருந்த சிவப் புப் புள்ளிகளும், அன்போடு கூடிய புன்சிரிப்பும் இன்னும் அப்படியே என்னுள்ளத்தி லிருக்கின்றன. அப்படியிருக்க ஒருநாள் இரவு கனவு கண்டது எனக்கு நினைவுவருகிறது. அதாவது, என் தாய்க்கு உடம்பு சொஸ்தப்பட்டுப் போன

தாகக் கனவு கண்டேன். உடனே நான் விழித்துக்கொண்டு அளவற்ற சந்தோஷத்துடனே என் தாய் படுத்திருக்கும் அறைக்கு எழுந்தோடினேன். அதுகண்டு அப்பொழுது அந்த அறைக்கு வந்த சிலர் எனது சந்தோஷத்தை யடக்கி என்னை அப்பால் அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள். நான் கண்ட கனவு உண்மையாகவே முடிந்தது. அவள் ஒருநாளும் நோயுண்டாகாத ஆரோக்கியமான திவ்விய சரீரமுடையவளானாள்.

அப்புறம் அவளுக்குச் சாமக்கிரியை நடத்தப்பட்டது. அப்பொழுது ஹென்றி மயானத்துக்குக்கூட நடந்துவரமாட்டாத குழந்தை. அவன் அப்பொழுது நடந்த செய்தி ஒன்றுமறியாமல் சிறுபிள்ளைத்தனமான சந்தோஷத்துடனே இங்குமங்குமோடிக் குதித்துக்கொண்டிருந்தான்.

அச்சமயத்தில் பெரியவர்களெல்லாரும் கண்ணீர்விட்டழுததும், தாயை மயானத்திற்குக் கொண்டுபோனதும், அங்கே கல்லறையண்டை சிலர் உட்கார்ந்து பேசியதும், எனக்கு இப்பொழுதும் நினைவுவருகின்றன. பிறகு எல்லாக் கருமங்களும் முடிவாயின., அக்காலத்தில் நடத்திய காரியங்களின் விவரமின்னதென்று சிறுவர்களான எங்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை. எல்லாம் ஏதோ ஒரு புதுமையாயிருந்தன. அதனால் நாங்கள், "தாய் இப்பொழுது எங்கே போனாள்? மறுபடி எப்பொழுது திரும்பி வருவாள்?" என்றும் அங்கிருந்தவர்களைக் கேட்டுத் தாய்முகம் காணுதபிள்ளைகள் மழைமுகம் காணுத பயிர்போல வாடினோம்.

உங்கள் தாய் பூமிக்குள் படுத்துக்கொண்டிருக்கிறாளென்று அவர்கள் ஒரு சமயத்தில் எங்களுக்கு மறுமொழி சொன்னார்கள். மோக்ஷத்திற்குப் போனாளென்று மற்றொருதடவை மறுமொழி சொன்னார்கள். அதுகேட்டு ஹென்றி இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து அர்த்தம்பண்ணி, தான் பூமியில்

பள்ளம்தோண்டி மோக்ஷத்திற்குப் போய்த் தாயைப் பார்க்க வேண்டுமென்று தீர்மானித்தான். அப்படியே அவன் ஒரு நாள் காலையில் எங்கள் அக்காள் காத்தனாளின் அறைக்கு எதிரே தோட்டத்தில் மிகுந்த வீராவேசத்துடனே பள்ளம் வெட்டிக்கொண்டிருந்தான். அப்பொழுது காத்தனாள் அதைப் பார்த்து சரேலென்று அவனண்டை போய் நீ இப்பொழுது இங்கே என்ன செய்கிறாயென்று கேட்டாள். அது கேட்டு அவன் தலையெடுத்துப் பார்த்து, "ஏன்? என் தாயைக் காண்பதற்காக மோக்ஷத்திற்குப் போக வழி பண்ணுகிறேன்" என்று இயல்பாய்ப் பேசினான்.

இவ்விதமாக எங்கள் தாயின் தேகம் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோயிற்றானாலும், அவளது ஞாபகக்குறிகளும் அவள் நடத்திக் காட்டிய நடையுடை பாவனைகளும் ஒரு போதும் மறவாமல் எங்களுக்கு விசேஷமான நன்மைகளையுண்டாக்கின; நன்மை தீமைகள் இன்னவையென்று கண்டுணர்ந்து தீமையை விலக்கி நன்மையைக் கைக்கொள்ளும்படி செய்தன; தாய் உயிரோடிருப்பவர்களுக்கு அவ்வளவு நன்மையுண்டாகவில்லை. நாங்கள் எவ்விடம் போனாலும் எங்கள் தாயின் ஞாபகம் எங்களுக்கு மறக்கவேயில்லை; ஏனெனில், அந்தப் பட்டணத்திலெங்கேபோனாலும் குழந்தை முதற்கொண்டு கிழவர்வரையில் எல்லோரும் எங்கள் தாயின் குணங்களையும், அவள் வாழ்நாள் கழித்துவந்த அழகையும் கண்டு களிப்படைந்தவர்களாகி எப்பொழுதும் அவளுடைய நன்னடக்கையைப்பற்றி உபகதைகளால் எங்களிடத்தில் திருஷ்டாந்தப்படுத்திக்கொண்டிருப்பார்கள். இந்தத் தாயின் ஞாபகத்தினால் எங்களுக்கு எவ்வளவு நன்மை உண்டாயிற்றோ அவ்வளவு தாயிருக்கிறவர்களுக்குக்கூட உண்டாகவில்லை" என்று உரைத்திருக்கிறாள்.

இப்படித் தாயிறந்துபோனபிறகு லிச்சுபீல்டு நகரத்தில் அவ்வீட்டிலே வசிக்க அச்சிறுமிக்குத் தகுந்த ஆதரவில்லாமற் போயிற்று. அங்கேயே யிருந்தால் வரவர விசனமும் அதிகமாகுமென்று எண்ணி, அச்சிறுமியின் சிற்றம்மையானவள் வேறொரு ஊரில் வசித்திருந்த அவளது பாட்டியாரிடம் அவளைக் கொண்டு சேர்த்தாள்.

இவ்விதமாகப் பாட்டியார் வீடுபோய்ச் சேர்ந்த சங்கதியை இந்தச் சிறுமியே தான் ஸ்டோ என்னும் பெயர்பெற்ற பிறகு அடியில் வருமாறு எழுதியிருக்கிறாள். அதாவது:—

"அப்பொழுது நான் பாட்டியார் வீட்டிற்குப் புறப்பட்டுப்போனது எனக்குத் தூரதேச யாத்திரையாகத் தோன்றியது. பொழுதுபோய் இருட்டானபிறகு நாங்கள் பாட்டியார் வீடுபோய்ச் சேர்ந்தோம். அது ஒரு தனிப்புறமான சிறிய மாளிகை. அம்மாளிகையின் கூடத்திலே ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். அவள் எங்களைப் பார்த்தவுடனே என்னையெடுத்து மடியில் வைத்துக்கொண்டு வெளிக்குத் தெரியாமல் உள்ளுக்குள்ளேயே அழுது கண்ணீர்விட்டாள். இதற்கு என்னகாரணமென்று நான் ஒன்றுந் தோன்றாமல் பிரமித்து நின்றேன். ஏனெனில், எனக்கு அது ஒன்றுந்தெரியாத பேதைப்பருவமாதலால், எனக்கு நேரிட்டிருக்கும் பெரிய விபத்து அதற்குள் எனக்கு மறந்துபோய்விட்டது.

பிறகு சிற்றம்மை என்னை ஒரு பெரிய அறையின் ஒரு பக்கத்தில் படுக்கவிட்டது எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அங்கே எனக்கும் சிற்றம்மைக்கும் சரியாக ஒரு படுக்கை போட்டிருந்தது. மற்றொருபுறத்தில் பாட்டியாருக்குப் படுக்கை போட்டிருந்தது.

என் சிற்றம்மை மிகுந்த ஊக்கமும் கண்டிப்புமுடையவள். மரியாதையாக நடக்கவும், மெல்லிய குரலாயும் அழகாயும் பேசவும், உடைகளைக் கிழிக்கவொட்டாமல் கிழிந்

களைத் தைத்துக்கொள்ளவும், காலையி லெழுந்திருக்கும்பொழுதும் இராத்திரி படுக்கும்பொழுதும் கடவுளைத் துதித்துப் பிரார்த்திக்கவும், சிறு பெண்களுக்குக் கற்பித்துக் கொடுக்க வேண்டுமென்பது அவளுடைய கோட்பாடு" என்று சொல்லுகிறாள்.

இந்த ஹாரியட் என்னும் சிறுமி அந்தப் பாட்டியார் வீட்டிலிருக்கும்போது பல பாட்டுக்களும், கீர்த்தனைகளும், தன் அக்காள் காத்தனைனுக்குச் சொல்வதற்காக சில வேத வாக்கியங்களும் மனப்பாடம் செய்துகொண்டாள். பிறகு அந்தக் காத்தனைன் ஹாரியட்டைக் குறித்து எழுதியபோது அடியில் வருமாறு எழுதியிருக்கிறாள். அதாவது:—

"ஹாரியட் மிகவும் நல்ல பெண். அவள் கோடைக்காலமெல்லாம் பள்ளியில் படித்து நல்ல வாசக நாட்டியமுடன் படிக்கக் கற்றுக்கொண்டிருக்கிறாள்; பாட்டில் இருபத்தேழுக் கதிகம் பாடம் செய்திருக்கிறாள்; வேத புத்தகத்தில் இரண்டு அதிகாரம் மனப்பாடம் செய்திருக்கிறாள்; ஞாபகசக்தி அவளுக்கு மிகவும் அதிகம். அவள் பிற்காலத்தில் சிறந்த பாண்டித்தியமுடையவளாவாள்" என்பதாம்.

ஹாரியட்டுக்கு ஆறுவயதில் அவளுடைய தந்தை மறுவிவாகம் செய்துகொண்டார். அப்பொழுது அந்த இளைய தாயாரைக் குறித்து ஹாரியட் சொல்லியிருப்பதாவது, "என் தம்பிகளான இரண்டு குழந்தைகளுடனே நான் ஒரு அறையில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தேன். தந்தை எங்கேயோ வெளிக்கிராமத்திற்குப் போயிருக்கிறாரென்றும், சீக்கிரத்தில் ஊருக்குத் திரும்பிவருவாரென்றும் எங்களுக்குத் தெரியும். அப்படியே நாங்கள் படுத்திருக்கையில் ஒரு கூச்சல் கேட்டு விழித்துக்கொண்டோம். உடனே தந்தை நாங்கள் படுத்திருக்கும் அறைக்கு வந்தார்; அவருடன் எங்கள் இளைய தாயாரும் அவ்விடம் வந்தாள். அவள் கறுத்துக் காதளவு நீண்ட

கண்களும், அழகிய தலைப்பின்னலுமாகப் பட்டு உடை தரித்து வெகு சுந்தரமான வடிவழகுள்ளவளா யிருந்தாள். அவளுடைய அழகைப்பார்த்து இப்படியுமொரு அழகி யிருப்பாளோவென்று நாங்கள் மிகவும் அதிசயமடைந்தோம்.

மறுநாள் எங்களுக்கு அந்த இளைய தாயாரண்டை போகக் கூட மிகவும் அச்சமாயிருந்தது. அவளுடைய அழகையும் நடையுடைகளையும் பார்க்கும்போது அவளருகே போக எங்களுக்குத் துணிவுண்டாகவில்லை; அவள் அவ்வளவு பெருந்தன்மையான தோற்றமுடையவளாயிருந்தாள். அவளுடைய காரியங்களும் ஏற்பாடுகளும் உசிதமானவைகளாயிருந்தன" என்று சொல்லியிருக்கிறாள்.

இந்தப் புதிய ஸ்தானத்திற்குப் போனபோது அங்கே தன புத்திக்குத் தோன்றியவைகளை அவள் பின்னொருகாலத்தில் அடியில் வருமாறு எழுதுகிறாள். அதாவது, "அந்த ஸ்தானம் மிகவும் ஏகாந்தமாய், சௌக்கியமாயும் மனதுக்கு மிக்க மகிழ்ச்சி விளைவிப்பதாயு மிருந்தது. அவ்விடத்தில் எனக்கு உண்டான நன்மைகளை நான் ஒருபோதும் மறவேன். மேலும் அங்கே நல்ல சகவாசமமைந்ததோடுகூடச் சிலர் சிறந்த புத்திமான்களாயிருந்ததனால் அவ்விடத்திலிருக்க எனக்குப் பின்னும் அதிகமான ஆசையுண்டாயிற்று" என்று சொல்லுகிறாள்.

இந்தச் சிறுமி இளமைப்பருவத்தில் தன் சகோதரர்களுடனே மரம்செறிந்த காட்டுப் பிரதேசத்துக்குப் போய் விநோதமாக உலாவிவருவதும், தகப்பனார் படித்துக்கொண்டிருக்கும்பொழுது அதை ஊற்றமாகக் கேட்டுக்கொண்டு அவரண்டை உட்கார்ந்திருப்பதும், யாராவது பிரசங்கம் செய்தால் அதைக் கவனமாகக் கேட்பதும், அந்தந்தச் சமயத்தில் பாட்டியாரைப் போய்ப் பார்த்துவருவதுமாயிருந்தாள். படிக்கும் பிள்ளைகளில் மிகவும் கெட்டிக்காரியென்று பாட

சாலையிலும் பெருமை பெற்றுவந்தாள். அவள் பத்து வயதுள்ள பெண்ணாக இருக்கும்பொழுது, "இவள் எந்தப் புத்தகத்தை யெடுத்தாலும் தட்டுத்தடையில்லாமல் நன்றாகப் படிக்கிறாள். தையல்வேலையும் அழகாகச் செய்கிறாள்" என்று அவளுடைய சகோதரனான எட்வர்டு என்பவன் எழுதியிருக்கிறான்.

அந்தத் தந்தைக்கு ஹாரியட்டே கடைசிக் குழந்தை என்கிற பெருமை 1832-ம் வருஷத்தில் மாறிப்போயிற்று; ஏனெனில், அந்த வருஷம் அவளுக்கு ஒரு தங்கை பிறந்தது. பள்ளிக்கூடம் போய்ப் படிக்கிற நேரம்போக மற்ற வேளைகளில் அந்தக் குழந்தையை வைத்துக்கொண்டு வளர்ப்பது அவளுக்கு ஒரு பெரிய காரியமாயிற்று. அப்படிப்பட்ட காலங்களிலும் அவள் புத்தகத்தைக் கைவிடுவதில்லை. அறிய அறிய கெடுவார் உண்டா? மிகுந்த புத்திசாலியான உபாத்தியாயர்களிடம் படித்துச் சிறந்த கல்வித்தேர்ச்சி உடையவளானாள். அவள் படிப்பதை மாத்திரமே பெரிதாகப் பாராட்டாமல் "செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்" என்கிறபடி கற்பதைப்பார்க்கினும் கேட்டறிவது நலமென்று எண்ணிப் பலர் சொல்லும் சிறந்த விஷயங்களுக்குச் செவி கொடுத்து அநேக காரியங்களை அறிந்துகொண்டாள். "இளமையில் விஷயங்கள் தெரிந்துகொண்டது நான் படித்ததனாலே மாத்திரமென்று பலர் நினைப்பார்கள்; உண்மை யதுவல்ல; பெரியோர் பலருடனே உபாத்தியாயர் பேசும்போது அவ்விஷயங்களை அண்மையிலிருந்து கேட்டு அதனாலேயே அநேக காரியங்களை அறிந்தேன்" என்று, அவளே ஒரு தருணத்தில் சொல்லியிருக்கிறாள்.

பத்தாவது வயதிலே ஹாரியட் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றிச் சிற்சில பிரபந்தங்கள் எழுத ஆரம்பித்தாள். அவள் எழுதிவரும் பிரபந்தங்களெல்லாம் கேட்பவர் கொண்டாடத் தக்கவையாயிருந்தன. பன்னிரண்டு வயதுக்குள்ளேயே

சுயமாக எழுதுவதில் அவளுக்குச் சிறந்த தேர்ச்சி உண்டாகிவிட்டது. "கை உண்டாவது கற்றவருக்கேயாம்." அப்போது பாடசாலை விநோதக்காட்சி ஒன்று ஏற்படுத்தப்பட்டது, அச்சமயத்தில் பலபேருடைய முன்னிலையில் எடுத்து வாசிக்கும்படியாகக் குறித்த இரண்டு மூன்று சிறிய பிரபந்தங்களில் இச்சிறுமியின் பிரபந்தமும் ஒன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. "புத்தி முற்றினவர்க்குச் சித்தியாதது ஒன்றுமில்லை."

அக்காலத்தில் நடந்த அதிசயத்தை ஹாரியட் தானே பின்னொரு சமயத்தில் புகழ்ந்து பேசுகிறாள். அதென்னவெனில், "அப்பொழுது ஏற்படுத்திய பாடசாலை விநோதக் காட்சி எனக்கு நன்றாக நினைவிருக்கின்றது; அது எனக்கு ஒரு நல்லகாலம். அந்தச் சபையில் அவ்வூரிலிருந்த வித்வான்களெல்லாரும் வந்து கூடியிருந்தார்கள். அவர்களெதிரே எங்களுடைய பிரபந்தங்களும் உரத்து வாசிக்கப்பட்டன. எனது பிரபந்தத்தை எடுத்து வாசிக்கும்பொழுது என் தந்தைக்கு மிகவும் வியப்புண்டாகி அதைக் கருத்துடனே காதுகொடுத்துக் கேட்க ஆரம்பித்தார். அந்தப் பிரபந்தம் படித்தானவுடனே "இது யார் எழுதினது" என்று அவர் கேட்க "உம்முடைய மகள்தான் எழுதியது" என்று மறுமொழி சொன்னார்கள். அவர் அவ்வாறு மகிழ்ந்ததினமே எனது வாழ்நாளில் மிகவும் செருக்கடையத்தக்க சுதினமாம்" என்று எழுதியிருக்கிறாள்.

அப்பொழுது எழுதிய பிரபந்தத்தை அப்படியே காப்பாற்றி வைத்திருக்கிறார்கள். பழையகாலத்து மஞ்சள் கடிதத்தில் அச்சிறுபெண் எழுதிய கைபடியாத கையெழுத்துடன் அது இன்னும் அப்படியே யாவரும் பார்த்துப் படிக்கும்படி தெளிவாயிருக்கின்றது.

அந்தப் பிரபந்தம் எந்தவிஷயத்தைப் பற்றியதென்றால், "ஆத்துமா நித்தியமென்பதை, இப்பிரபஞ்சத்தைக் கொண்டே

நிரூபிக்க முடியுமா?" என்பதைக் குறித்ததாம். இந்தவிஷயம் பன்னிரண்டு பிராயமான சிறுவர்களுடைய மனதில் ஆய்ந்தறியக் கூடியதா? ஆயினும் "விளையும் பயிர் முளையிலேயே தெரியுமல்லவா?" ஆகலால் சிறந்த புத்திசாலிகளுக்கு எல்லா விஷயங்களும் எந்தக்காலத்திலும் எளிதில் அறியத்தக்கவையேயாம்.

இந்தப் பிரபந்தமெழுதிய சிலநாளைக்கெல்லாம் அச்சிறுமி தன் படிப்பை விருத்தி செய்துகொள்வதற்காக அவ்வூரைவிட்டு ஹார்ட்டு போர்டு என்னும் ஊருக்குப் போகும்படி நேரிட்டது. அங்கே இவளுடைய பெரிய தமக்கை காத்தரைன் புதிதாக ஒரு பாடசாலை ஸ்தாபிக்கலானாள்; அதில் படிக்கும்படி ஹாரியட் சேர்ந்துகொண்டாள்.

இந்தப் பாடசாலையில் சேர்ந்துகொண்டது ஹாரியட்டின் வாழ்நாளில் ஒரு விசேஷகாலமாயிருந்தது. ஏனெனில், அதுதான் அவளுடைய குணம் நல்லதோ கெட்டதோ ஏதாவது ஒரு வழியில் திரும்புகிறகாலம். மேலும் அவள் தமக்கையின் விசாரணையிலேயே நேராகச் சேர்ந்திருந்ததினால் அந்தத் தமக்கையைப்பற்றி இரண்டொரு மொழி இங்கே சொல்லாமல் விடுவது உசிதமன்று. மிகவும் கொண்டாடத்தக்கவளான இந்தத் தமக்கையின் நடவடிக்கைகளையும் குணதிசயங்களையும் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்துகொண்டாலல்லாமல், இந்த ஸ்டோ என்னும் சிறுமியைப் பற்றியாயினும், அவளெழுதிய விசேஷங்களைப் பற்றியாயினும், ஒன்றும் செவ்வையாகத் தெரிந்துகொள்ள முடியாது. அந்தத் தமக்கையின் உரிமையும் ஆத்தும குணங்களும் இச்சிறுமியினிடத்தில் அப்படியே அமைந்துபோயின. சிறந்த புத்திசாலியும், கீழ்ப்படிந்து அடங்கி நடப்பவளும், தீர்க்காலோசனை யுடையவளுமாதலால், "அடக்கமே பெண்ணுக்கழகு" என்கிறபடி நடந்து இச்சிறுமி தமக்கையினிடமுள்ள உத்தம குணங்களை

அப்படியே தானேற்றுக்கொண்டாளென்பது ஒரு அதிசய மன்று. அந்தப் பருவத்தில் முக்கியமாகத் தன் சகோதரன் எட்வர்டு, தமக்கை காத்தரைனுள், இவர்களுடைய குணங் களே தனக்கு விசேஷமாகப் பழகினவென்று இந்தச் சிறுமி தானே சொல்லியிருக்கிறாள்.

உலகத்தில் பிரசித்திபெற்ற புருஷர்களானாலும் ஸ்திரீக ளானாலும், அவரவர்களுடைய ஒழுக்க வழக்கங்கள், இளமை யிலும் வெகுவாக வாழ்நாள் முழுமையுமே கூடிவாழ்கிற மற்றொருவருடைய ஒழுக்க வழக்கங்களினின்று தான் உருப் பட்டு விளங்குகின்றன வென்பது பிரசித்தமானவிஷயம். இப்படி பூவும் மணமும்போல் ஒருவருடைய குணகுணங்கள் மற்றொருவருடைய குணகுணங்களால் உருவமைகின்ற அதி சயத்தை நல்லவர்களுடைய சரித்திரத்தைக்கொண்டு கண் டறிந்து பார்ப்பது மிகவும் ஆனந்தத்தை உண்டாக்கும்.

அதுநிற்க, இப்பொழுது இந்தக் காத்தரைனுளைப் பற்றிச் சொல்லுவோம். அவள் தனது எழுபத்தாறுவது வயதில் கை நடுநடுங்கத் தனது சரித்திரத்தைச் சுருக்கமா யெழுதி யிருக்கிறாள். "1800-ம் ௵ செப்டெம்பர் ௴ 5௨ மாலை 5 மணிக்கு என் தந்தை எழுதவும் படிக்கவும் இருக்கும் அறைக்கு எதிரிலுள்ள ஒரு பெரிய அறையில் நான் பிறந்தேன். அதைப்பற்றி எனக்கு இப்பொழுது அதிகமாக நினைப்பில்லை" என்று சொல்லிச்சரித்திரம் ஆரம்பித்திருக்கிறாள். இவ் வகைச் சாதுரியமான பேச்சுகள் பேசுவது அவளுக்குச் சுவபாவமாயிருந்தது. அவள் மிகவும் ஆழ்ந்த மனமுடை யவளாயினும், உல்லாசமும் விநோதமுமாகப் பேசிக் கொண்டு யாவருடனும் அன்னியோன்னியமாக இருப்பாள். மிக்க புத்தி நுட்பமும் சாமர்த்தியமு முடையவளாகி, பாட சாலையி லேற்படுத்திய பரிக்ஷைகளிலெல்லாம் வெகு சுலப மாகத் தேறிவந்தாள். இருபதாம் வயதில் சங்கீதமும் சிற்ப

சித்திரங்களும் கற்க ஆரம்பித்தாள். அன்றியும் கல்வியில் தேர்ந்தவளாகி ஒரு பாலிகா பாடசாலையில் உபாத்தியாயர் வேலைக்குத் தக்கவளானாள். 1822 – ல் அலெக்ஜாண்டர் பிஷர் என்னுமொரு சிறந்த பண்டிதரிடம் உத்தியோகமாக அமர்ந்தாள்.

அவள் அதிசீக்கிரத்தில் விருத்திக்கு வருவதற்கு அது ஒரு சிறந்த குறிப்பாகத் தோன்றியது. ஆனால் மறுவருஷம் வசந்தகாலத்தில் அந்தப் பண்டிதர் தமது பாடசாலைக்கு வேண்டிய புஸ்தகம் முதலியவை வாங்குவதற்காக ஐரோப்பாவுக்குப் போகக் கப்பலேறினார். மறுபடி அவர்கள் சந்திக்கவேயில்லை. ஏனெனில், அவரேறிச்சென்ற கப்பல் அயர்லாந்து தேசத்தண்டை கரை தட்டி உடைந்துபோயிற்று. அந்தக் கப்பலிலே சென்றவர்களில் ஒருவன்மாத்திரம் தப்பிப் பிழைத்தானாம். அவன் இந்த பிஷரல்லன்.

இப்படிப்பட்ட துக்கத்தைக் கேட்டால் யாருக்குத்தான் வருத்தமுண்டாகாது; ஆயினும், இந்தக் காத்தரைனாள் மிகவும் மனவுறுதியுடையவளாகி "இன்பமும் துன்பமும் எடுத்த உடலுக்கு இயல்பு" என்று எண்ணி அந்த துக்கத்துக்குத் தன் உள்ளத்தி லிடங்கொடாமல், இனிப் பரோபகாரஞ்செய்து பேரானந்த மடையவேண்டுமென்று மனவுறுதி செய்துகொண்டாள். 1824–ல் அவள் கனெக்டிகட் நாட்டில் ஹார்ட்டு போர்டு என்னும் நகரத்தில் அதற்காக ஒரு பாடசாலை ஸ்தாபிக்கலானாள். ஆரம்பத்தில் அப்பாடசாலையில் எட்டுப் பிள்ளைகளே சேர்ந்தனர். அவளுடைய சகோதரியான ஹாரியட் அந்தப் பாடசாலையில் சேர்ந்தபோது அங்கிருந்த பிள்ளைகளின் தொகை இருபத்து நான்கு; பிறகு அது நூற்றுக் கணக்காகப் பெருகியது.

ஹாரியட் அந்தப் பாடசாலையில் படித்துக்கொண்டிருக்கும்பொழுது, புல் என்னும் ஒரு பெருமாட்டியினது போஷ

ளையிலிருந்தாள். இந்தப் பெருமாட்டியைப்பற்றி ஹாரியட் சொல்லியிருப்பதாவது, "என்னைக் கண்டவுடனே அப்பெருமாட்டி தன் வயிற்றில் பிறந்த பிள்ளைபோல் என்னிடத்தில் மிகுந்த அன்புவைத்தாள். எனது சொந்த உபயோகத்திற்காகத தனது வீட்டில் எனக்கு ஒரு சின்ன அறையும் அதில் எனக்கேற்றதாய் மெத்தெனப் படுக்க ஒரு படுக்கையும் கொடுத்தாள். அவற்றைப் பார்க்க எனக்கு மிகவும் ஆனந்தமாயிற்று. ஒருகால் எனக்கு உடம்பு அசௌக்கியமாகிவிட்டால் அப்பொழுது அவள் எனக்குச் செய்யும் உபசாரத்தைச் சொல்லி முடியாது. எழுபிறப்புப் பிறந்தாலும் அவள் செய்த நன்மையை மறக்கமாட்டேன். அப்படி சிகிச்சையும் உபசாரமும் செய்பவர் உலகில் ஒருவருமில்லையென்றே சொல்லலாம்" என்று எழுதியிருக்கிறாள்.

பிறகு ஹாரியட் அந்தப் பாடசாலைப் பிள்ளைகளில் கெட்டிக்காரர்களாயிருந்த இரண்டு பெண்களுடனே தான் நேசம் செய்துகொண்டு அவர்களுடன் சேர்ந்து தானும் படித்துவந்ததும், லத்தீன் பாஷையைத் தானே சுயமாகப் படித்துக் கற்றுக்கொண்டதும், ஒரு வருஷத்திற்கெல்லாம் சிலவற்றைச் செய்யுள் நடையில் மொழிபெயர்த்ததும், அம்மொழிபெயர்ப்பு பாடசாலை விநோதக்காட்சி சபையில் படிக்கப்பட்டதும், அதை யாவரும் சிறப்பாகக் கொண்டாடியதுமாகிய விஷயங்களையெல்லாம் தானே விவரமாகச் சொல்லியிருக்கிறாள். "கனிந்தபழம் தானே விழும்" என்றவாறு அப்பொழுது அவள் தான் ஒரு கவியாகவேண்டுமென்று கருதியிருந்தாள். பிறகு அவள் பிரெஞ்சு பாஷையும் இத்தாலியா பாஷையும் கற்க ஆரம்பித்தாள். இவ்வளவு காலம்வரையில் அவள் ஒரு குறையுமில்லாமல் சுகமாகவே வாழ்ந்துகொண்டிருந்தாள்.

தெய்வபக்தி அவளிடத்தில் குடிகொண்டது. ஆயுளளவும் அது அவளுள்ளத்தைவிட்டு நீங்கவேயில்லை. ஆயினும்

அவள் ஒரு வருஷத்திற்குப் பிறகு தன் தமையனுக்கு ஒரு கடிதமெழுதினாள். அதில் தன் வாழ்நாளில் பலவகைக் கஷ்டங்கள் நேரிட்டனவென்றும், ஒரு காரியமும் தான் சரியாகச் செய்யவில்லையென்றும், பலவிதமான சோதனைகளுக்கு உட்படும்படி நேரிட்டதென்றும், மனக்கவலை பலக்குறைவு என்றபடி பலவகைப் பாவங்கள் செய்து சௌபாக்கியத்தை இழக்கும்படி யாயிற்றென்றும், அகங்காரமாத்திரம் தலைக்கேறிப்போயினதென்றும், தான் அதுவரையில் செய்த பாவங்கள் இன்னின்னவென்று நன்றாகச் சொல்லக்கூடுமென்றும் தன்னைத்தானே வெறுத்துக்கொள்ளுகிறாள்.

பிறகு டாக்டர் பீசசர் தமது குடும்பத்துடனே போஸ்டன் போய்ச் சேர்ந்து அவ்விடத்தில் ஆறு வருஷகாலமிருந்தார். அப்புறம் அவர் அங்கிருந்து ஐக்கியமாகாணங்களுக்கு அக்காலத்தில் பிரதான நகரமாயிருந்த ஸின்ஸினேட்டஸ் பட்டணம்போய்ச் சேர்ந்தனர். அங்கே டாக்டர் பீச்சா வேதசாஸ்திர வித்தியாசாலைச் சங்கத்திற்கு அக்கிராசனாதிபதியானார். காத்தரைனாள் அவ்விடத்தில் ஸ்திரீகளுக்காக ஒரு வித்தியாசாலை ஸ்தாபிக்கவேண்டுமென்று கருத்துக்கொண்டாள்; ஹாரியட் அவளுக்கு உதவியாயிருக்கவேண்டுமென்று நிச்சயித்தாள்.

அக்காலத்தில் இருப்புப்பாதை வழி கிடையாது; அதனால் பிரயாணம் போவதென்றால் அதிக பிரயாசம்; அதிலும் குடும்பத்தோடு ஒருவர் புறப்பட்டுப் போகவேண்டுமென்றால் அதின் வருத்தம் சொல்லிமுடியாது.

வழிப்பிரயாணம் போகும்போது ஹாரியட் வெகுவாகக் கடிதமெழுதுகிற வழக்கமல்லவா? அதன்படியே அவள் இப்பொழுதும் ஒரு விநோதமான கடிதமெழுதினாள். அதென்னவெனில், "கடைசியில் நாங்கள் நியூயார்க்கு நகரத்திலிருந்து புறப்பட்டோம். அப்பொழுது உண்டான இடுக்கண்

களைச் சொல்லி முடியாது. கூலிக்காரன் சாமான்களையெல் லாம் வழிதெரியாமல் வேறேரிடத்திற்குக் கொண்டுபோய் விட்டான். அவனுக்காக நாங்கள் வெகுநேரம் காத்தும் அவன் வந்து சேராமையால் அந்தச் சாமான்களில்லாமலே நாங்கள் புறப்பட்டுப்போக நேரிட்டது. அந்தச் சாமான்க ளுக்காக அங்கே ஜியார்ஜ் நிறுத்தப்பட்டான். நாங்கள் சனிக்கிழமை ராத்திரி ஊர்போய்ச் சேர்ந்தோம்; அப்பொ ழுது நெடுநேரமாகிவிட்டது. அச்சமயத்தில் தூறலும் மழை யுமாயிருந்ததனுல் எங்களுடுப்புக்களெல்லாம் நனைந்துபோ யிருந்தன. நல்லதாகத் தரித்துக்கொள்ளக் கையில் ஒரு தொப்பிகூடக் கிடையாது. எங்களுடைய சாமான் பெட்டிகள் மறுநாள் வந்து சேர்ந்தன. வரும்போது அவற்றைப் பார்த் துக்கொண்டிருந்த எங்கள் தகப்பனுர் மிக்க மகிழ்ச்சிகொண்ட வராகி ஆனந்தக் கூச்சலிட்டுக் கூவினுர்" என்பதாம்.

அவ்விடத்தில் வசித்துக்கொண்டிருக்கும்பொழுது ஹாரி யட்டுக்கு அடிக்கடி மனதுக்கு உண்டான பல கிலேசங்க ளுடனே தேகத்திலும் பல அசௌக்கியங்களுண்டாகி மிக வும் வருத்தமுற்றுள். ஆனுலும் அவள் அந்தப் பாடசாலை ஸ்தாபிக்கிற விஷயத்தில் தன் சகோதரியான காத்தரைனு ளுடன் அதிக ஊக்கத்துடனே பாடுபட்டு உழைத்தாள். அந்த வித்தியாசாலைக்கு மேற்றிசைப் பெண் வித்தியாசாலை யென்று பெயரிடப்பட்டது. அவர்கள் பட்ட பாடு எம்மாத்திரமோ அம்மாத்திரம் அது விருத்தியடைந்து வந்தது.

1833-ல் ஹாரியட் டல்ட்டன் என்னும் பெருமாட்டி யுடனே கென்தக்கியென்னும் மாகாணத்திற்குச் சென்றபோது முக்கியமாக அத்தேசத்திலுள்ள அடிமைத்தனத்தைக் கவ னிக்கும்படியாயிற்று. அங்கே அடிமைகளாயிருக்கும் நீகி ரோ ஜாதியாரைக் கண்ணுற்றுர்கள். பல வருஷங்களுக்குப் பிறகு இந்தப் பிரயாணத்தைப்பற்றி மிஸ். டல்ட்டன் எழு

தியதில் அவர் சொல்வதாவது, ''அக்காலத்தில் ஹாரியட் அந்த அடிமைகளின் இயற்கையைச் சற்றும் கவனித்ததாகத் தோற்றவில்லையாயினும், மனதில் அவ்விஷயத்தையே முதன்மையாகக் கவனித்துக்கொண்டாளென்று பிறகு நன்றாகத் தெளிவாயிற்று. அங்கே அந்த நிக்ரோவருடைய செய்கைகளில் சிறிதும் கவனம் செலுத்தாதவர்கள்போலத் தோன்றினாலும், பிறகு அவள் எழுதிய யாத்திரையின் சரித்திரத்தில அந்த அடிமைகளைப்பற்றிய ஒவ்வொரு ஸங்கதியும் குறிக்கப்பட்டிருப்பது கண்டு மிகவும வியக்கும்படியாயிற்று'' என்பதாம்.

1834-ல் கோடையில் அவள் அந்த நகரத்தை விட்டுக் கிழக்கிலுள்ள விநோதங்களைப் பார்க்கப் போனாள். அங்கிருந்த பல விசேஷங்களுள் நயகாரா என்னும் ஒரு பெரிய ஆகாயகங்கையைக் கண்ணுற்றாள். அதைப்பற்றி அவள் எழுதுவதாவது, 'அந்த நயகாரா எவ்வளவு உன்னதமாக இருக்கிறதோ, எவ்வளவு தாழ விழுகிறதோ, எவ்வளவு அதிகமாக இரைகின்றதோ, இரையவில்லையோ, ஒரே தன்மையான காட்சி யளித்ததோ இல்லையோ, எனக்கு ஒன்றும் தோற்றவில்லை; அதைப் பார்த்தவுடனே என்னுடைய மனது பிரமை பிடித்துப்போயிற்று. அது எனக்கு ஒரு புதிய விசித்திரமான உலகம்போலத் தோற்றியது. இது ஏதோ ஒரு தேவலோகத்துப் புதுமையென்று நினைக்கத் தக்கதாயிருந்தது. அதைச்சுற்றி எங்கே பார்த்தாலும் வானவில் வீசியிருப்பதுபோல விளங்கியது. பலவகை ரத்தினங்கள் பிரகாசிப்பதுபோலப் பளபளவென்று துலங்கியது; வெளேரென்று சந்திரகிரணம்போல அந்த ஆகாசகங்கை மேலிருந்து விழுவதும், அதனிடையே அடிக்கடி இந்திரதனுசு தோன்றி மறைவதும் வெகு விசித்திரமாயிருந்தன. அதைப் படைத்த போறிவினனது மனம்போலவே அது மிகத் தெளிவாகத் தோன்றி

பது. அது ஒப்புயர்வில்லாத அழகுள்ளது. அதைப் பார்க்கும்போது எங்களுக்கு உள்ளத்தில் ஒருவகை அச்சமுமுண்டாகிறது' என்பதாம்.

பிரதிவருஷமும் அந்த ஆகாயகங்கையின் அதிசயத்தைப் போய்ப் பார்த்துவருகிற ஜனங்கள் இவ்வளவென்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது. அதைப் பார்த்தவுடனே பலருக்கு மிகுந்த தெய்வபக்தி உண்டாகிவிடுகிறது. "அங்கே பூலோகம் தேவலோகம்போலத் தோற்றுகிறது, அங்கே சாதாரணமான ஒரு புதரைப் பார்த்தாலுங்கூடக் கடவுளின் ஞாபகமுண்டாகின்றது" என்று ஒரு கவி வர்ணித்திருக்கிறார்.

இந்தத்தடவை கோடைகால சஞ்சாரம் போயிருக்கையில், தனது உயிர்த்தோழியும் ஸ்டோ என்னும் பண்டிதருடைய மனையாட்டியுமான இலைஜா என்பவள் இறந்துபோனதாக ஹாரியட்டுக்குத் தெரியவந்தது. ஸ்டோ பண்டிதருக்குச் சந்ததியுமில்லை. அப்படி அவருக்குப் பத்தினி வியோகம் நேரிட்டது கேட்டு ஹாரியட் மிகவும் விசனமடைந்தாள். அவர் விஷயத்திலுண்டான பரிதாபத்தினால் அவரை அவளே விவாகம் செய்துகொள்ள உடன்பட்டாள். "ஆருமற்றதே தாரம், ஊரில் ஒருவனே தோழன்" என்பதுபோல், 1836-ம் ஞு ஜனுவரிமீ 6உ அவ்விருவருக்கும் விவாகம் நடந்தேறியது.

இப்படி விவாகமானபோது ஹாரியட்டுக்கு வயது இருபத்தைந்து. கைபிடித்த கணவனோ சிறந்த கல்வித்தேர்ச்சியும் லோகோபகார சிந்தையு முடையவர். உடைமையென்பது கலவியுடைமை. கல்வியழகே அழகு, கல்லாதவரோ கண்ணில்லாதவர், என்னும் முதுமொழிப்பொருளை யுணர்ந்தவராகையால், முக்கியமாக உலகத்தில் மேலான படிப்பு எங்கும் விசேஷமாகப் பரவும்படி செய்யவேண்டுமென்பது அவருடைய முதன்மையான கோரிக்கை. அதற்காகவே அவர் போதனுப்பியாஸ பாடசாலை யொன்று ஸ்தாபிக்க

லானர். அதன் கருத்தென்னவெனில், சாதாரணமாய் எங்கும் பாடசாலைகள் ஸ்தாபிக்கவேண்டுமென்பதும், உபாத்தியாயர்களுடைய பெருமையை அதிகப்படுத்த வேண்டுமென்பதும், அதனால் உலகத்தில் படிப்புக்கு அதிகமான உபயோக முண்டாக்கிவிடவேண்டுமென்பதுமாம்.

இவர்களுக்குக் கலியாணமான சில நாளைக்கெல்லாம், ஐரோப்பாவிலே முக்கியமாகப் பரஷியா தேசத்திலுள்ள பாடசாலை ஏற்பாடுகளைத் தேற விசாரித்தறிந்து வரும்படி ஸ்டோ பண்டிதர் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டார்.

1836-ம் வருஷ ஆகிய அந்தக்காலத்தில அமெரிக்கா ஒரு புதிய தேசமாயிருந்தது; அப்பொழுதுதான் பிரஜைகள் புதிதாய் அங்கே குடியேறினார்கள். அங்கே அநுவஸ்தாயில் பிரமுகம பண்ணப்பட்ட வித்தியாப்பியாசமென்பது அப்பொழுதுதான் ஆரம்பிக்கப்பட்டது. அதனால அங்கே தலைமையாயிருந்த சிலர் அறிவும் அநுபவமும் சம்பாதித்துக்கொண்டு வரும்படி ஐரோப்பாவுக்குச் சென்றார்கள்.

இவ்விதமாக நாயகன் வெளியே புறப்பட்டுப்போயிருந்த காலத்தில் ஸ்டோ பெருமாட்டி அடிமைகளைப்பற்றிய வரலாற்றை விசேஷமாக ஆராய்ச்சி செய்யலானாள். நாம் முன்னே சொல்லியவிதமாகவே இந்த ஐக்கிய மாகாணங்கள் வடபாதியென்றும் தென்பாதியென்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதில் வடபாதியெல்லாம் சுதந்தரமான தேசம். தென்பாதியில் அடிமையாகப் பிடிபட்டவர்களால் உழுது பயிர்செய்யப்பட்ட விசேஷமான நெல்விளை நிலங்களும் கருப்பஞ் சோலைகளுமிருந்தன.

அங்கே சிறகு பறிகொடுத்த பறவைபோன்ற அடிமைகளை வைத்து ஆளுகிற ஏற்பாடு மிகவும் கொடியதாக இருந்தது. அடிமைகள் தென்பாதியில் அதிகமாசத் துன்புறுத்தப்பட்டு வந்தனர்.

வின்வினேட்டை என்னும் மாகாணத்தில் இந்த அடிமை வியாபாரத்தை அடக்கவேண்டு மென்பதைப்பற்றிப் பலர் அதிக வூக்கம் கொண்டவரானார்கள். அடிமைத்தனத்தை உடனே அடக்கி அனைவர்க்கும் சுவாதந்திரியம் அளிக்கவேண்டு மென்று அநேகர்க்கு அதிக ஆவேசமுண்டாகியது; ஒரேகாலத்திலில்லாவிட்டாலும் நாளாவில் அடக்கினாலும் நல்லதேயென்று மற்றவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். எப்படியாலும் அதை அடக்கிவிடவேண்டு மென்பதில் யாவரும் ஒருமுகமானார்கள்.

"அடிமை படைத்தால் ஆள்வது கடன்" என்று நினைத்த பணக்காரர் இரக்கமில்லாமல் அடிமைகளை வைத்தாளுகிற கொடுமைகளைப்பற்றிச் சமாசார பத்திரிகைகளில் பிரபலமாகப் பிரசுரம் செய்யப்பட்டது. அதைப் பார்த்தபோது தெற்கே அடிமைகளை வைத்தாளும் தனிகர்களுக்கு மிகுந்த ஆக்கிரக முண்டாகியது. அதனால் அவர்கள் போக்கிரிகளுக்குப் பணம் கொடுத்துச் சமாசார பத்திரிகை பிரசுரம் செய்பவர்களை எதிர்க்கும்படி செய்தார்கள். எங்கே பார்த்தாலும் பெரிய கலகமுண்டாகத் தலைப்பட்டது. அதை அடக்குவதற்காக அதிகப் பிரயாசைப் படவேண்டியதாயிற்று. அக்காலத்திலுண்டான கலகங்களையும் அதைத் தடுக்க முயன்ற முயற்சிகளையும் இங்கே எடுத்துரைப்பதென்றால் மிகவும் விரிவாகும்.

"ஆராருக்கு ஆளாவோம் என்று நினைத்து நினைத்து அந்த அடிமைகள் படுகிற உபத்திரவங்களைப்பற்றி யாரிடத்தில் எடுத்துப் பேசினாலும், அவர்களுக்கு அடங்காத கோபமுண்டாகும். அதற்கு ஏதாகிலும் பரிகாரம் தேடவேண்டுவது அவசியமே, என்னசெய்கிறது? என்று ஒவ்வொருவரும் பரிதபித்துக் கேட்கலானார்கள்" என்று ஸ்டோ துரைசானியே சொல்லுகிறாள்.

ஸ்டோ பண்டிதர் நியூயார்க்குப் பட்டணம் திரும்பி வந்தபோது இலைஜா, ஹாரியட் என்னும் இரண்டு பெண்கள் தமக்கு இரட்டைப்பிள்ளையாகப் பிறந்த செய்தி கேள்விப் பட்டுச் சந்தோஷிக்கலானார். 1838-ல் ஹென்றி யென்று மற்றொரு பிள்ளை பிறந்தது.

அதன்பிறகு ஸ்டோ துரைசானி முன்போலத் தன் மனம் போனபடியெல்லாம் யதேச்சையாக இருப்பதற்கு அநுகூலப் படாமற்போயிற்று. ஏககாலத்திலே கையில் மூன்று குழந் தைகள் ஏற்பட்டுப்போயின; அவள் உடம்போ மிகவும் நுட்ப மானது. ஏழையானதால் வேலைக்காரர்களும் அதிகமாய் வைத்துக்கொள்ள அநுகூலப்படாமல் ஒரே ஒரு வேலைக் காரியே வைத்துக்கொள்ளும்படியிருந்தது. அதனால் அவள் தானே குழந்தைகளைப்பற்றியும் வீட்டு வேலையைப்பற்றியும் அதிகமான கவலைப்படவேண்டியதாயிருந்தது. இப்படியிருக் கையிலும் அவளது புத்தியாத்திரம் சும்மா இராமல் பற்பல வேலைகளைச் செய்ய அவளைத் தூண்டிக்கொண்டேயிருந்தது. அவள் பற்பல சமாசார பத்திரிகைகளுக்கும், இதாமான பத் திரிகைகளுக்கும் அநேகவித விஷயங்கள் எழுதிவந்தாள். அதற்காக அவளுக்குக் கிடைத்த பணம் மிகவும் சொற்ப மாயினும் திருப்தியுடன் பெற்றுக்கொள்ளத் தக்கதாயிருந்தது. அப்பொழுது அவள் தனது தோழியான ஜார்ஜியானா மே என்பவளுக்கு ஒரு கடிதம் எழுதினாள். அதாவது, "தோழியே! குழந்தைகளைப் பாதுகாப்பதும் வீட்டுவேலை யைப் பார்ப்பதும்தவிர வேறு வேலை எதுவும் செய்ய எனக்கு இடமுண்டாகவில்லை; ஆயினும் சற்று நிதானித்து யோசிக்கு மளவில், கணவன் விஷயத்திலும் குழந்தைகள் விஷயத்தி லும் நான் சிறந்த பாக்கியம்பெற்றவள் என்று சொல்லத் தடையில்லை. "பிள்ளைச்சீர் கொள்ளக் கிடைக்குமா?" இந் தக் குழந்தைகளில்லாமல் எனக்கு எவ்வளவு சௌக்கியம்

கிடைத்தாலும், ஒழிவு கிடைத்தாலும், இன்பம் கிடைத்தாலும், ஒன்றும் எனக்கு வேண்டுவதில்லை; குழந்தைகளாவது, வட்டிக்குப்போட்டு வைத்திருக்கிற நிதிபோலவாம். அதன் விலைமதிப்பு நிமிஷத்திற்கு நிமிஷம் விருத்தியடைந்து கொண்டே யிருக்கிறது" என்று எழுதினுள்.

1839-ல் ஸ்ட்டோ துரைசானிவீட்டில் அத்தேசத்துச் சிறுபெண் ஒருத்தி வேலைக்காரியாய் அமர்ந்தாள். அவள் ஓஹியோ என்கிற நாட்டில் கொண்டு சேர்க்கப்பட்டபடியால் அந்நாட்டுச் சட்டத்தின்படியே அவள் அடிமைத்தனம் நீங்கிச் சுவாதீனம் பெற்றிருப்பது உறுதிதான்.

இப்படியிருக்க அந்தப் பெண் இவர்களிடமமர்ந்த சில மாதங்களுக்கெல்லாம், அந்தப் பெண் தன் அடிமை என்று ஒருவன் அவளைத் தேடிக்கொண்டு அப்பட்டணத்தில் வந்திருக்கிறனென்றும், தகுந்த ஜாக்கிரதையுடன் இராவிட்டால் அவன் அப்பெண்ணைப் பிடித்துக்கொண்டு போய் அடிமையாக்கிக்கொள்வானென்றும் ஸ்ட்டோ பண்டிதருக்குச் செய்தி தெரியவந்தது.

அது தெரிந்தவுடனே அப்பண்டிதர், ஆடைந்தோரை ஆதரி என்கிறபடி அப்பெண்ணைத் தேடுகிறவர்கள் ஒழிந்து போகிறவரையில் அவளை ஒருவர் கண்ணுக்கும் அகப்படாத பத்திரமானவிடத்தில் கொண்டு சேர்த்து வைக்கவேண்டுமென்று தீர்மானித்தது. அப்படியே அவர் அந்தப் பெண்ணை ஒரு மூடுவண்டியிலேற்றி, தம் மைத்துனனுடனே தாமும் காவலாகப் புறப்பட்டு, ஒருவரும் சஞ்சரியாத தனிவழியே இராத்திரியிலேயே சென்று பன்னிரண்டுமைல் தூரத்திற்கப்பால் அப்பெண்ணின் சினேகிதர் வசித்திருந்த பத்திரமான ஓரிடத்தில் கொண்டுசேர்த்தார். இவ்விதமாக அத்தேசத்தில் அடிமைகள் படுகிற பாட்டை நேராகக் கண்டனுபவித்தபிறகு ஸ்ட்டோ துரைசானி அவர்கள் வாலாற்றைத்

தானெழுதிய நீக்ரோ ஜாதியார் சரித்திரத்தில் செவ்வையா யெழுதி வைக்கலானாள்.

1840-ம் ஹு மேமீ அவர்களுக்கு பிரடெரிக் உவில்லி யம் என்று மற்றொரு பிள்ளை பிறந்தது. டிசம்பர் மீ அவள் தனது தோழிக்கு ஒரு கடிதமெழுதினாள். அதில் அவள் சொல்வதாவது "ஒரு வருஷகாலமாக நான் இன்றியமையாத காரியங்களைப்பற்றிய கடிதங்கள்மாத்திரமே எழுதிவரும்படி யாயிற்று. அதற்கு முக்கியமான காரணம் என் கண்களில் ஒருவிதமான நோய் உண்டானதேயாம். இரண்டு மாதகாலம் கண்ணால் பார்த்து எழுதவே கூடாமற்போனதோடுகூட எதை யும் நன்றாக ஊன்றிப் பார்க்கவும் சாத்தியப்படாமற்போய் விட்டது. பகலில் வெளிச்சத்தையும் பார்க்கக் கூடாமற்போ யிற்று. அந்தச் சமயத்திலேதான் எனக்கு பிரடெரிக் என்கிற குமாரன் பிறந்தான். பிறகு இரண்டு மாதகாலம் நான் படுத்த படுக்கையாகவே யிருந்தேன்" என்று எழுதினாள்.

1842-ம் ஹுத்தில் அவள் தேகசௌக்கியத்தின் பொருட்டு வெளியே புறப்பட்டுப் போனாள். அப்போது அவளுடைய கணவன் அவளுக்கு எழுதுகிறார். அதாவது, "என அரு மைக்கண்ணாட்டி, நீ சிறந்த கல்வித்தேர்ச்சியுள்ள நூலாசிரிய ராகப் போகிறாய்; தெய்வ சங்கற்பம் அப்படிப்பட்டதாகவே யிருக்கின்றது. ஆதலின் அதற்கேற்றபடியே நீ எல்லா ஏற் பாடுகளும் செய்துவரக்கடவை. கூடிய சீக்கிரம் உடம்பை நன்றாகச் சௌக்கியப்படுத்திக்கொண்டு மனதையும் நன்றாகப் பண்படுத்திக்கொள். அதைப்பார்க்கிலும் உன்னை மனைவி யாகப் பெற்றவனுக்குப் பெரிய பாக்கியம் வேறில்லை, உன் மக்களுக்கும் அதுவே பெரும்பேறாகும்" என்பதாம். மறுபடி யும் அவர் அவளுக்கு எழுதுகிறார்: அதென்னவெனில், "என் அருமைக் கண்மணி, வெகு சீக்கிரத்தில் நீ இவ்விடம் வந்து சேரக்கடவை; ஏனெனில், உன் பிரிவைப் பொறுத்தி

ருக்க என்ருல் முடியவில்லை; நாம் இப்படி ஏழையாயிராமல் போதுமான பாக்கியம் நமக்குக் கிடைத்திருக்குமாருல், உடனே நான் உன்னிடம் புறப்பட்டு வந்துவிடுவேன்; இந்தப் பூலோகத்தில் உன்னைப்போன்ற பேரறிவுள்ள பெண்மணி ஒருத்தியுமில்லை. செருக்கென்பது சிறிதுமில்லாமல் இவ்வளவு சிறந்த அறிவும், வீணுடம்பரமென்பது சிறிதுமில்லாத அவ்வளவு புகழ்ச்சியும், விகல்பம் சிறிதுமில்லாத அவ்வளவு கல்வித் தேர்ச்சியும், அளவுக்கு மிஞ்சாத அவ்வளவு விடா முயற்சியும், கடுஞ்சொல் சிறிதுமில்லாத அதிகமான பேசுந் திறமும், இவ்விதமே மற்றும் பலவிஷயங்களிலும் அபவாதத் திற்குச் சிறிதுமிடங்கொடாத உத்தம குணங்களும் உன்னைத் தவிர வேறு யாரிடத்திலுண்டு" என்று எழுதினர்.

இக்கடிதத்திற்கு அந்தப் பெண்மணி உத்தரமெழுதும் பொழுது, நீ சிறந்த நூலாசிரியராக வேண்டுமென்பதற்கு எழுதிய மறுமொழியாவது: "அதற்கென்று கஷ்டப்பட்டால் கல்வித்தேர்ச்சியும் பெறலாம், நூலாசிரியருமாகலாம், சந்தேகமில்லை; ஆனல், அது நமக்குச் சாத்தியமாகுமா என்பது சந்தேகமாயிருக்கிறது; ஏனெனில், குழந்தைகளெல்லாம் பச்சைப் பாலகர்கள்; தாய் எப்பொழுதும் அக்குழந்தைகள் மேலேயே கண்ணுயிருக்க வேண்டியிருக்கிறது. அன்றியும், நான் எப்பொழுதும் நூல்கள் எழுதுவதே தொழிலாகக் கொள்ளவேண்டுமானல், எனக்கென்றே தனியாக ஒரு அறை வேண்டும்; நமக்குத் தனியாக ஒரு இடமும் கிடையாது; என்னசெய்வது" என்று எழுதினள். அதற்கேற்றபடியே சில காலம்வரையில் தரித்திரத்தோடு நோயும் மிகவும் வருத்த ஆரம்பித்து அவள் அதிகமான கஷ்டங்களை அநுபவிக்கலானள்.

1842-ம் வருஷம் அந்தக் கல்விச்சாலை மாணுக்கர்களுக்கெல்லாம் ஒருவகை விஷச்சுரம் உண்டாகத் தலைப்பட்டு, இந்த

ஸ்டோ துரைசானியின் வீடு ஒரு பெரிய வைத்தியசாலை யாகிவிட்டது. 1843-ம் வருஷத்தில் அவளுக்கு ஒரு ஆண் குழந்தையும் பிறகு ஒரு பெண்குழந்தையும் பிறந்தன; நோயும் தரித்திரமும் அதிகமாக வருத்தலாயின. கடைசியில் அவள் நோயினால் மிகவும் மெலிந்தவளாகி, 1846-ம் வருஷம் முதலில் தேகசௌக்கியத்திற்காக ஒரு வருஷகாலம் வெளியே போய்வரவேண்டுமென்று நிச்சயிக்கலாயிற்று.

அங்கிருந்து 1846-ஆம் மார்ச்சு மீ அவளெழுதுகிறாள். "எனக்கு எவ்வளவோ கஷ்டங்களிருக்கையிலும், என் விஷயத்தில் கடவுள் பூரணகடாக்ஷம் வைத்துச் சிறந்த அன்புடையவர்களான நேசர்களைக் கொடுத்து என்விஷயத்தில் எப்போதும் கவனமுள்ளவரா யிருப்பதை நினைக்க நினைக்க எனக்குப் பேரானந்தமா யிருக்கின்றது; இந்த மாரிகாலத்தில் பிரதிதினமும் இதற்கு அத்தாட்சிகள் அமிதமாக உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கிக்கொண்டிருக்கின்றன. எப்பொழுதும் எவராவது இரண்டொரு சிநேகிதர்கள் என்னை மனங்களிக்கச்செய்து எனக்கு வேண்டிய உதவிசெய்ய என்னிட மிருந்துகொண்டே யிருப்பார்கள். ஆதலால் ஒரு குறையும் என் மனதில் தோன்றாமலே யிருக்கிறது. என்னுடைய கணவன் வீட்டு விசாரணை கர்த்தாவாயும் பிள்ளைகளுக்குத் தாதிபோலவுமாயினார். இராத்திரி அவர் மூக்குக் கண்ணாடியுடன் பிள்ளைகளையெல்லாம் படுக்கையறைக்கு ஓட்டிக்கொண்டு போவதைக் கண்டால் நீங்களெல்லாரும் நகைக்கும்படியாயிருக்கும். பேரூர் தெரியாத யாரோ ஒரு நண்பர் என் பிரயாணத்திற்கு வேண்டிய திரவியம் வெகு விசித்திரமானவகையாய் அனுப்புவித்தார்.

இவைகளையெல்லாம் பார்த்தால் கடவுளுடைய கடாக்ஷம் நம்மிடத்தில் பரிபூரணமா யிருக்கிறதென்பது வெளிப்படையாக விளங்குவதோடு, அநேகாண்டு துயரம் நீங்கி

எககாலத்தும் அவனையே பூரணமாக நம்பியிருப்பதற்கும் துணிவுண்டாகின்றது" என்பதாம்.

இப்படி தேகசௌக்கியத்திற்காகப் போயிருந்தவிடத்தி னின்றும் 1847-ம் ஹு முதலில் திரும்பி வரும்படியாயிற்று. மேமீ ஸ்டோ துரைசானி தன் வீடுவந்து சேர்ந்தாள்; அது கண்டு அவளது கணவனும் குழந்தைகளும் மிக்க மகிழ்ச்சி கொண்டார்கள்.

1848-ம ஹு ஸாமுவேல் சார்லெஸ் என்கிற ஆறுவது குழந்தையொன்று அவளுக்குப் பிறந்தது. இப்படியிருக்க அந்தச் சமயத்தில் அவளுடைய கணவனுக்குத் தேகம் மிக வும் அசௌக்கியமாகிவிட்டது. அதனால் அவர் இப்போது தம் பங்குககு நல்ல காற்றும் ஜலமுமுள்ள விடத்திற் போயிருந்து உடமபைச சொஸ்தப்படுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. அதன்படியே அவர் 1848-ம் ஹு ஜூன்மீ புறப்பட்டுப்போயி னார்; அங்கேயே மறுவருஷம் செப்டெம்பர்மீ வரையில் அவர இருக்கவேண்டியதாக நேரிட்டது.

இப்படி அவர் வெளியே போயிருந்தகாலத்தில், வின்ஸி னேட்டை நகரத்தில் வாந்திபேதி நோய் உண்டாகத் தலைப்பட் டது. அதுகேட்டு ஸ்டோ பண்டிதர் உடனே தம் குழந்தைக ளண்டை திரும்பி வந்துவிடவேண்டுமென்று அதிக ஆவல் கொணடார். ஆனால் அவருடைய மனையாட்டி அதற்கு உடன்படவில்லை. அபபடியிருக்க அவளுடைய சிறுகுழந் தையான சார்லிக்கு உடம்பு அசௌக்கியமாயிற்று; அதனால் அக்குழந்தைக்கு உடம்பு மிகவும் துர்ப்பலமாகிவிட்டாலும், சீக்கிரமே சொஸ்தமாகி விடுவதுபோலக் காணப்பட்டது. அப்போது ஜூலைமீ 23உ அவள் தன கணவனுக்கு எழுது கிறாள்: என்னவெனில், "என் பிராணநாதனே! கடைசியில் யமதர்மராஜன் நமதுமேலேயும் கைவைக்கலானார்போலும். சார்லியென்னும் நமது சிறுகுழந்தை மரணாவஸ்தையுடனே

படுத்திருக்க, ஒருநாள் முழுதும் நாங்கள் பக்கத்திலுட்கார்ந்து பார்த்திருக்க நேரிட்டது. கொஞ்சங் கொஞ்சமாய் மூச்சு அடங்கி வரலாயிற்று. முன் கடிதத்தில் அவனுக்கு நோய் கண்டதாக எழுதினேனே! முதலில் அது கொஞ்சம் குணமாயிற்று. ஆனாலும் அதுமுதல் உடம்புமாத்திரம் மெலிந்து கொண்டே வந்தது; அப்படியிருக்கையிலும் உடம்பு அநுகூலமாகுமென்றே நாங்கள் ஆசைவைத்திருந்தோம். இப்போது திடீரென்று நான்கு நாளைக்குமுன்னே கொடிய வாந்திபேதி காணலாயிற்று. இனி இன்று இராத்திரி தப்புமென்கிற ஆசையில்லை. அக்கம் பக்கத்தார் தங்களால் எவ்வளவு உதவிசெய்யக்கூடுமோ அவ்வளவும் நமதுவிஷயத்தில் செய்தார்கள். நீங்கள் இதற்காக இவ்விடம் திரும்பி வரவேண்டாம்; நீங்கள் இவ்விடம் வருவதற்குள் எல்லாக் காரியமும் முடிந்துவிடும். இந்தத் தொத்துநோய் இனிப் புதிதாய்க் காண்கிறவிடமெல்லாம் அபாயமாகவே முடிகிறதென்று வைத்தியர்கள் சொல்லுகிறார்கள். அது தங்களுக்கு ஞாபகமிருக்கட்டும்; கடவுள் நம்மை நிக்கிரகிக்கும்போது நாம் அவர்மேல் ஆயாஸங் கொள்ளலாகாது. இதற்குமேல் அதிகமாய் ஒன்றும் சொல்ல எனக்கு இப்பொழுது துணிவுண்டாகவில்லை; சீக்கிரமே மற்றொரு கடிதமெழுதுகிறேன்" என்று தெரிவித்தாள். அதன்படியே ஜூலை மீ 26௳ எழுதிய கடிதமாவது: "பிராணநாதா! காரியம் கடைசியில் முடிவாகிவிட்டது; நமது அருமைக் குழந்தை நம்மைவிட்டுப் போய்விட்டது. இப்பொழுது அது மோக்ஷமடைந்து அடியார்களுடனே பேராநந்த மநுபவித்துக்கொண்டிருக்கின்றது. அவ்வளவு அழகும், ஒளியும், சிரிப்பும், சமத்காரமும், மதுரமும், மழலைச்சொல்லுமுள்ள நமது ஆசைக்கிளி இப்பொழுது பிணக்கோலத்துடனே படுத்திருக்கின்றது. எனக்குச் செருக்கும் சந்தோஷமும் தந்து எப்பொழுதும் என் மனத்

றதக் தேற்றிக்கொண்டிருந்தது இக்குழந்தை. இக்குழந்தையைக் கண்டு நான் எத்தனையோ மனக்கவலைகளை நீக்கினேன்;

"மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு"

என்றபடி எனக்கு எத்தனையோ துயரங்கள் இக்குழந்தையைக் கையால் தொட்டவுடனே நீங்கிப்போயின. அப்படிப்பட்ட குழந்தையை நான் மரணாவஸ்தையில் என் கண்ணால் பார்க்கும்படியாக நேரிட்டது; அப்பொழுது எனக்கு ஒன்றும் செய்யத் தோன்றாமற்போயிற்று. அச்சமயத்தில் குழந்தையின் கொடிய வேதனையை ஆற்றத் தகுந்தவர் ஒருவருமில்லை. அவ்வேதனையைப் பார்த்து நான் படுகிற பரிதாபத்தைக் கண்டு அக்குழந்தைக்குச் சீக்கிரமே உயிர் போய்விடலாகாதாவென்று பிரார்த்தனை செய்வதுதவிர மற்றொன்றும ஒருவராலும் செய்யக் கூடவில்லை. இப்படி நானெழுதுவதைப் பார்த்தால் என் மனம்போன்ற துக்கம் மற்றெவருக்கு மில்லைபோலத் தோன்றும்; முன் எகிப்து தேசத்தில் உண்டானதுபோல் இப்பொழுது இப்பட்டணத்தில சாகக்கொடாத வீடு ஒன்று கூடக்கிடையாது. இந்தக் கொடுந்துயரம எங்கே பார்த்தாலும் பரவியிருக்கின்றது; இது எப்பொழுது நீங்குமோ கடவுள் ஒருவருக்குத்தான் தெரியும்" என்பதாம்.

இவ்விதமாக அத்தேசத்துப் பிரஜைகளை வெகுநாள் வருத்திக்கொண்டிருந்த அந்த கொள்ளைநோய்*கடைசியில் ஓய்ந்தது. 1849-ம் வரு செப்டெம்பர் மீ ஸ்ட்டோ பண்டிதர் ஊருக்குத் திரும்பிவந்தார். வந்தவுடனே அவ்வூர் கல்விச்சாலையில் ஒரு பிரதான பண்டித உத்தியோகத்தை அங்கீகரிக்கவேண்டுமென்று அவருக்குப் பத்திரிகை வந்தது. அப்படியே அவர் அதை ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தார்.

துயரம் வந்த காலத்திலும் தருமம் செய்தலே தலைமையெனக் கொண்டு பீச்சர் துரைசானி அப்பொழுது வேறு

விதமான மற்றொரு நற்செய்கை செய்யலானாள். இதுவரையில நாம் அவளை ஒரு கன்னிகையாகவும், பெண்சாதியாகவும், தாயாகவுமாத்திரமேயல்லவோ கண்டிருக்கிறோம். ஒரு நூலாசிரியராக இதுவரையி லெங்கு மெடுத்துரைக்கவில்லையே! அவள் ஒப்பில்லாத அறிவுள்ள ஒரு பெண்ணரசியென்று அவளைச் சூழ்ந்திருப்பவர்களுக்கு நன்றாய்த் தெரிந்திருந்தாலும், பல கதைகளும், சமாசார பத்திரிகைக்கு வேண்டிய பற்பல விஷயங்களும் அடிக்கடி யெழுதிவந்தாலும். அவளுடைய பெயர் வெளியில் விசேஷமாகப் பிரசித்திபெறவில்லை. உகத்தா ரனைவரும் கொண்டாடத்தக்க புத்தகமொன்றும் இதுவரையில் அவளா லெழுதப்பட்டுப் பிரசுரமாகவில்லை. நீகரோவர் சரித்திரமாகிய அங்கில் தாம்ஸ் காபின் (Uncle Tom's Cabin) என்று பெயரிட்டு அரிய புத்தகமொன்றை எழுதுவதற்கு இன்றியமையாத பூததயை பச்சாத்தாபத்தின் ஆழமிவ்வளவென்று கண்டறிய நேரிட்ட அனுபவம் வேண்டியிருந்தது போலும். பூததயை பச்சாத்தாபமுடையவர்களை கடவுள் எவ்வளவு சோதனைசெய்தாலும் அதற்கு உட்பட்டிருக்க வேண்டுவதேயாம்.

இந்த ஸ்டோ துரைசானி மிகுந்த நாட்டபத்தியுடையவளென்பது உண்மையே. ஆயின் அந்த நாட்டபத்தி பிறப்பிலேயே கடவுள் கடாக்ஷித்த உத்தம குணமாம். அவள் தன்னுடைய படிப்பினால் இயற்கையிலமைந்த சாமர்த்தியங்களை மிகவும் விசேஷமாக விருத்திபண்ணிக்கொண்டாள். ஆனாலும், எவ்வளவு நாட்ட புத்தியிருந்தாலும் எவ்வளவு பயிற்சியிருந்தாலும், இந்த ஒரு புத்தகம் இவ்வுலகத்தில் நாகரிகம்பெற்ற பல்லாயிரம் பிரஜைகளையும் அடிமை வியாபாரத்துக்கு விரோதமாக கோபமூட்டிக் கிளப்பிவிட்டதுபோலக் கிளப்ப மற்றெவராலு மாகாது.

பிள்ளைகளும் குட்டிகளும் நிறைந்த பெரிய குடும்பத்தைக் காப்பாற்றுகிற கவலை மேலிட்டு, தேகவலிமையில்லாமல் தரித்திரத்தோடு போராடுகிறவளும் இவ்வுலகசிந்தை யதிகமில்லாமல் பரலோக சிந்தையே மேலாகக்கொண்டு பாடுபடுகிறவளுமான இப்படிப்பட்டவளா அடிமைகளைப்பற்றிய இவ்வளவு அற்புதமான கதை யெழுத வல்லவளாவாள் என்று பலர்க்கு வியப்பு உண்டாகுமல்லவா?

1850-ம் வருஷத்தில் ஐக்கிய மாகாணத்தில் அங்கங்கே போய்ப் பதுங்கிக்கொண்ட அடிமைகளுக்காக ஒரு சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அந்தச் சட்டத்தினால் உண்டான உபத்திரவமென்னவெனில், தெற்கே அடிமைகளை வாங்கி வைத்தாளுகிறவர்களுக்குள் எவராலும் தங்களுடைய அடிமையென்று யாரைச் சொல்லுகிறார்களோ அவரை உடனே தேடிப் பிடித்துத் தம்மிஷ்டப்படிக் கஷ்டப்படுத்த அதிகாரம் உண்டானதுமன்றியில், கலகத்திற்கிடமான இந்தச் செயலுக்குத் தங்களாலான ஸகாயம் செய்யும்படிச் சுதந்தர நாடுகளிலுள்ளவர்களுக்குக்கூட நிர்ப்பந்தமுண்டாயிற்று.

ஸ்டோ துரைசானி போஸ்டன் நகரத்திலிருந்த காலத்தில் அங்கே இந்தக் கொடிய சட்டத்தைப்பற்றின பேச்சே பெரிய பேச்சாயிருந்தது. அவள் பிரொன்ஸ்விக்கு நகருக்கு வந்த பிறகு ஆதரவற்ற பேதை ஜனங்களைத் துன்புறுத்தும்படி இவ்விதமாக ஒரு அநியாயச்சட்ட முண்டாகுமாவென்று அவளுடைய மனங் கொதித்துக்கொண்டேயிருந்தது.

அந்தச் சட்டம் அப்படியே உறுதிப்படுத்தப்பட்டுப் போனபிறகு, அந்தச் சட்டத்தினால் உண்டாகும் அகோரமான கொடுமைகள் இன்னின்னவிதமா யிருக்கின்றனவென்று சொல்லி ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல கடிதங்கள் ஸ்டோ துரைசானியிடம் வரத் தலைப்பட்டன. நாடுகளைவிட நகரங்களை தப்பித்துக்கொண்டோடிப்போன அடிமைகளைப் பிடிப்

பதற்கு மிகவும் ஏற்றவிடங்களாயிருந்தன. சுதந்தர நாடுக ளுக்கு மத்தியஸ்தானமாயிருந்த போஸ்ட்டன் நகரங்கூட அடிமைகளைத் தேடிக்கொண்டு வருகிறவர்கள் தட்டுத்தடை யில்லாமல் பிரவேசிக்கும்படியான இடமாகிவிட்டது. அத னுலுண்டான துன்பங்களையும் வருத்தங்களையும் இவ்வள வென்று எடுத்துச் சொல்ல ஒருவராலும் முடியாது. குடும்பங்க ளெல்லாம் சின்னபின்னமாய்ப்போயின. சிலர் உதவியற்ற சாமான்கள் அடைத்திருக்கும் மேலறைகளில் ஒளித்துக் கொண்டனர்; சிலர் நிலவறையி லொளித்துக்கொண்டனர். சிலர் கடற்கரைக்கோடிக் கப்பலேறி ஐரோப்பாவுக்குப் போக லானார்கள்; மற்றவர்கள் கனடா தேசத்துக்குப் போய்விட் டார்கள்.

ஏழைப்பையன் ஒருவன் அனைவருக்கும் உபயோகமான மட்பாத்திர வியாபாரஞ்செய்து தன் குடும்பத்தைப் பாது காத்துக்கொண்டு வந்தான். அப்படியிருக்கையில் அவனை விலைக்கு வாங்கின பரிவு இல்லாத யஜமானன் ஒருவன் அவ னைத் தேடிக்கொண்டு வருவதாக அவனுக்குச் செய்தி தெரிந் தது. அந்த யஜமானனை இவன் விட்டுப் பல வருஷங்கள் கழிந்துபோயின. அப்பொழுது நல்ல மாரிகாலம். யஜ மானன் தேடிக்கொண்டு வருகிற செய்தி கேள்விப்பட்ட வுடனே அந்தச் சிறுவன் ஏதேனும் ஒரு வண்டியிலேறிக் கொண்டு போனால் எப்படியாகுமோவென்று பயந்து காலால் நடந்து கனடா தேசம் போகப் புறப்பட்டான். அப்படிப் பிரயாணம்போகையில் அவனது கால்களிரண்டும் பனியால் வெறித்து வெடித்துத் தீராத புண்களுண்டாகிக் கடைசியில் அந்தக் கால்களையே வெட்டிவிடும்படியாக நேரிட்டது.

இது நடந்த சில வருஷங்களுக்குப்பிறகு எட்வர்ட்டு பீச் சர் என்னும் துரைசானி ஸ்ட்டோ துரைசானியின் மகள் ஒருத்திக்கு அனுப்பிய கடிதத்தில் இதைப்பற்றி ஒரு சங்கதி

யெழுதினுள். அதாவது "இப்பொழுது நடக்கிற இந்தக் கொடிய செய்கைகளைக் கேட்டால் எப்படிப்பட்டவனுக்கும் மிகுந்த கோபமுண்டாகும். ஆனாலும் நானென்னசெய்யக் கூடும். என்னுல் கூடியவளவையில் யோசித்தேன், என்னுல் அவ்வளவு பெரியகாரியம் செய்து முடிக்கச் சாத்தியப்படா தென்று தோன்றுகிறது. ஆனால் அதைச் சாதிக்கத்தக்க சக்தியுள்ளவர் ஒருவர் இருக்கிருர். அப்படியே நான் உன் தாயாருக்கு இந்தக் கொடிய செய்கைகளைப்பற்றிப் பல கடிதங்கள் எழுதினேன். அவற்றுள் ஒரு கடிதத்தில், அம்மா! உன்னைப்போல எழுதும் திறமையை எனக்குக் கடவுள் அளித்திருப்பாரானுல், இந்த அடிமை வியாபாரத்தைப் போன்ற பாவச்செய்கை உலகில் வேறுண்டோவென்று உலகத்தார் அனைவரும கோபாவேசங் கொள்ளும்படியான விதமாக எழுதிவிடுவேன் என்று குறித்துக் காட்டினேன்" என்பதாம்.

பிரன்ஸ்விக்கு நகரில ஒருநாள் அவர்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும்போது இந்தக் கடிதம் சேர்ந்தது; அதை ஸ்டோ துரைசானி வாங்கிப் படித்தாள். அதில் இந்தச் சங்கதி வந்தபோது நாற்காலியில் சார்ந்துகொண்டிருந்தவள் கையில் அந்தக கடிதத்தை நசுக்கிக்கொண்டே மிகக ஆக்குரோஷத்துடன் நிமிர்ந்தெழுந்து "அப்படியே நானென்று எழுதுவேன்; நான் உயிரோடிருந்திர மிருக்கக் கடவுள் கருணைகூர்வாரானுல், அப்படியே எழுதி முடிப்பேன்" என்று சொன்னுள்.

அவள் டீகரோவர் சரித்திரம் எழுதியதற்கு இதுதான் மூலகாரணம்.

மனிதர்களை அடிமையாக விலைக்குவாங்கி ஆளுவது ஒரு குற்றமான செய்கையென்று உலகத்தார் அனைவரும் உணரும் படி செய்வதான இந்தச் சிறந்த கதை எழுதுகிற காரியம்

உடனே செய்து முடிக்கப்படவில்லை. 1850-ம் வரு டிசம்பரில் ஸ்ட்டோ துரைசானி யெழுதுகிறதாவது, "என் சகோதரி யெழுதிய கடிதத்திற்காக அவள் விஷயத்தில் நான் மிக்க நன்றியுள்ளவளாகிறேன்; அக்கடிதத்திற்கு நான் சீக்கிரமே பதிலெழுதுகிறேன்; இரவில் குழந்தை யென்பக்கத்தில் படுத்துத் தூங்கும்படி யிருக்குமளவும் ஒரு காரியமும் அதிகமாகச் செய்ய என்னாலாகாது; எதையும் மெதுவாகவே செய்கிறேன். நான் உயிரோடு மாத்திரமிருந்தால் இவ்விஷயத்தை எழுதி முடிக்கத் தடையிராது மெய்த்தொழில் ஒன்றுமே மெய்ப்பயக்கும்" என்றெழுதினாள்.

1851-ம் வரு பிப்ரவரியில் ஸ்ட்டோ துரைசானி பிரென்ஸ்விக்குக் கல்விச்சாலையைச் சேர்ந்த ஆலயத்தில் ஒரு காரியமாய் உட்கார்ந்திருந்தாள். அந்தக்ஷணத்தில் திடீரென்று அவள் மனத்தில் ஒரு படத்தைப் பிரித்துப் பார்ப்பதுபோல் டாம் என்கிற நீக்ரோவினுடைய மரணகாட்சி நன்றாகத் தோன்றியது. அத்தோற்றம் உடனே கண்ணீர் விட்டழும்படி அவ்வளவு பலமாக மனத்தை உறுத்தியது. அப்போது கண்ணீர் வரவொட்டாமல் தடுப்பதே மிகுந்த பிரயாஸமாயிற்று. பிறகு அவள் வீட்டிற்குத் திரும்பிவந்தவுடனே கடிதமும் எழுதுகோலு மெடுத்துக்கொண்டு தானாகவே தன் மனத்தில் தோன்றின அத்தோற்றத்தின் விவரங்களை யெழுத ஆரம்பித்தாள். முதலில் தன் குடும்பத்தை யெல்லாம் தன்னைச்சுற்றி உட்காரவைத்துக்கொண்டு, தான் என்ன எழுத வேண்டுமென்று மனத்தில் நினைத்திருந்தாளோ அதை அவர்களுக்குச் சொல்லிக் காட்டினாள். அது கேட்டுப் பத்து வயதும் பன்னிரண்டு வயதுமான அவளுடைய இரண்டு சிறு குழந்தைகள் கேவிக்கேவி அழ ஆரம்பித்தன. அப்படி யழுதுகொண்டே ஒரு குழந்தை "அம்மா! உலகில் அடிமைப் படுவது மிகவும் கொடுமையானது" என்று சொல்லிற்று.

அப்பால் இருபத்தைந்து வருஷமான பிறகு ஸ்டோ துரைசானி அக்காலத்திலிருந்த தன் செய்கையைப்பற்றித் தன் பிள்ளைக்கு எழுதுகிறாள். "நீ குழந்தையாயிருந்த ஒரு மாரிகாலம் எனக்கு இப்பொழுது ஞாபகம் வருகிறது. அப்பொழுது நான் நீக்ரோவர் சரித்திரம் எழுதிக்கொண்டிருந்தேன். நமது தேசத்தார் அடிமைகள் விஷயத்தில் செய்யும் கொடுமையும் அக்கிரமமும் கண்டு என் மனம் மிகவும் நொந்து, அதனால் அதற்குப் பரிகாரமுண்டாகும்படி ஏதாவது கொஞ்சம் செய்யும்விஷயத்தில் எனக்குத் திறமையளிக்க வேண்டுமென்றும், நான் கூறுவதை யெல்லாரும் கேட்கும்படி செய்ய வேண்டுமென்றும், கடவுளை நான் பிரார்த்திக்கலானேன். அன்றியும் இராத்திரிதோறும் உன் பக்கத்தில் படுத்துத் தூங்கும்பொழுது அடிமைகளாகப் பிடிபட்டுப் போயிருக்கும் குழந்தைகளின் தாய்மார்களுடைய நினைவுவந்து அவர்களுக்காகக் கண்ணீர்விட்டுப் புலம்பலானேன்" என்பதாம்.

இந்த வியப்புள்ள சரித்திரம் 1851-ம் ஞு ஜூன்மீ எழுத ஆரம்பிக்கப்பட்டது. அது முடிவதற்கு 1852-ம் ஞு ஏப்ரல்மீ 1௳ வரையில் சென்றது. அந்தக் கதை கேட்கக் கேட்க மிகவும் விரும்பத்தக்கதாயிருந்ததனாலும், பின்னும் விசேஷமாகப் பலவிஷயஞ் சேர்க்கவேண்டுமென்று பலர் வேண்டிக்கொண்டதனாலும், அவளுடைய ஊக்கந் தணியாதிருக்கும்படி பலர் அவளை உற்சாகப்படுத்திக்கொண்டிருந்ததனாலும், அப்படியே அவள் மிகுந்த ஆவேசங்கொண்டவளாகி, உலகத்திலுள்ள மிகக் கொண்டாடத்தக்க அரிய பெரிய புத்தகங்களோடு ஒப்பிடத்தக்கதான உத்தம நடையில் அதை யெழுதி முடித்தாள். ஆயினும் அவள், "இப்புத்தகத்தை யெழுதி முடித்தது நானன்று; அது தனக்குத்தானே யெழுதி முடிந்தது; இப்புத்தகத்தைப் பிரசுரப்படுத்தியதைப் பற்றிய அருமையெல்லாம் கடவுளுடையதே; இதை யெழுதுவ

தற்கு நான் அவர் கையில் ஒரு சாதாரணமான கருவிபோலவே நின்றேன்" என்று எழுதினாள்.

கடைசியில் அப்புத்தகம் முடிவுபெற்றது; அப்படி அவள் தன்னால் செய்யக்கூடியதைச் செய்து முடித்து, மற்றதைப்பற்றிக் கடவுளை நம்பித் தன் காரியத்தில் கண்ணாயிருந்தாள். அந்தப் புத்தகம் பிரசுரமானவுடனே முதல் நாளிலேயே மூவாயிரம் பிரதி செலவாகி, இப்புத்தகத்தை யாராவது கண்ணெடுத்துப் பார்ப்பார்களா? இப்புத்தகம் செலவாகுமாவென்றிருந்த சந்தேகம் நீங்கிவிட்டது. உடனே மறுபதிப்புப் பிரசுரமாயிற்று. ஏப்ரல் மீ 3-வது பதிப்பு வெளிப்பட்டது. ஒரு வருஷத்திற்குள் 120 பதிப்புப் பிரசுரமாகி மூன்று லட்சம் புத்தகம் விற்பனையாகி விட்டது. இரண்டொரு தினத்திற்குள்ளே அந்த ஏழைப் பண்டிதருடைய பெண்சாதியின் பெயர் உலகமெங்கும் பிரசித்தமாகிவிட்டது. அவள் வார்த்தையை எவ்விடத்திலுள்ளவர்களும் மேலாக ஏற்றுக்கொண்டார்கள். அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும் யாவரும் மேற்கோளாக உபயோகப்படுத்தலானார்கள். அவள் அத்தனைகாலமாக தரித்திரத்தினால் பட்ட கஷ்டமெல்லாம் அரைநிமிஷத்தில் ஒழிந்துபோயிற்று. நாதன்ற ஏழைகளைக் காப்பாற்றுவதற்காக அவள் பட்ட கஷ்டத்தினால் அவளுக்கும் விசேஷமான நன்மை கிடைக்கும்படியாயிற்று. இந்தப் புத்தகம் பிரசுரமான நான்குமாதத்திற்கெல்லாம் அவளுக்கு இருபத்தையாயிரம் ரூபாய் கிடைத்துவிட்டது. அவளைப் புகழ்ந்தவர் பலர்; இகழ்ந்தவர் பலர். எந்த விதமானாலும் அவளுடைய பெயர் எங்கும் பிரசித்தமாகிவிட்டது. தென் அமெரிக்காவில் அடிமைகளை வாங்கி வைத்திருந்தவர்களெல்லாம் அவள்மேல் ஆக்கிரகம் கொண்டார்கள். இந்த விஷயம் ஒரு திருஷ்டாந்தத்தால் தெளிவாகும். அதாவது, ஒருவன் இதுவிஷயமாக அவளை எதிர்த்துப் பேச

னான். "புத்தியில்லாத இவள் எழுதிய நீக்ரோ சரித்திரம் எவ்வளவு கேடுகெட்டதாயிருக்கிறதோ அவ்வளவு உலகத்தில் மிகச் சிறந்த ஏற்பாடான அடிமை வியாபாரத்தை நிறுத்தத் தொடங்கிய முயற்சியும் கேடுகெட்டதாயிருக்கிறது. மெத்தப் படித்து அவர் எழுதியதைப் பார்த்தால், கேவலம் ஒரு மூர்க்கத் தனத்தால் எழுதியதென்றே தோன்றுகிறது" என்று நிந்தித்தான்.

"மெய்யது நன்றியிடும்" என்று தெரிந்த ஸ்டோ துரைசானியும் அதற்கு ஏற்ற சமாதானங்களுடனே தானெழுதிய நூலுக்கு விளக்கமாக உரையொன்று எழுதினாள்; எல்லாம் செய்து முடிக்க 1853-ம் வருஷ ஏப்பிரல் வரையில் சென்றது. இந்த வேலை முடிந்தவுடனே, ஸ்காத்லாந்து தேசத்தில் கிளாஸ்கோ நகரத்தில் இந்த அடிமை வியாபார சம்பந்தமாக ஒரு சங்கம் ஏற்படுத்தவேண்டுமென்று அதற்காக இவளை வரும்படி வேண்டியழைக்கவே, இவள் தன் கணவனுடனேயும், சகோதரனான சார்லெஸ் பீச்சருடனேயும் அவ்விடம் போகப் புறப்பட்டாள்.

இப்படிப் பிரயாணத்திற்குச் சித்தமாயிருக்கிற தருணத்தில் லந்தன் நகரத்திலிருந்த இவளுடைய நட்பினளான பாலன் துரைசானி இவளுடைய குடும்பத்து யோகக்ஷேமங்களையும், இவளெழுதிய நீக்ரோவர் சரித்திரத்தின் வரலாற்றையும் விவரமாகத் தெரிவிக்கும்படி எழுதிய கடிதமொன்று வந்து சேர்ந்தது. அதற்கு இந்த ஸ்டோ துரைசானி ஆதிமுதல் அதுவரையுள்ள தன் குடும்பத்து வரலாறுகளையும், தான் நீக்ரோவர் சரித்திரம் எழுதும்படியான முயற்சி தனக்கு உண்டானதற்குக் காரணமுதலிய எல்லாச் செய்திகளையும் வெகு அழகாக எழுதியனுப்பினாள். அதை விவரமாயெழுத இங்கிடமில்லையென்று விட்டுவிடலாயிற்று.

யுத்தம் உண்டாகும் என்ற பயம் பிறந்தது; அது சமயவிக்கு முன்னமே, காயம்பட்டவர்களுக்காக ஏற்பட்டிருக்கிற வைத்தியசாலைகளுக்கு வேண்டிய பண்டங்கள் இன்னவை என்று இராஜகுமாரத்தி விசாரிக்கத் தொடங்கினா.

அந்தச் சமயத்தில் இராஜகுமாரி சக்கரவர்த்தினியாருக்குப் பின்வருமாறு எழுதினுள்:—

"யுத்தகளத்தில் உள்ள வைத்தியசாலைகளுக்கும் போர் வீரர்களுக்கு வேண்டியனவற்றிற்கும் ஏற்கனவே பணம் சேர்க்கப்பட்டு வருகிறது. இந்த உஷ்ணகாலத்தில் வியாதிகளும் காயங்களும் பயங்கரமாக இருக்கும். மட்டித் துணிகளும கந்தைகளும் எவ்வளவு இருந்தாலும போதாது. நான் துப்பட்டிகளும் உட்சட்டைகளும் சம்பாதித்துக்கொண்டிருக்கிறேன். நீர் கொஞ்சம் கந்தைகள் தயைசெய்ய மாட்டீரோ, ஏழு எண்ணிறந்த வீடுகளிலிருந்து வருஷத்துக்கு இரண்டுமுறை பழையதுணிகள் சேகரித்து வைத்தியசாலைகளுக்கு அனுப்பப்படுகின்றன. இப்போது நான் சிலது கேட்கலாமா? இங்கே விட்டில் நாலு டஜன உட்சட்டைகள் தைக்கிறோம. எவ்வளவு துணியானுலும் மெத்தைகள் தைக்க நல்ல மாதிரிகள் ஆனாலும் அங்கிலேயதேசத்து வைத்தியசாலைகளில் உபயோகமுள்ளதாகக் காணப்படுகிற படுக்கையானாலும், வரப் பெறுக்கொள்ள நான் அதிக ஆவலோடிருக்கிறேன்."

சிலநாள் பொறுத்து அவள் எழுதுகிறாள்:—

"வெவ்வேறு வைத்தியசாலைகளிலும் வீடுகளிலும் காயம் பட்டவர்கள் என்னமாயிருக்கிறார்கள் என்று விசாரிக்கப் போய் இப்போதுதான் திரும்பிவந்தேன். என் கணவர் சௌக்கியமாயிருப்பதாயும், ஆனால் ஆறுநாள் ராத்திரியில் வெளியில் படுத்துத் தூங்கவேண்டி வந்ததென்றும், கடைசி மூன்று ராத்திரி மழை விடாமற் பெய்ததாகவும் கேள்விப்பட்டேன். ப்ரஷியா தேசத்துத் தண்டில் விஷபேதி கண்டிருக்கிறதாம்.

இருந்தும் ஒரு போர்ச்சேவகன் மேற்கண்ட வியாதியால் வருந்துகிறான். அது பயங்கரமாகத்தான் இருக்கிறது. சமீபத்தில் யுத்தம் நடப்பதினால் உண்டாகும் துன்பங்களும், வருத்தமும், பயமும் நேரில் பார்த்தவர்களுக்குத்தான் தெரியும். அது என்ன பெரிய உபத்திரவம்! காயம் பட்டவர்களை முறைபடியும் போய்ப் பார்த்தேன். எல்லா வைத்தியசாலைகளும் திட்டமும் சுத்தமும் காற்றோட்டமும் உள்ளவையாயிருந்ததைக் கண்டு சந்தோஷப்படுகிறேன். இவ்விஷயங்களில் வைத்தியசாலைகள் சீர்திருத்தம் ஆச்சரியப்படத்தக்கது."

செப்டம்பர் மீ தத்தில் சமாதானம் செய்யப்பட்டுச் சண்டை முடிந்தது. இவ்வளவு சங்கடகாலத்தில் ஜனித்த இராஜகுமாரியின் குழந்தைக்கு ட்ரீன் (Irene) என்று பெயரிடப்பட்டது. மிகுந்த விசாரத்துடன் எதிர்பார்த்திருந்த தேசசமாதானத்துக்கு ஞாபகமாக இந்தப் பெயர் வைத்தார்கள்.

சொற்பகாலத்திற்குமுன் நேரிட்ட யுத்தங்களின் கொடுமைகளைக் குறித்த இந்தக் கதையைப் படிக்கிற இந்துதேசத்து ஸ்திரீகள் தங்கள் தேசம் அதிக பலமாகக் காக்கப்பட்டிருக்கிறபடியால் அதில் நூறு வருஷமாக யுத்தங்களால் உண்டாகிய தீமைகள் ஒன்றும் நேரிடவில்லையென்று சந்தோஷப்பட வேண்டும். தங்கள் புருஷர்கள் தங்கள் தேசத்திற்காக யுத்தம் செய்து, காயங்களால் அடிபட்டு, ரத்தப்பெருக்கால் உண்டாகும் அபாயங்களை அநுபவிக்கத் தங்கள் மனைவிமாரையும் சகோதரர்களையும் மக்களையும் விட்டுப் பிரிந்துபோகவேண்டிய அவசியம் இல்லை அல்லவா? ஆனதுபற்றி இப்படிச் செழித்துச் சுகவாழ்வு ஓங்கியும் யுத்தம் இல்லாத இந்த நீடித்தகாலத்தை இந்து ஸ்திரீகள் பயன்படுத்திக்கொள்ள வேண்டாமா? அறியாமை, மதிமோசம் என்னும் சத்துருக்களை வென்று, உழைப்பு படிப்பு இவைகளில் காரியசித்திபெற்று அநுகூலப்பட வேண்டாமா? சண்டை சச்சரவுகள் இல்லாத

காலத்தில் அடையும் வெற்றிகள் யுத்தத்தால் கிடைக்கும் ஜயங்களுக்குக் குறைந்தவையல்ல.

சிலநாளைக்குமுன் உண்டான யுத்தத்தின் அநுபவத்தால், யுத்தகளத்தில் நோயாளிகளும் காயம்பட்டவர்களும் தக்க உதவிபெற ஏற்பாடு செய்வது அவசியமெனத் தோற்றுகிறது. வெள்ளம் வருவதற்கு முன்னே அணை போடவேண்டும்.

ப்ளாரென்ஸ் நைத்திங்கேல் பெருமாட்டியின் நல்ல உபாயத்தையும் அவள் கிரிமியா யுத்தத்திலும் அதற்குப் பிறகும் செய்த நன்மையையும் இந்த இராஜகுமாரி மறந்துபோகவில்லை. அவளுக்கு ஸ்வபாவத்திலேயே நோயாளிகளைப் பாதுகாப்பது முதலான காரியங்களில் அதிக விருப்பமுண்டு. ஆனதுபற்றி "துணைசாணிகளின் சங்கம்" ("Ladies' Union") ஒன்று ஸ்தாபிக்க அதிக சிரமமெடுத்துக்கொண்டாள். அந்தச் சங்கத்தில் எல்லா வகுப்புத் துணைசாணிகளையும் சேருமபடி தூண்டினாள். 1867-ம் வருஷத்தில் ஆறு பெருமாட்டிகளும் இரண்டு வைத்தியர்களும் கூடிய ஒரு சங்கம் ஏற்பட்டது. அதற்கு இராஜகுமாரத்தி அக்கிராசனாதிபதி. தலைச்சங்கம் இராஜகுமாரியின் அதிகாரத்தின் கீழும் மற்றச் சபைகள் தேசமுழுவதும் பரவியும் இருந்தன. இந்தச் சங்கங்களின் நோக்கம், யுத்தகாலத்தில் சேனைகளுக்கு உபசாரணை செய்வதற்கும், சமாதானகாலத்தில் வைத்தியசாலைகளின் உபயோகத்துக்கும், ஏழைகளின் சகாயத்துக்கும், தனவான்களைப் போஷிக்கவும், முக்கியமாக எங்கெங்கே உதவி வேண்டுமோ அங்கெல்லாம் உதவிசெய்யவும், தக்கதாக அநேகதாதிமார்களைப் பழக்குவதற்கும்தான். இரண்டு வருஷத்திறகெல்லாம் "லேடிஸ் யூனியன்" என்னும் சங்கத்தில் 2500 குலமாதர் சேர்ந்தனர்.

இராஜகுமாரி பரோபகாரமான இந்த காரியத்தை ஆரம்பித்தகாலத்தில், விவாஹமாகாத ஸ்திரீகள், பெண்பிள்ளைகள்

இவர்கள் நிலைமையைச் சீர்ப்படுத்துவதிலும் சாதாரணமாகப் பெண்கல்வியை விருத்திசெய்வதிலும் கண்ணுங் கருத்தும் வைத்திருந்தாள். பெண்களின் கைத்தொழிலை விருத்திசெய்யும்பொருட்டு "ஆலிஸ் பஜார்" என்று பெயருள்ள ஒரு ஸ்திரமான கடையை ஸ்தாபித்து அதில் ஸ்திரீகள் தைத்த துணிகள் முதலானவற்றை விற்பனை செய்யும்படி ஏற்பாடு செய்தாள்.

மறுவருஷத்தில் தேசத்துச் சனங்களும் தாய்தந்தையரும் சந்தோஷப்படத்தக்கதாக, பட்டத்துக்குச் சுதந்தரவாளியான ஒரு பிள்ளை பிறந்தது. அது ஒரு அழகான குழந்தை. இராஜகுமாரிக்கு வெளியில் அநேக வேலைகளிருந்தாலும், தன் குழந்தைகளை வளர்ப்பதில் உபேட்சை செய்யவில்லை. அவர்கள் ஒவ்வொருவருடைய குணகுணங்களும் நடக்கையும் நாளுக்குநாள் விருத்தியாவதில் அவள் கண்ணாயிருந்தாள். அவர்களைக்குறித்துத் தன் தாயான சக்கரவர்த்தினியாருக்கு அடிக்கடி எழுதிவந்தாள்:—

"என் மக்கள் பெரும்பாலும் நன்னடக்கையும் கீழ்ப்படிவும் உள்ளவர்கள். சிலகாலம் தவிர மற்றெப்போதும் நன்றாய் ஆக்கினைக்குட்பட்டவர்கள். அவர்களைச் சேர்ந்த எல்லாக் காரியங்களிலும் நான் அதிக நெறியுடனும் மனோதிடத்துடனும் இருக்க முயன்றாலும் சில சமயங்களில் பொறுக்கக்கூடாததாய் இருக்கிறது. அவர்கள் அதிக துடுக்கும், சமர்த்தும், தீவிரமுமுள்ளவர்களானபடியால், சற்றுத் தப்பினால் அவர்களுக்கு அதிக தீங்குண்டாகும். நீங்கள் என்னை எப்போதும் எப்படிச் சந்தோஷப்படுத்தினீரோ அப்படியே என் குழந்தைகளுக்கும் இன்பமும் சந்தோஷமும் உண்டாகும்படி செய்வேனாக. நானும் என் மூத்த சகோதரியாகிய விக்கியும் எத்தனைமுறை எவ்வளவு உருக்கமாக எங்கள் அன்பான தாய்தந்தையர்களைக் குறித்துப் பேசுகிறோம். எங்களுக்கு அவர்கள் செய்த நன்மைக்காக அவர்

களுக்கு எவ்வளவு நன்றியுள்ளவர்களாக இருக்கிறோம்; யோசித்துப்பார்க்கில் இது நாங்கள் உங்களுக்கு உண்டாக்கின தொந்தரைகளுக்கும் கவலைகளுக்கும் ஒருவாறு கைம்மாறு கும். எங்கள் பெண்களினது கல்விப்பயிற்சி விஷயமாகத் தாங்கள் சொல்வது எனக்கு முழுவதும் சம்மதமாக இருக்கிறது. அவர்கள் ராஜவம்சத்தில் பிறந்ததற்காக கர்வப் படாதபடி தடுக்க முயல்வதன்றி, பெருமை ஒருவருடைய உண்மையான யோக்கியதையினால் உண்டாகிறதென்றும் காட்டுகிறேன். உமது கடிதத்தை அந்தக் குழந்தைகளின் உபாத்தியாயராகிய துரைசானிக்குப் படித்துக்காட்டி அவர்களை என் அபிப்பிராயத்தையும் தங்கள் கருத்தையும் தெரிந்து கொள்ளச் சொல்லுகிறேன். இராஜகுமாரர்களும் இராஜகுமாரிகளும் மற்றவரைவிட எவ்விஷயத்திலும் மேலானவர்கள் அல்ல. பெருமையும் சிறுமையும் தத்தம் யோக்கியதைக்கு ஏற்றதாயிருக்கும். ஆகையால் அவர்கள் நற்குணமும் அடக்கமும் உற்றவர்களாக இருக்கவேண்டும். பிறருக்கு உதவி செய்தால் தெய்வம் உதவிசெய்யுமாகையால் பிறருடைய நன்மைக்காக உழைப்பதும் அவர்களுக்கு மேற்சட்டமா யிருப்பதுமாகிய இரண்டு கடமைகள் உண்டு. இவ்விஷயத்தில் என் கருத்துத் தங்கள் அபிப்பிராயத்துக்கு முற்றும் இசைந்திருக்கிறது. என் குழந்தைகள் பெரியவர்களாகும்பொழுது இவ்வித நடக்கையுள்ளவர்களாவார்கள் என்று நம்புகிறேன்."

நாட்டுப்புறத்தில் இருந்து எழுதுகையில் அவர் சொல்வது பின்வருமாறு:—

"குழந்தைகள் நாட்டுப்புறத்தில் அங்குமிங்கும் திரிந்து கொண்டு தாமாகச் சந்தோஷிக்கிறார்கள். நாட்டுச் சித்திரக் காட்சியையும் முக்கியமாகக் காட்டுப் புஷ்பங்களையும் பார்த்து இவர்களுக்கு மிக்க புத்திவருகிறது. எமலி என்பவளுக்குச் சில புஷ்பங்களின் பேர் தெரியும். அவள் அவற்றின்

பேரைச் சொல்வதில் எப்போதும் பிசகமாட்டாள். என்னு டைய எல்லாக் குழந்தைகளுக்கும் சிருஷ்டிப் பொருள்கள் மேல் அதிக ஆசையுண்டாயிருப்பதால் இந்த ஆசையை நான் எப்போதும் விர்த்திபண்ணுகிறேன். இப்படிப்பட்ட ஆசை ஜீவகாலத்தை மனோபாக்கியம் உள்ளதாக்குகிறது. "கண்ணில் கண்டது கோடி, காணாதது அனந்தம்கோடி" யாகையால் அவர்கள் எங்கேபோனாலும் தங்களைச் சுற்றி லுமிருக்கிற சிருஷ்டிப் பொருள்களில் அளவற்ற விநோ தங்களைத் தேடிப் பார்த்து எவ்விதத்திலும் சோம்பலடையா மல் மனோ சந்துஷ்டி யுள்ளவர்களாகவும், திர்ப்தி யுள்ளவர்க ளாகவும் இருக்கிறார்கள். நம்முடைய செல்வம் எவ்வளவு கொஞ்சமாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு நம்மு டைய ஆசையும் குறைகிறது. உள்ளதையும் செம்மையாக அநுபவிக்கிறோம். என் குழந்தைகளை என்னால் கூடியமட்டும் சாதாரண குடும்பத்துப் பிள்ளைகளைப்போல் அதிக ஆசைக்கு இடங்கொடுக்கவொட்டாமல் வளர்க்கிறேன். அன்றியும் ஒரு வருடைய கையை எதிர்பாராமல் சுவாதீனமாக இருக் கும்படிக்கும், தங்களுக்குத் தாங்களே உதவிசெய்துகொண்டு பிறருக்கு உதவிபுரியும்படிக்கும் பழக்கிவருகிறேன்.

1870-வது வருஷம், ஆலிஸ் இராஜகுமாரி சரித்திரத் திலும், ஐரோப்பாவின் சரித்திரத்திலும் அதிக முக்கியமா னது. இவ்வருஷ முதலில் லூயிஸ் இராஜகுமாரனும் அதற்கு மேல் விக்டோரியா இராஜகுமாரியும் சிறு இராஜகுமார னும் "செம்பொட்டுச் சுரம்" (Scarlet Fever) என்னும் வியாதியால் வருந்தினார்கள். அது ஒரு ஒட்டுநோய். தாபஜ் வரமும் தொண்டை வலியும் அதிகம். சில தருணங்களில் குடும்பம் முழுவதும் இந்த வியாதிக்கு இரையாவதுண்டு. இக்கொடியவியாதிக்கு ஆலிஸ் இராஜகுமாரி தானே வைத்தி

போபசாரங்கள் செய்ய ஆரம்பிக்க, வியாதி அதிகமாக இருந்தாலும், எல்லாரும் சுலபமாய்த் தேறினார்கள்.

இவ்வருஷம் வசந்தருதுவில் ஜர்மனிக்கும் பிராஞ்சுக்கும் யுத்தம் உண்டாகவே, லூயிஸ் இராஜகுமாரன் தன் சேனையுடன் முனைமுகத்திற் போகவேண்டியதாயிற்று. இராஜகுமாரி ஜூலைம் 25உ கணவனைப் பிரிந்து 'டார்ம்ஸ்டாட்' பட்டணத்திலிருந்துகொண்டு, அக்கம் பக்கத்திலுள்ளவர்களுக்கெல்லாம் உதவிபுரிந்துகொண்டு அவர்களுக்குத் தேற்றரவு பண்ணிக்கொண்டும் புத்திமதிகள் சொல்லிக்கொண்டும் இருந்தாள். அவள் தினந்தோறும், "லேடிஸ் யூனியன்" என்னும் சங்கத்துக்குப் போய் வைத்தியசாலைகளையும், இருப்புப்பாதை ஸ்டேஷன்களில் ஏற்பட்ட நோயாளிகள் சாலைகளையும் பார்த்துவந்தாள்.

வியாதியில் படுகிறவர்களுக்காகவும் காயம்பட்டவர்களுக்காகவும் ஸ்தாபிக்கப்பட்ட ஆலிஸ் சங்கத்தில் யுத்தாரம்பத்தில் வேலைக்குச் சித்தமாகக் கைதேர்ந்த வைத்தியோபசாரம் செய்யும் தாதிமார் 16 பெயர் (Nurses) தேறினர். சில டாக்டர்களுடைய சகாயத்தால், வைத்தியம் கற்பிக்க வகுப்புகளை ஏற்படுத்த, தேறின வைத்தியர்களின் தொகை 164 வரையில் அதிகப்பட்டது. சில ஸ்திரீகளும் பெருமாட்டிகளும் ஒருங்குகூடி, பட்டணத்தின் வழியாகச் செல்லும் காயம்பட்டவர்களுக்கு உண்கிற சோறு வெல்லம்போல் கொள்கிற ஏழைகளானதுபற்றி அவர் இரவிலும் பகலிலும் ஆகாரம் கொடுக்கிறதாக ஏற்றுக்கொண்டார்கள்.

இராஜகுமாரியின் கடிதமே இக்காரியங்களைப் பூர்த்தியாய் விளக்குகிறது:—

"ஆகஸ்டும் 19உ நாள் முழுவதும் என் சொந்தக் காரியத்தைப் பார்க்க, இரண்டு மணிக்கதிகம் அவகாசமில்லை. எங்கள் அரண்மனையைச் சேர்ந்த சாலையிலுள்ள நோயாளிகளை

யும், காயம்பட்டவர்களையும், பார்ப்பதன்றி, தினந்தோறும் நாலு ஆஸ்பத்திரிகளைப் போய்ப் பார்க்கவேண்டும். யுத்தரங்கம் அதிக சமீபமானதுபற்றி எங்களுக்கு வேலை அதிகம். இன்று காலை இரண்டுவண்டிகள் நிறைய வியாதியில்படுகிறவர்களும் காயம்பட்டவர்களும் இங்குவந்து சேர்ந்தார்கள். * * * இவ்வித கோர யுத்தம் இனி உண்டாகாதென்று நம்புகிறேன். இது மிகப் பயங்கரமானது. காயம்பட்டவர்கள் 500 பேருக்கு அதிகம். அவர்களில் சிலர் பிராஞ்சியரும் சிலர் ஜர்மானியரும் ஆம். யாராவது சொஸ்தமானால் அவர்களை வடக்கே அனுப்பிவிடுவார்கள். வியாதி அதிகப்பட்டவர்களை அவ்விடத்திலே நிறுத்திக்கொள்வார்கள். எங்கேபார்த்தாலும் காயம்பட்டவர்களேதவிர வேறொன்றுமில்லை. மன நடுக்கமுறத்தக்க படையாட்கள் எங்கள் கண்ணுக்குத் தப்புகிறதில்லை. எல்லா ஜாதியிலும் தினந்தோறும் அநேகர் விசனமும் துன்பமும் படுகிறார்கள். அநேக நேசர்களும் அறிமுகமானவர்களும் இறந்தனர். இவையெல்லாம் பார்க்க மகா கண்ணராவியாக இருக்கின்றன. சேனைகளும் ஜனங்களும் ஆகிய எல்லாரும் சமாதானத்தைக் கோருகிறார்கள். இவ்வுலகத்தில் யுத்தத்தைப்போல் கொடியதொன்றுமில்லை. இனி வேறொரு யுத்தமும் நேராமலிருக்கவேண்டுமென்பது என் முக்கியமான பிரார்த்தனை."

இப்பயங்கரமான யுத்தத்தின் நடுவில் இராஜகுமாரிக்கு, ப்ரெடெரிக் (Frederick) அல்லது ப்ரிட்ஸ் என்னும் பெயருள்ள இரண்டாவது புத்திரன் பிறந்தான். இக்கஷ்ட காலத்தில், ஜர்மனி தேசத்து வைத்தியர்களெல்லாரும் யுத்தத்தில் விழுந்தவர்களுக்குச் சிகிச்சைசெய்து கொண்டிருந்தபடியால், நமது சக்கரவர்த்தினியார் தன் புத்திரியின் ஸகாயத்துக்காக, ஒரு வைத்தியனையும் வைத்தியோபசாரம் செய்யும் ஸ்திரீயையும் லண்டன் நகரிலிருந்து அனுப்பி இருந்தார்.

இதற்கு ஆறு வாரத்துக்குமேல் இராஜகுமாரி, ப்ரஷியா தேசத்து பட்டத்து ராஜகுமாரருடைய பத்தினியாரான தமது தமக்கையாருடன் வஸிக்கும்படி பெர்லின் பட்டணத்துக்குப் போனாள்.

எட்டுமாதம் மனைவியைப் பிரிந்திருந்து யுத்தம் நின்று பாரிஸ் பட்டணம் பிடிபட்டபிறகு, இராஜகுமாரர் வீடுவந்து ஆலிஸ் இராஜகுமாரியை, டார்ம்ஸடாட் ரெயில் ஸ்டேஷனில் சந்தித்தார். அப்போது அவர்கள் அடைந்த சந்தோஷமும் கடவுளுக்குச் செலுத்தின வந்தனமும் இவ்வளவு அவ்வள வென்று யாரால் அளவிடக்கூடும்? இந்தப் பெரிய யுத்தம் முடிந்த சில வருஷங்களாய் இராஜகுமாரியும் இராஜகுமாரரும் வீட்டோடு தங்கள் வழக்கமான வேலையைப் பார்த்துக் கொண்டு காலம் கழித்தார்கள்.

இராஜகுமாரி சக்கரவர்த்தினியாருக்கு வழக்கப்படி தாம் செய்த காரியங்களைக்குறித்து அடியில் வருமாறு எழுதுகிறாள்:—

"ஸ்திரீகள் கல்வியையும், அவர்கள் நிலைமையையும் சீர்ப்படுத்தும்பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஜர்மனி தேசத்து எல்லாச் சங்கங்களும் இங்கு ஒன்றாகக் கூடும். இங்கிலாந்திலிருந்து சில பெருமாட்டிகளும் ஸ்விட்ஜர்லாண்டிலிருந்து சிலரும், உலாந்தாவில் இருந்து சிலரும் வந்து கூடுவார்கள். நான் ஸ்தாபித்திருக்கிற சங்கங்கள் விஷயமாய் அதிககாலம் செலவழிக்கவேண்டி இருப்பதன்றி, கண்ணுங் கருத்துமாக நடத்தவேண்டி இருக்கிறது. நாங்கள் இங்கே செய்துவருகிற காரியம் சரியானதென்று நினைக்கிறேன். நாங்கள் செய்யக் கங்கணம் கட்டிக்கொண்ட காரியங்களைச் சற்று தயவுசெய்து பார்ப்பீரா? எனது அருமைத்தந்தை அயலாருடைய நன்மைக்காகச் செய்யத்துவக்கின பெருங்காரியத்தில் சொற்பத்தைச் சொற்ப அளவாய் இங்கு செய்ய முயன்

றேன். இதில் நீர் கொஞ்சம் சிரத்தை எடுத்துக்கொண்டால் எனக்கு அதிக சந்தோஷமாகும். சிறைச்சாலையின் குற்றவாளிகளுடைய நிலைமையைச் சீர்ப்படுத்த அதிக பிரயாசை எடுத்துக்கொண்ட மேரி கார்ப்பெண்ட்டர் என்று பெயர்பெற்ற தர்மக்கருத்துள்ள துரைசாணியாரும் மேற்கண்ட பெரிய கூட்டத்துக்கு வந்தனர். அவர் இதை விட்டுப்போவதற்கு முன் இந்தியாவையும் அங்குள்ள சுதேச பாடசாலைகளை, யுங் குறித்து ஒரு உபந்நியாசம் செய்ய யோசித்திருக்கிறார்."

இவ்வருஷம் (1872) டிசம்பர் மீ 14௳ திரும்பவும் நமது சக்கரவர்த்தினியாருக்கும் இராஜகுடும்பத்தாருக்கும் மிக்க வியசனத்தை உண்டாக்கிற்று. பிரின்ஸ் ஆவ் உவேல்ஸ் பிரபுவுக்கு விஷஜுரம் கண்டு அதிக உபத்திரவமாகி டிசம்பர் மீ 14௳ அவர் மிக்க அபாயஸ்திதியில் இருந்தார். எல்லா தேவாலயங்களிலும், இராஜகுமாரர் தேகம் குணப்படும் பொருட்டு பகிரங்கமாக தேவபிரார்த்தனை செய்யப்பட்டது. கடவுளும் இப்பிரார்த்தனைக்குச் செவிகொடுத்து, இராஜகுமாரனைக் காப்பாற்றினர். "தெய்வசித்த மிருந்தால், செத்தவனும் பிழைப்பான்" என்பது உண்மையே.

இராஜகுமாரத்தி தன் தாயாருக்கு,

"14௳ நமக்கு அதிக விசனத்தைத்தரும் மறக்கத்தகாத தினம். அது நமது குடும்பத்துக்கு மிகப் பரிசுத்தமான தினம். அந்த தினத்தில் ஒரு பெரிய மகாநுபாவர் இவ்வுலக வாழ்க்கையைத் துறந்தார். அப்படி அவர் இவ்வுலகத்தினின்று நீங்கியும், அவர் செய்த காரியங்கள் அழியாமல் தலைமுறை தலைமுறையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. அத்தினத்தில் அவர் முடிக்காதுவிட்ட காரியத்தை வேறொருவர் நிறைவேற்றும்படியா யிருந்தது. அவர் குடும்

பத்துக்கும் அவரைச் சேர்ந்த எண்ணிறந்த ஜனங்களுக்கும் கடவுள் க்ஷேமத்தை அளிப்பாராக" என்று எழுதினுள்.

1873-ம் வருஷத்தில் ஆலிஸ் ராஜகுமாரத்தியானவள் இத்தாலியாதேசத்தில் சஞ்சாரம்செய்து அங்குள்ள சிறந்த சித்திர சில்பங்களைக் கண்ணோட்டமிட்டு வந்தாள். அவைகளைப் பற்றி முன்னமே படித்தும் கேட்டும் மனதினுல் ஊகித்தும் இருந்தவள், அற்புதமான அந்தக் காட்சிகளை இப்போது நேராகத்தன் கண்களால் கண்டு நிசம்தான் என்று களித்தாள். உரோமபுரம் என்னும் நகரத்தில் அழகான சித்திரங்கள் அமைந்த அடுக்கடுக்காக ஆகாயமளாவியிருந்த கட்டடங்களும் தேவாலயங்களும் நாள்பட்டுக் கிலமாயிருக்கும் மண்டப நாற்கோபுரங்களும் பற்பல உண்டு. டில்லிநகரத்தை பற்றி இந்தியாதேசத்து உரோமபுரி என்று ஒப்பிட்டு வருவதுண்டு; டில்லியிலும் அம்மாதிரியாகவே பாழடைந்து கிலமான கட்டடங்கள் அநேகமிருக்கின்றன. ஆலிஸ் ராஜகுமாரி தனது ராஜவம்சத்துக்கடுத்த மரியாதைகளையும் உபசாரங்களையும் பெற்றுக்கொள்வதனுல் நேரிடும் தாமசத்தையும் அசௌகரியத்தையும் நினைத்து, அவள் தன்னை இன்னுரென்று வெளியிட்டுக்கொள்ளாமல் சாதாரணமான பிரயாணிபோல் தேசயாத்திரை செய்தாள். படாடோபத்தையும் ஆடம்பரத்தையும்விட மனக்களிப்பும் புத்திவிகாசத்தாலுண்டாகிய ஆனந்தமுமே சிறந்தனவென்று அவள் நினைத்திருந்ததற்கு இதுவே திருஷ்டாந்தம்.

உரோமபுரி தோன்றிய நாள்முதல் மார்க்கஸ் அரிலியஸ் என்னும் சக்கரவர்த்தி காலம்வரையில் அந்நகரத்தின் சரித்திரத்தையும் அதேகாலத்தில் நடந்த நமது தேசத்து விருத்தாந்தங்களையும் ஒத்துப்பார்க்கின் நமது தேசத்தின் நிலைமை இத்தன்மையதென்று தெரியவரும்; ஏனெனில் உரோமராஜ்ஜியத்தார் இங்கிலாந்தைப் பிடித்து சட்டதிட்டங்கள்

ஏற்படுத்தி அதைச் சீர்திருத்தினார்கள். அதுபோலவே இப்போது இங்கிலீஷ் ராஜ்ஜியத்தார் இத்தேசத்தில் ராஜ நீதி முறைகளை ஏற்படுத்தி வருகிறார்கள்.

உரோம ராஜ்ஜியத்தாரைப் பற்றியும் பார்சிகம், எகிப்த்து, க்ரீஸ், சீனா முதலிய தேசங்களிலுள்ள நாநாவித ஜாதியார்களைப்பற்றியும் நமது தேசத்துப் பெண்பிள்ளைகள் சுலபமாய்ப் படித்துத் தெரிந்துகொள்ளும்படியாக இத்தேச பாஷை கிரந்தங்கள் இல்லையென்பது மெய்தான். ஆனால் அப்படிப்பட்ட சரித்திரங்களைப் படிக்க அவர்களுக்கு விருப்பமுண்டானா லல்லவோ அவர்களுக்குத் தகுந்த கிரந்தங்களும் எழுதப்படும். அவர்களோ ராமாயணம் பாரதம் இவ்விரண்டொழிய வேறொன்றும் அறிந்தவரல்ல. இவ்விரண்டும் மிகச் சிறந்த கிரந்தங்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. அவைகளை எவ்வளவு படித்தாலும் தகும். ஆயினும் ஒரேவிதமான புத்தகங்களைப் படித்துக்கொண்டிருந்தால் மற்றவைகள் வேண்டாவோ? மூக்கினால் மோந்து, கையினால் தழுவினாலே போதும், கண்ணாலே பார்க்கவேண்டியதில்லை யென்பதுண்டோ? பற்பல விதமான புத்தகங்களைப் படித்தால்தான் நமது புத்தி விசாலமடைந்து விவேகம் விளங்கும். நாடோறும் செய்ததையே செய்துகொண்டு முன்னமே அலுப்படைந்திருக்கும் நமது வாழ்வு வெவ்வேறு ஞானரசங்களாலேதான் களிப்படையும்; அன்றியும் நவநவமான சீர்மைகளிலும் புதிதுபுதிதான ஜனங்களிடத்திலும் மனோவியாபாரம் செய்துகொண்டு இக்காலத்திலுடையவர்கள் மாத்திரமல்ல, சில நூற்றாண்டுகளுக்கு முன் ஜீவித்திருந்த ஜனங்களுடைய நடையுடை பாவனைகளை யறிந்து அக்காலத்துக்கும் இக்காலத்துக்கும் உள்ள தாரதம்மியங்களையும் ஆராய்ந்தறியலாம். ஆலிஸ் ராஜகுமாரத்தியானவள் இத்தாலியா தேசத்தைப்பற்றியும் உரோம புரியைப்பற்றியும் முன்பே படித்திருந்தபடியால் பிறகு அத்

தேசத்தைப் போய்ப் பார்த்தபோது மிகவும் ஆனந்தகரமா யிருந்தது.

திரும்பி சுதேசம்வந்து சேர்ந்தவுடனே அவளுக்கு ஒரு பெரிய துன்பத்தை உண்டுபண்ணி தெய்வம் அவளைச் சோதித்தது. ஒருநாட் காலையில் அவளுடைய இரண்டு ஆண்குழந்தைகளும் அவளுடைய படுக்கை யறைக்குவந்து, காலைவந்தனம் செய்துவிட்டு விளையாட்டாக அங்குமிங்கும் சந்தோஷமாக ஓடிக்கொண்டிருந்தபோது அவர்களில் ஒரு அருமையான பிள்ளை கம்பியில்லாத ஜன்னல்வழியாகத் தவறிச் செங்கல்படுத்தியிருந்த கீழ்த்தளத்தின்மீது விழுந்துவிட்டான். இந்தியாவில் ஏறக்குறைய எல்லா வீடுகளும் தரையோடு தரையாய்க் கட்டப்பட்டிருக்கின்றன; யோரோப்பாவிலோ வீடுகள் பெரும்பாலும் ஒன்றின்மேலொன்றாக அடுக்கடுக்காய் அனேக மாடிகளடங்கியிருக்கும். குழந்தையை ஓடிப்போய் எடுக்கும்போது பிரக்ஞை தப்பியிருந்தது. சற்றுநேரத்துக்கெல்லாம் தாயின்மடியிலேயே யிறந்துபோய் விட்டான். என்ன செய்வாள் பாபம்! விசனம் மூண்டு ஏக்கம் பிடித்து சொல்லாதகாலம் சொல்லாமல் வந்ததே என்று மனது தேறுதலை அடையவேயில்லை; அப்படியிருந்தும் "மலைகலங்கினாலும் மனங்கலங்கப் போகாது. சிலநாள் கழித்து ஒருவருக்குக் கடிதம் எழுதும்போது நாம் படும் துயரத்தினின்றும் நாம் இனி யடையப்போகிற துன்பத்தினின்றும் நீங்கி பாலகன் பரலோகத்தில் சௌக்யமாயிருக்கிறான் என்பதை நினைத்துப் பார்த்து பூரணமாய் மனந்தேறியிருக்கிறோம்" என்று எழுதியிருக்கிறாள்.

அப்புறம் சிலமாதகாலம் சென்றபிறகு அவள் எழுதினதாவது:—"மனிதர்களுக்குத் துன்பம் வரும்போது வீணில் வந்துவிட்டுப் போகிறதில்லை. அந்தத் துக்கமும் ஒரு அனுகூலத்தைப் பண்ணும். ஆயுட்காலமோ நாளென ஒன்றுபோல

காட்டி வாள் அறுப்பதுபோல் ஒவ்வொரு தினமாக நமது உயிர்வாழ்க்கை குன்றுகிறது என்று எண்ணுதபடி ஓடிக்கொண்டேயிருக்கிறது. நல்ல காரியத்தைச் செய்து பிறருக்கு நன்மையை விளைவிப்பதும் அப்படி ஓடுகிறநாளிலேதான் செய்தால் செய்தது; பாராக்காயிருந்து செய்யாமல் வீண்போது போக்கினாலும் அந்தநாள் ஓடாமல் நிற்காது. ஆகையால் எந்த காரியத்தையும் இன்றைக்காகிறது நாளைக்கு ஆகட்டுமென்று அசட்டைசெய்யக் கூடாதென இப்போது எனக்குத் தெளிவாய்த் தெரிகின்றது. குழந்தைகள் நாளுக்குநாள் வளருகிறார்கள்; அவர்களுக்குத் தகுந்தகாலம் வந்து உலகவாழ்க்கையில் நாட்டமாயிருக்கும்போது நாம் அவர்களுக்குச் செய்யப்போகிற சகாயம் வேறொன்றுமில்லை; தங்களுக்கு இடையூறுகள் நேரிடும்பொழுது தங்களை அன்பாகத் தழுவிச் சமாதானம் செய்யத் தாம் பிறந்து வளர்ந்த வீடு ஒன்று இருக்கிறது என்கிற எண்ணம்மாத்திரம் அவர்களுக்கு உண்டாகுமேயானால் அதுவே போதும். என்னுடைய குழந்தைகளுக்கு இதுதவிர வேறு சகாயம் செய்ய நான் ஆசைப்படவில்லை" யென்றாள்.

இதற்கு அடுத்த வருஷம் ராஜகுமாரத்திக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ப்ரின்ஸெஸ் மே என்று பேர். 1874-ம் வருஷம் கோடைகாலத்தில் குளிர்ச்சியான கடற்கரையோரத்தில் வாசஞ்செய்யப் போனார்கள். அப்படி வசிக்கும் காலத்தில் தான் பொழுதுபோக்கின விதங்களை அடியில்வருமாறு அவளே சொல்லியிருக்கிறாள். அதெப்படியெனில், பொழுதுவிடிந்து 8½-மணிக்கு காலைபோஜனம் பண்ணுவோம்; பிறகு சிறுகுழந்தையை எடுத்துக்கொண்டு பெரிய குழந்தைகளுடனும் வெளியேபோய் உலாவிவர 11-மணியாகும்; பிறகு வீட்டுவேலைபார்க்கவும் தர்மகாரிய விஷயமான காரியங்களைச் செய்யவும் அப்புறம் 1-மணிக்கு இரண்டு பெண்களுக்கும் ஒன்றின்பின் ஒன்றாக பிரெஞ்சுபாஷையைச்

சொல்லிக் கொடுக்கவும் சரியாயிருக்கும். பகல்போஜனம் செய்தபின்பு தபாலுக்குக் கடிதங்களை எழுதிவிட்டு 5-மணி அடிப்பதற்கு முன்னமே வெளியே போவோம். சாயங்கால வேளைகளில் கொஞ்சம் புத்தகம் படித்துவிட்டு ராத்திரி 8-மணிக்கு இரண்டு தோழிப் பெண்பிள்ளைகளோடும் போஜனம் செய்வோம்" என்றாள்.

ராஜகுமாரத்திதான் ஆரம்பித்த தருமகாரியங்களை இடைவிடாமல் செய்துவந்தாள். வைத்தியசாலைகள் விஷயமாகவும் சிகிச்சா உபசாரம் செய்யும் தாதிகள் விஷயமாகவும் பெண்பிள்ளைகளுக்குக் கற்பித்து வேலைகொடுப்பதற்காக ஏற்பட்டிருந்த (ஆலிஸ் ஹொமைட்) என்னும் தருமசாலை விஷயமாகவும் விடாமுயற்சிசெய்து கொண்டேயிருப்பாள். வருஷாவருஷம் ஒரு நாடகம் போடுவித்து, அல்லது ஒரு சங்கீதச்சபைகூட்டி திரவியம் சேகரித்துத் தருமத்துக்காகவே உபயோகப்படுத்துவாள். ஏழை ஜனங்களின் நிலைமையைச் சீர்திருத்துவதற்காக என்னென்ன ஏற்பாடுகள் நடக்குமோ அவைகளிலும் கருத்துவைத்துப் பாடுபடுவாள். இங்கிலாந்தில் இருந்தபோது "ஏழைக்கிரங்கும் தோழி" என்று சிறப்புப் பெயர் பெற்ற மில் என்னும் துரைமகள் சிநேகத்தைச் சம்பாதித்துக் கொண்டு இருவரும் எளியவர்களுக்கு நன்மைசெய்கிறதே விரதமாகக்கொண்டு லண்டன்மாநகரத்தில் பெத்தவும் வருந்தப்படும் ஏழைஜனங்கள் குடியிருக்கும் வீடுகள்தோறும் சென்று அருவருப்பில்லாமல் பார்த்து விசாரிப்பார்கள். அவ்வாறாகவே ஜர்மானியா தேசத்து ஓர் பட்டணத்திலும் ராஜகுமாரத்தியானவள் தன் மகிமையை வெளியிடாமல் இன்னாளென்று தெரிவிக்காமல் வலதுகை கொடுத்தது இடதுகை அறியாதபடி சகாயங்கள்செய்து, ஏகாந்தமாகப் போய்க் கூலிவேலைசெய்யும் ஏழைகளின் அசுத்தமான வீடுகளில் நுழைந்து நுழைந்து பார்த்து அவர்கள் சுகமாகவிருக்க

வீடுகட்டிக்கொள்வதற்காக நல்ல இடம் சம்பாதித்துக் கொடுத்தாள்.

இவ்விதமான காரியங்களை நமது தேசத்து ராஜாக்களும் ஜமீன்தார்களும் ஐசுவரியவான்களும் செய்வது எப்போது? நமது ஜமீன்தார்களுடைய திரவியமானது எடுப்பாரும் பிடிப்பாருமாகச் சோம்பேறிப் படையை வைத்துக்கொண்டு, மட்டுமிதமில்லாத சம்மானங்களிலும் வீணை வியாச்சியங்களிலும் நவரத்தினங்களிழைத்த அங்கிகளிலும் சிரோபூஷணங்களிலும் வீண்விரயமாகப் போய்விடுகிறது. அவர்களை நம்பியிருக்கும் எளிய குடிகளோ வயிற்றுக்கில்லாமல் அரை வயிறு கால்வயிறு கஞ்சி குடித்துக்கொண்டும் பட்டினிகிடந்தும் குடல்காய்ந்து நோயினால் வருத்தப்பட்டு ஏனென்று கேட்பாரில்லாமல் திக்கற்றவர்களாய்ச் சாகிறார்கள். நம்முடைய ஏக சக்ராதிபதியாகிய இராணியாருடைய குமாரத்தியே தமது ஏழைக்குடிகளின் கஷ்டத்தையும் துயரத்தையும் தாமே நேராகக் கண்கள் கூசாமல் பார்த்து அவர்களுடைய குறை கூறுபாடுகளைத் தீர்க்க என்னென்ன செய்யவேண்டுமோ அதையெல்லாம் செய்ய முயன்று பிறரையும் அவ்வாறே செய்யும்படி தூண்டுவாளேயானால் இத்தேசத்துத் தனவான்கள் தங்கள் நாட்டு ஏழைகளிடத்தில் மனதிறங்க வேண்டுமென்று சொல்வது தகாதகாரியமோ! சுபாசுபங்கள் நடத்தும் விசேஷ தினங்களில் ஏழைகளுக்கு அன்னமிடுவதும் பூரிகொடுப்பதும் இதுபோன்ற தற்கால தருமங்களும் நீடித்து நிற்காத உபகாரங்களும் மாத்திரமே போதாது; பலவிதத்திலும் அவர்களைத் தயவாக நடத்திக் குடியிருக்க நல்லவீடுகள் கட்டுவித்துக் கல்வியும் கைத்தொழிலும் கற்பிக்கவேண்டும். மச்சுமாளிகைகளையுடைய நமது தேசத்தவர்கள் தங்களுடைய திரவியத்தை இத்தன்மையான சிறந்த தருமங்களில் செலவு செய்கிறார்களா? அப்படிச் செய்கிறதாயிருந்தாலும் அவர்களைச்சேர்ந்த

ஸ்திரீகள் அப்படி செய்யவொட்டுவார்களோ! அறிவின்மையும் நற்காரியங்களில் வெறுப்பும் ஆடையாபரணங்களில் ஆழ்ந்த அபிமானமும் சுயகாரியமும் தங்கள் சுகமுமே பெரிதென்கிற எண்ணமும் ஆகிய இந்த இருப்புச் சங்கிலிகளைக் கொண்டு நமது பெண்பிள்ளைகள் புருஷர்களைக் கெட்டியாகக் கட்டிப்போட்டிருக்கிறார்கள். பெண்பிள்ளைகளுக்கு விமோசனம் பிறந்து எப்போது இந்த துர்க்குணங்களிலிருந்து விடுபடுவார்களோ? அதுதான் ஏழைகளுக்கு நற்காலம்; க்ஷேமலாபமுண்டாகும், அதிக ஆனந்தமும் அப்போதுதான் கிட்டும். எப்படியென்றால் தங்களை மறந்து அன்னியமில்லாமல் தவிக்கிற பிறருக்கு உதவிசெய்வதுதான் பேரின்பம் என்று அப்போது அறிவார்கள். பூபாலர்கள் "ஊரெங்கும் பேர், வீடு பட்டினி" என்னும் தூஷணைக்கு ஆளாகமாட்டார்கள். கைகோட்டி வாங்குவதைவிட கைமேலாகக் கொடுப்பது எப்படிப்பட்ட பாக்கியம்! பற்பல தருமசாலைகளின் காரியங்கள் எப்படி நடந்துவருகின்றன என்பதையும் ஏழைகளின் வருத்தத்தை மாற்றுவிக்க என்னென்ன முயற்சிகள் செய்யப்படுகின்றன என்பதையும் ராஜகுமாரத்தி அடிக்கடி விசாரித்துக்கொண்டேயிருப்பாள். அடிக்கடி செம்படவர் குடிசைகளில் நுழைந்து பார்க்கிறதும் நோயாளிகளைப் பார்த்து விசாரிப்பதும் எல்லாரிடத்தில் அன்பும் ஆதரவுமாயிருப்பாள். ஞாயிற்றுக்கிழமையில் கூடும் வேதப் பள்ளிக்கூடத்தைப் பார்க்கிறதென்றால் அவளுக்கு மிகவும் சந்தோஷம். "இந்தப் பள்ளிக்கூடத்துப் படிப்பு எவ்வளவு உபயோகம்! எவ்வளவு உபயோகம்!" என்று அவள் அடுத்தடுத்துச் சொல்வதுண்டு.

ஆனால் இப்படி தருமசிந்தையும் பரோபகாரகுணமுமுள்ள இவளுடைய ஆயுட்காலம் குறுகிவிட்டது. ராஜகிரகத்தில் துயரங்கள் ஒன்றின்மேல் ஒன்றாகச் சம்பவித்தன.

1878-ஆு நவம்பர் மாசத்தில் மூத்தபெண்ணுகிய செல்வி ராஜகுமாரத்தி விக்டோரியாள் என்னும் துரைமகளுக்கு உக்கிரமான விஷச்சுரத்துடன் கபசம்பந்தமான வியாதி ஒன்று கண்டது. இது மிகவும் அபாயகரமான தொத்து வியாதி; இந்த வியாதியானது ஒரு குழந்தைக்குப் பிறகு இன்னொரு குழந்தைக்கும் இப்படியே எல்லாக் குழந்தைகளுக்கும் கண்டு தகப்பனுராகிய ப்ரின்ஸ் லூயிஸ் என்பவருக்கும் கண்டது. "பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடுமல்லவா" ஆலிஸ் அக்காலத்தில் பட்ட விசனத்தை அவள் சக்கரவர்த்தினிக்கு அனுப்புவித்த உருக்கமான கடிதங்களும் தந்தி சமாசாரங்களும் இவ்விதமென்று காட்டுகின்றன.

நவம்பர்மீ 8-ம் தேதி தந்தி. "இன்று காலை முதல் விக்டோரியாளுக்கு தொண்டைநோய் கண்டிருக்கிறது. சுரம் தாபச்சுரம் மிகவும் கவலையுற்றிருக்கிறேன்."

நவம்பர்மீ 12-ம் தேதி. "இன்று ராத்திரி முதல் என் கண்மணி ஆலிக்கும் நோய்கண்டு படுத்திருக்கிறுள்."

நவம்பர்மீ 13-ம் தேதி. ஆலிக்குக் கொஞ்சம் குணம் தான். என் செல்வம் மே என்பவளுக்கு தாபச்சுரம் அதிகமாயிருக்கிறது. சிறு குழந்தைக்கும் வந்துவிட்டது. தபிக்கிறேன். கைக்குழந்தைக்காக அவ்வளவு வருத்தப்படுகிறேன்.

மறுநாள் ப்ரின்ஸுக்கும் அவன் தகப்பனுருக்கும் நோய் கண்டுவிட்டது.

நவம்பர்மீ 15-ம் தேதி தந்தி. என் செல்வம் மே என்பவளுக்குக் குணமில்லை. அதிகமாகத் துன்பப்படுகிறேன். எனக்கு மிகவும் பயமாயிருக்கிறது. மற்றிரண்டு குழந்தைகளுக்கும் சுரம் மட்டு.

சின்ன பெண்ணினுடைய தொண்டை அதிகமாக வீங்கியிருக்கிறது. என்னுடைய கணவனுக்கு ஒரே நிதானமாயிருக்கிறது. அதிகமில்லை; ஆலிக்குக் குணமுகமாயிருக்கிறது.

சாயங்கால தந்தி. "மேயின் நோய் முன்போலவே பார்க்க பரிதாபமாயிருக்கிறது. கணவனுக்கு சுரமும் நோயும் அதிகம். மற்றவர்களும் அப்படியே. எல்லாம் கடினமான ஆபத்து விஷயங்கள். மே என்பவளின் நிலை மிக்க பயங்கரமாயிருக்கது." ராணியாருக்கு இப்படிப்பட்ட மனவருத்தம் வந்துவிட்டதேயென்று அழுது அனுதாபப்படாதவர்கள் ஊரில் ஒருவருமில்லை. அவளுடைய குடும்பத்தின் க்ஷேமத்தைக் கருதி அந்தந்த ஆலயங்களில் தேவாராதனைகளும் பிரார்த்தனைகளும் நடந்தன. நவம்பர்௴ 16-ம் தேதி காலையில் "சூரியகாந்தி சூரியகாந்தி" என்று தாயினால் செல்லம் கொஞ்சப்பட்டுவந்த மே என்னும் சிறிய பெண்குழந்தைக்குத் தாய் தகப்பன் மாரிடத்திலிருந்து பிரியும் காலம் நேர்ந்துவிட்டது.

அப்போது ஆலிஸ் ராஜகுமாரத்தி தன் தாயார் சக்கரவர்த்தினிக்கு அனுப்பிய தந்தி. நம்முடைய அருமையான சிறு கண்மணிக்குக் காலம் ஆகிவிட்டது.

கணவனுக்குச் சற்றே குணம்தான். எர்னியாளுக்கு நோய் அதிகமாயிருக்கிறது. எனக்கோ மனோசஞ்சலம் அடங்கவில்லை.

சாயங்கால தந்தி "வருத்தம் சொல்லி முடியாது. ஆனால் தெய்வசங்கற்பத்துக்கு வேறில்லை. அருமையான எர்னியாளுடைய நிலை மிகவும் பயங்கரமானது. மற்றவர்களுக்கோ அபாயத்தினின்று நீங்கினபடியால் கொஞ்சம் குணத்தோடு சேர்க்கைதான்.

நவம்பர்௴ 17-ம் தேதி. எர்னியாளுக்கு ரொம்பவும் குணம்; கடவுளிடத்தில் நன்றியறிபவளா யிருக்கிறேன்.

நவம்பர்௴ 18-ம் தேதி. "நோயாளிகள் எல்லாருக்கும் குணம்தான். சீக்கிரத்தில் நன்றாய் சொஸ்தமாகுமென்று கோருகிறேன். கடைசியாக ப்ரின்ஸேஸ் மே என்னும் குழந்தை 3-மணிக்கு என்னைவிட்டுப் பிரிந்தது."

ராஜகுலத்துப் பெண்குழந்தையாகிய மே என்பவளுடைய சவப்பெட்டியானது முழுவதும் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டது. அது வைத்திருந்த கல்லறைக்குள் அக்குழந்தையின் தாயார் மெல்லச்சென்று முழங்காலிட்டுக் கொண்டு மூடியிருந்த பெட்டியின் ஒரு ஓரத்தை அழுத்திக் கொண்டிருந்து பிறகு எழுந்திருந்து கிறிஸ்து மார்க்கப்படி அந்த ஆத்மாவுக்கு நல்ல கதியுண்டாக வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்துவிட்டு அதற்குப்பின்பு அந்தப் பெட்டியைக் கடைசியாக அன்புடன் கண்ணாரப் பார்த்துவிட்டு மெதுவாக நடந்து மேல்மாடியிற் சென்றாள். அங்கேயும் முழங்காலிட்டுத் தங்கத்தூணைப் பிடித்துக்கொண்டு எதிரேயிருந்த கண்ணாடிமூலமாய் சவப்பெட்டியை வீட்டைவிட்டு வெளியே கொண்டுபோவதைப் பார்த்துக்கொண்டிருந்தாள்; அப்போது அவள் புலம்பாமல் பொறுமையாயிருந்த கோலம் மிகவும் அதிசயத்தைத் தரத்தக்கதே! அவளையும் அறியாமல் அடுத்தடுத்துப் பெருமூச்செறிந்து கொண்டிருந்தனள்.

நமது தேசத்து ஸ்திரீகளுடைய வழக்கம் யாதெனில், அப்படிப்பட்ட துக்கங்கள் நேரிடுகிறவேளையில் உருண்டு புரண்டு ஐயோ அப்பாவென்று கூக்குரலிட்டு அழுவதும் "ஆசரித்த தெய்வமெல்லாம் கட்டோடே மாண்டதே" என்று தெய்வத்தை நொந்துகொள்கிறதும் வாடிக்கை; இப்படிப்பட்டவர்களுக்கு ஆலிஸ் ராஜகுமாரத்தியின் பெற்றமனது காட்டிய திடத்தையும் நெஞ்சடக்கத்தையும் கேட்டால் மிகவும் ஆச்சரியமாயிருக்கும். சகிக்கக்கூடாத துன்பம் நேரிட்டபோது பொறுமையிருக்கவேண்டியது. ஏனென்றால், அதை அவளே அடியில் கண்ட விதமாய் விவரித்துச் சொல்லியிருக்கிறாள்.

பிரியமுள்ள தாயே! இந்தவேளையில் என் மனதைத்தேற்றி ஆறுதல் செய்யும்பொருட்டுத் தாங்கள் அன்பாயெழுதிய கடி

தத்துக்காக வந்தனம் செலுத்துகிறேன். நம்முடைய கண்மணி மே என்பவள் முன்னடி பரமபதம்போய் நம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள்; அவள் சுகிருதத்தால் இனி நம்முடைய கஷ்டம் அவளுக்கில்லை. சூரியகாந்தி போல் அவள் சொற்பகாலம் இருந்து அனுபவித்தது நாம் ஏதோ துளி பாக்கியம் பண்ணியிருந்தபடியாலேதான். ஆனால் ஓ ஓ! மின்னல்போல் காட்டி மறைந்துவிட்டது. நான் விசனத்தில் முழுகியிருப்பதைப்பற்றிப் பேசவில்லை. ஏனெனில், அதைப் பொறுக்கும்படியான சக்தியைக் கடவுள் எனக்குத் தயவாக அளித்திருக்கிறார். இப்படிப்பட்ட துன்பங்கள் நேரிடும் வேளைகளில் நமக்கு விசேஷமான புத்திமதிகள் உண்டாகின்றன. கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று நம்புகிறவர்களுக்கு எது சம்பவித்தாலும் நன்மையின் பொருட்டேயாகுமல்லது வேறில்லை; போனதுபோக உள்ளதைக்கொண்டு நன்றியறிந்தவர்களா யிருக்கவேண்டும். நம்முடைய செயலாலே என்ன இருக்கிறது; "அயன் அமைப்பை யாராலும் தள்ளக்கூடாது; தெய்வமில்லாமலா பொழுதுபோகிறதும் பொழுதுவிடிகிறதும்." எல்லாம் தெய்வாதீனம்; அவருடைய சங்கல்பத்தின்படிதான் நடக்கும் என்கிற முழு நம்பிக்கையுடன் அவருக்குப் பணிந்து நடக்கவேண்டியது நமது கடமை. ஆகையால் நாம் எல்லோரும் இப்படியே கருத்தில் வைத்து ஒருவருக்கொருவர் தைரியம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். அதிர்ஷ்டவசமாக இவ்வுலகத்தில் நம்முடைய உயிர்வாழ்க்கை முடிவற்றதாக இருக்கவில்லையே! இதற்காகக் கடவுளைத் துதிக்கவேண்டும். நம்முடைய பந்து மித்திரர்கள் எத்தனைபேர் பரலோகமடைகிறார்களோ அவ்வளவும் நாம் போகிற வழித்துணையாகிறது; ஏனெனில், அந்தலோகமல்லவோ நமக்கு நிலைமையான மாறாத வீடு!

டிசம்பர்மீ 8-ம் தேதி. ராஜகுமாரத்திக்கு வியாதிகண்டு படுத்துக்கொண்டுவிட்டாள். அந்த தினத்திலேயே அனேக காரியங்களை ஏற்பாடுசெய்து தான் மரணமடைந்தால் இன்னின்னவிதம் நடக்கவேண்டுமென்று கட்டளைகளும் கொடுத்து விட்டாள். வியாதியின் கொடுமைகளை அவள் பொறுத்தது போல் மற்ற யாரும் பொறுப்பது அரிது. வைத்தியர்கள் என்ன பத்தியம் ஔஷதம் சொல்லுவார்களோ அது எவ்வளவு கடுமையாயிருந்தாலும் அணுமாத்திரமும் பிசகாமல் சொன்னபடி செய்துவந்தாள். ஆ ஆ! அந்த நாள்கள் மிகவும் ஆபத்தும் வியாகுலமுமே மிகுந்த கொடிய நாள்கள். அவருடைய நோயைச் சாந்தப்படுத்த என்னென்ன செய்ய வேண்டுமோ எந்த எந்த விதமாக அவளுக்குத் தைரியம் சொல்லவேண்டுமோ அவ்வளவும் குறைவில்லாமல் செய்தார்கள். சில தருணங்களில் தன் கிரககிருத்தியங்களைப்பற்றி உருக்கமாகப் பேசுவாள்; ஊரில் உள்ள ஏழைகளையும் நோயாளிகளையும்பற்றி ஆவலாக விசாரிப்பாள். டிசம்பர்மீ 13௳ வைத்தியர்கள் கைவிட்டு இனி நாம் உண்மையை மறைக்கக்கூடாதென்று தாங்கள் செய்த முயற்சிகளெல்லாம் பயன்படவில்லையென்று ப்ரின்ஸ் லூயிஸ் என்பவருக்குத் தெரியப்படுத்திவிட்டார்கள். டிசம்பர்மீ 14௳ $8\frac{1}{2}$-மணிக்கு மாட்சிமைதங்கிய ப்ரின்ஸேஸ் ஆலிஸ் என்னும் ராஜகுமாரத்தியானவள் ஒரு குழந்தை படுக்கப்போவதுபோல் சாந்தமாகத் தனக்குள்ளே தானே முணுமுணுப்புடன் கடவுளைத் தியானித்துக்கொண்டு இறந்துபோனாள். அன்றையதினம் ப்ரின்ஸெஸ் மே இறந்துபோய் சரியாக நாலுவாரம் ஆயிற்று; அன்றியும் அந்த நாளானது அவருடைய தகப்பனார் ப்ரின்ஸ் ஆல்பேர்ட்டு என்பவர் இறந்து 17 வருஷம் ஆயிற்று. இவ்வாறு ராஜகுமாரத்தியின் வாழ்நாள் சரித்திரம் முடிந்தது.

இந்த உத்தமியின் சரிதத்தைப் படித்தால் "நிர்மலமாக எது உண்டோ, நேசிக்கத்தக்கதாக எது இருக்கிறதோ, நல்லது நல்லது என்று எது பேர்பெற்றிருக்கிறதோ அவைகளைச் சிந்தித்திரு" என்கிற வேதவாக்கியத்தை அனுஷ்டித்தவர்களாக ஆவோமல்லவா? ராஜகுமாரத்தியாகப் பிறந்து அதிக செல்வத்துடன் இருக்கும்படியான பாக்கியம் எல்லாருக்கும் கிடைக்காமற்போனாலும், மனைவிகளாகவும் தாய்களாகவும் பெண்களாகவும் எல்லாரும் இருக்கக்கூடியதாகையால் இவர்கள் எல்லோருக்கும் அவருடைய சரித்திரமானது அவரவர்களுடைய கடமைகளுக்கேற்ற சிறந்த புத்திமதிகளைக் கற்பிக்கத் தக்கதாயிருக்கிறது. அவ்வளவு மாட்சிமை பெற்ற நிலைமையில் இருந்தபோதிலும் எவ்வளவு அடக்கமாகவும் வணக்கமாகவும் கபடமற்று மிருந்தாள்; தனக்குப் பணிவிடை செய்ய எத்தனையோபேர் வேலைக்காரர் இருந்தும் தான் சோம்பலில்லாமல் சுறுசுறுப்பாகவும் உழைப்பாளியாகவுமிருந்தாள்; தன்னுடைய நன்மையைக் கருதி நடக்கும்படி அனேகர் கைகட்டிக் காத்துக்கொண்டிருந்தும் தன்னை மறந்து பிறருடைய நன்மையையே கண்ணுங்கருத்துமாகப் பாராட்டிக்கொண்டிருந்தாள்.

மேலும், தாய் தந்தைமார்களை உறுதியான விசுவாசத்துடன் மேன்மைப்படுத்தி அவர்களுக்குப் பணிந்து நடப்பது தங்கள் கடமையென்று பெண்கள் அறிந்துகொள்ளலாம். புருஷனுக்குச் சுகம்வரினும் துக்கம்வரினும் வேலைசெய்யும் போதும் வேலையொழிந்தபோதும் என்றும் ஒரேவிதமாக அவனை நேசித்து ஆதரிக்கவேண்டும் வழி இன்னதென்று இல்லற தருமத்தை மனைவியா யிருப்பவர் தெரிந்துகொள்ளலாம். குழந்தைகள் படித்து நல்வழியில் நடக்கவேண்டுமென்று உள்ளத்தில் ஆசைப்படுவது மாத்திரமல்லாமல் தானும் அவர்களுக்கு அவ்விதமான கல்விப்பயிற்சி செய்விக்

கச் சுயமாகவே முயலவேண்டுமென்று தாய்மார்களறியலாம். மேலும் தானும் தன் புருஷனும் குழந்தைகளும் வாழ்வதே பெரிது என்று நினையாமல் நோயாளிகளிடத்தில் பரிதாபமும எளியவர்களிடத்தில் இரக்கமும் வைத்துத் தன்னுடைய செல்வச் செல்வாக்குடன் ஒழிந்தவேளையில் பரோபகாரமே பெரிதென்று சிறிது சிறிதாகத் தருமகாரியங்களில் உபயோகித்து எல்லாரிடத்திலும் அன்பும் ஆதரவுமாயிருக்கவேண்டுமென்றால், ஒவ்வொரு பெண்பிள்ளையும் இந்த ஆலிஸ் ராஜகுமாரத்தியின் சரித்திரத்தைப் படித்து உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல் தெரிந்து நடந்துகொள்ளலாம்.

# ELIZABETH QUEEN OF ROUMANIA.

(Carmen Sylva Born 1843.)

## ரொமேனியா நாட்டு இராணியாகிய எலிஜபெத்து.

(கார்மேன் ஸில்வா.)

ஹங்கரிநாட்டில் பலநூற்றாண்டுகளுக்குமுன்னே என்று மழியாத புகழ்பெற்று வாழ்ந்திருந்த ஸெயின்ட் எலிஜபெத்து என்னும் உத்தமியைப்பற்றி நீங்கள் கேட்டிருப்பீர்கள்.

இப்பொழுது நாம் உங்களுக்கு வேறொரு நாட்டிலிருக்கும் எலிஜபெத்தைப்பற்றிச் சொல்ல விரும்புகிறோம். இவள் இக்காலத்திலிருப்பவள். இவளது புகழ், பாடல்களினாலும், கதைகளினாலும், உலகமெங்கும் பரவியிருக்கின்றது. இவள் பேரைக் கேட்டமாத்திரத்தில் எல்லோருமே இவளைக்கொண்டாடுகிறார்கள். ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு நதி அதிகமாகச் சிறப்பித்துக் கொண்டாடப்படுவதுண்டு. அந்தந்த நாட்டில் வாழுகின்றவர்கள் அதன் சம்பந்தமான ஐதிகங்களினாலும், எந்தக்காலத்திலுமுள்ள அதன் அழகினாலும் அதன் மேல் மிக்க வாஞ்சைகொண்டிருக்கிறார்கள். அதுபோல ஐரோப்பாவிலுள்ள ரைன் நதியைப் பார்க்கப் பார்க்க விமர்சையாயிருக்கும்; அதன் இருகரையிலுமுள்ள ஊர்களைப் பார்த்தால் அழகாயிருக்கும். அதன் கரையோரங்களிலுள்ள மலைகளின் உச்சிகளில் திராக்ஷைத் தோட்டங்களும், பாழுங் கோட்டைகளும் நிறைந்திருக்கும். முற்காலத்தில் அந்தக் கோட்டைகளிலிருந்த கள்ள அரசர்கள் கூட்டங் கூட்டமாகச் சென்று அவ்வாற்றங்கரைக்கு அருகிலுள்ள ஊர்களிற்

புகுந்து அங்குள்ளவர்களுடைய பொருள்களையெல்லாம் கொள்ளையாடி வாழ்ந்தார்கள். ரைன் நதிக்கரையில் ஓர் குன்றின்மேலுள்ள நென்வீட் எனும் மலைக்கோட்டையில் 1843-ஞ் எலிஜபெத்து பிறந்தாள். அந்தக் கோட்டையின் பெயராகிய மான்றிபோ வென்பதற்கு ஜர்மன் பாஷையில் "நான் இளைப்பாறுமிடம்" என்று பொருள். அந்தக் கோட்டையின்கீழ் தேவதாரு மரங்களடர்ந்த அழகிய காடுகளுண்டு. அந்தக் கோட்டையின்மேலிருந்து பார்த்தால் கீழே அழகான காடுகளும், பள்ளத்தாக்குகளும், பச்சைப் பசேரென்றிருக்கின்ற வெளிகளும், அவற்றின் நடுவே அந்நதி செல்லுவதும் அழகாயிருக்கும்.

''எலிஜபெத்தின் தாய் தந்தையர்கள் நியுவிட் என்னும் சிற்றரசு நாட்டிற்கு அரசனும் அரசியுமாய் ஆண்டுகொண்டிருந்தார்கள். நியுவிட் ராஜவம்சம் பிரஸித்திபெற்றது; அதில் அரசுபுரிந்த அரசர்களில் பெரும்பான்மையோர் மிகவும் நல்லோர்; கல்வி கேள்விகளால் பெரும்புகழ் பெற்றவர்கள். எலிஜபெத்தின் தந்தையாகிய ஹெர்மான் தத்துவ சாஸ்திரத்தில் கரைகண்ட வித்துவான். அவள் தாயாகிய மேரியா என்பவள் ஆழ்ந்த தெய்வபக்தியுள்ளவள். அவள் தன் மக்களெல்லோருக்கும் கடவுளை வணங்கவும், நோய்கொண்டவர்களுக்கும் ஏழைகளுக்கும் துணைநின்று அவர்களை ஆதரிக்கவும் நன்றாகப் பழக்கிவைத்தாள். தனது மகளாகிய எலிஜபெத்தைப் பயிற்றுவதில்மட்டும் அவளுக்கு அதிக வருத்தமுண்டாயிற்று. அவளுக்குக் குழந்தைப் பிராய முதற்கொண்டே சுறுசுறுப்பும், சுயேச்சையும் அதிகமாயிருந்தனவாகையால், கண்டிப்பாக நடத்தும் போதெல்லாம் அவளுக்குப் பொறுக்கவொண்ணாத கோபமுண்டாகும்.

என்னவெனில் காய்ந்தாலும், மழைபெய்தாலும், பனிகொட்டினாலும், புயலடித்தாலும் தனிமையாகக் காட்டில்

அலைந்து திரிவது அவளுக்கியற்கை. மூன்று ஸெயின்பர்னர்ட் நாய்கள் எப்பொழுதும் அவளைவிட்டுப் பிரியாமலிருக்கும். புயல் பலமாக அடிப்பதையும், சருகுகள் சூறைக்காற்றில் சுற்றிச் சுற்றிப் பறப்பதையும், மரத்திலிருந்து கிளைகள் ஒடிந்து விழுவதையும் காணும்போதெல்லாம் சந்தோஷப் பட்டுச் சுயேச்சையாய்த் திரிவாள். காற்று இரைந்து வீசு வதையும், கிளைகள் ஒன்றோடொன்று உரைந்துகொள்ளு வதையும் காடுகளில் திரிந்து கேட்டுக்கொண்டும், அங்கே இயல்பாக வுண்டாகும் விநோதங்களை ஆனந்தமாகப் பார்த் துக்கொண்டு மிருப்பாள். அவள் வீட்டுக்கு வந்தவுடன் தான் கண்டதின் கருத்து நன்றாய் விளங்கும்படி கவிபாடி எழுதிவைப்பாள். பத்து வயதாகும்போதே அவள் கவி பாட ஆரம்பித்தாள். ஆயினும் அவள் தான் இயற்றிய பாடல்களைத் தன் தாய்க்குக்கூடத் தெரியாதிருக்கும்படி ரக சியமாக வைத்திருந்தாள்.

இப்படிக்கெல்லாம் அவள் தன்னிஷ்டப்படி யிருந்தும், சற்றுநேரம் படித்தும், பியானு வாத்தியத்தை விடாமல் நெடு நேரம் வாசித்தும் வந்தாள். அவள் தாய் ஏழைகளிடத்தில் இரக்கமுள்ளவளென்று முன்பே சொல்லியிருக்கிறோம்; எலிஜ பெத்து குழந்தையா யிருக்கும்போதே தன் தாயார் ஏழை களைப் பார்க்கப் போகும்போதெல்லாம் தானும் அவளோடு கூடவே போவாள்.

ஒருகாலத்தில் எலிஜபெத்தும், அவளுக்கு ஒருவயது மூத்தவனாகிய அவள் சகோதரனும் "ஊரார் பிள்ளையை உடுத்து வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்று நினைத்து ஏழைகளின் குழந்தைகளுக்கு வஸ்திரம் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று, தங்களுக்கென்று கொடுக்கப்படும் பணத்தைப் பத்திரமாகக் காப்பாற்றி வைத்திருந்தார்கள். கையில் கொஞ்சம் பணஞ்சேர்ந்தவுடன் தான் அணிந்தி

ருந்த வெள்ளை மேலாடையைப்போலவே ஆடைகளை வாங்கி அந்தக் கோட்டையினின்று நியுவிட்டுக்குச் சென்று தன் கையாலே அவற்றை அவர்களுக்குக் கொடுக்கத் தனக்கு அனுமதிகொடுக்க வேண்டுமென்று தன் தாயை வேண்டிக் கொண்டாள்.

அவள் தாய் அதைக்கேட்டு, ஏழைக்குழந்தைகளுக்கு வெள்ளை வஸ்திரம் வாங்கிக்கொடுத்தால் சீக்கிரம் அழுக்காகிக் கெட்டுப்போகுமாகையால், கறுப்பான கம்பளமாக வாங்கி அவளிஷ்டப்படியே அங்கே கொண்டுபோய்க் கொடுக்கும்படி சொன்னாள்.

எலிஜபெத்து தான் கொண்டிருந்த எண்ணப்படியே ஒரு நாள் அந்த வஸ்திரங்களை யெடுத்துக்கொண்டு தன் அண்ணனோடு கோட்டையின் அடிவாரத்திலுள்ள நியுவிட்டுக்குச் சென்று அங்குள்ள குழந்தைகளுக்கு அவற்றைக் கொடுத்தாள்.

சற்றேறக்குறைய அறுநூறு வருஷங்களுக்குமுன்பு ஹங்கரி தேசத்தில் ஸெயின்ட் எலிஜபெத்து தான் குழந்தையாயிருந்த போது இவ்வாறே செய்துகொண்டிருந்தாள். ஸோபையா எலிஜபெத்து குழந்தையாயிருந்தபோது அவளும், சில காலத்திற்குப்பின்பு அவளை மணம்புரிந்த அவள் கணவனாகிய லூயியும் தாங்களிருந்த வார்ட்பர்க் என்னும் கோட்டையினின்றும் அதன் கீழேயுள்ள ஏஸினக் என்னுமூருக்குச் சென்று அங்குள்ள நோயாளிகளுக்கும் ஏழைகளுக்கும், வேண்டுமுதவியைச் செய்யும்படி போவார்கள்.

"பிறருக்கு உதவி செய்தால் தெய்வம் உதவி செய்யும்" என்றபடி எந்தநாளிலும் எந்தத்தேசத்திலும், நல்ல பெண்கள் தங்களாலியன்றமட்டும் எந்த விதத்திலாவது பரோபகாரம் செய்வதையே உறுதியாகக் கொள்ளுவார்கள். இந்த இரண்டு எலிஜபெத்துக்களின் சரித்திரங்களிலும் வெளித்தோற்றத்தில்

அதிகமாக ஒற்றுமையிராது. இவர்களிருந்த காலமும் ஸ்திதியும் வேறு வேறானவை; ஆயினும் இவ்விருவரும் பரோபகாரமே பெரிதென்று பாராட்டித் தங்களுடைமை முழுமையும் எளியவர்களுக்கே பார்த்துப் பார்த்துப் பங்கிட்டுக் கொடுத்தார்கள். பிடிவாதமும், தயையும், கவிபாடுந் திறமையுமுள்ள அந்தச் சிறுமியின் வாழ்நாள் சென்றவிதம் இப்படியென்று இந்தக் கதையைப் படிக்கப்படிக்கத் தெரியும்.

அவள் சிறுகுழந்தையா யிருந்த காலமெல்லாம் மான்றிபோ கோட்டையிலேதான் கழிந்தன. அவள் குடும்பத்தாரும், நண்பர்களும், அவளிடத்தில் மிகவும் அன்பு பாராட்டிவந்தார்கள். அவளுக்குக் காடு மலை முதலியவற்றைப் பார்ப்பதில் மிக்க விருப்பம்; அவளுக்கு அவற்றைக் காணும்போதே தன்னைச் சேர்ந்தவர்களைக் கண்டாற்போல் சந்தோஷமுண்டாகும். நம்முள் ஒவ்வொருவருக்கும் சுகதுக்கங்களுண்டாகும்போது அவை யெவ்வளவோ அவ்வளவாக மட்டுந்தானிருக்கும். ஆனால் புலவர்கள் தங்கள் மனோபலத்தினால் அவற்றை அதிகமாகச் சிறப்பித்துச் சொல்லுவார்கள். சந்தோஷமுண்டாகும்போது ஆனந்தமாக மேலாகப் புகழ்ந்தும், துக்கமுண்டாகும்போது அதை அதிக தைரியமாக இகழ்ந்தும் பேசுவது வழக்கம். அவிறுபெற்று பாடும் கவிகளை எல்லோரும் நன்றென்று கொண்டாடுவார்கள்; அவள் தன் மனத்திற்குத் தோற்றியதைச் செய்யாதிருந்தாலும், கவிபாடாதிருந்தாலும், அவள் மனம் தாங்காது; தன் கருத்தைக் கவிகளாகப் பாடியமைத்தால் அவளுக்கு அதனிலு மதிக சந்தோஷம். ஆனதினாலேதான் அவள் சிறுகுழந்தைப் பருவமுதல் ஆயுள்காலமெல்லாம் மனோவிசாரங்கொண்டு சங்கடப்படவேண்டியதாயிற்று.

அன்றியும், அவள் தன்முன்னே எந்நேரமும் சங்கடங்களையே பார்த்துக்கொண்டிருக்கும்படியாயிற்று.

அவள் தந்தை நோய்கொண்டவர். தேகசௌக்கியமுண் டாகவேண்டி அவர் பெரும்பான்மையாய் வீட்டைவிட்டு வெளியேபோய் வசிப்பார். அவள் தம்பியும் பிறந்ததுமுதல் அடிக்கடி நோய்கொண்டிருந்து இறுதியில் அதனால் உயிர் துறந்தான். அவன் எல்லோரிடத்திலும் அன்பாயிருந்தத னால் அவன் இறந்தது அந்தக் குடும்பத்தாருக்கெல்லாம் பெருந் துன்பத்தை விளைத்தது.

இவ்வாறாக அவளுக்கும் இளமைப்பருவத்தில் சுகமில்லா மற்போயிற்று. அவளுக்குத் துக்கம் இப்படிப்பட்டதென்று அப்பொழுது தெரிந்திருக்குமானால் அதை இன்னவிதமாகத் தாங்கவேண்டுமென்று கண்டிருப்பாள். அவளுக்கு இது தெரி யாமலிருந்ததும் ஓர்விதத்தில் நன்மைதானென்று இனிமேல் தெரியும். அவளுக்குப் பதினெட்டு வயதானபோது அவள் கண்ணுக்கினிய கட்டழகியாய் எல்லாருக்கும் மிக்க நல்லவ ளானாள். அவள் உருவத்தில் சற்றே உயர்ந்து உயரத்துக்குத் தக்க பருமனில்லாமல் சற்றே மெலிந்திருப்பாள்; அதிக உற் சாகமுடையவள்; அவளது கூந்தல் செறிந்து கறுத்துக் கொஞ் சம் செம்மை படிந்திருக்கும்; கண்களிரண்டும் குவளை மலர் போல் அழகாய் அவள் உள்ளக்கருத்தை நன்றாக வெளியிடும். அவள் அந்தளையாக அழகுடையவளல்லாதிருந்தாலும், அதிக புத்தி நுட்பமும் உற்சாகமுமுடையவள். அவளுக்கு வேண்டிய பேர்களெல்லாரும் அவளுக்குக் காட்டு ரோஜாப்பூ வென்று வேடிக்கையாகக் குழூஉக்குறிப் பேரிட்டிருந்தார்கள்.

இந்தவயதில் அவள் வீட்டில் தங்கியிராமல், எப்பொழுதும் உலகம் எப்படியிருக்கிறதென்று அறிவதன்பொருட்டு யாத் திரை செய்துவந்தாள். அயல் நாடுகளுக்கு யாத்திரைபோகிற திறமை எல்லோருக்குமே யிராது. சிலர் தேசயாத்திரை செய்தும் வீட்டுக்குத் திரும்பிவரும்போது ஒன்றையுந் தெரிந் துகொள்ளமாட்டாமல் போனபடியே திரும்பிவருகிறார்கள்.

நான் கீழ்நாட்டில் யாத்திரைசெய்தபோது முதலில் கண்ட காட்சியொன்று என் நினைவிற்கு வருகிறது. அப்பொழுது ஈஜிப்டில் இருந்தேன். அலெக்ஸாந்திரியாவிலிருந்து புகை வண்டி மார்க்கமாய், கெயிரோ நகரத்திற்குப் போய்க்கொண்டிருந்தேன். நான் அதிக ஆவலோடு பலகணிவழியாக நீல நதியின் உயரமான கரையையும், அதன்வழியாகப் பாரமேற்றிய ஒட்டகங்கள் தம்மை யோட்டுகிறவர்களோடு செல்லுவதையும், அழகாய் நீலம்படிந்த ஆகாயத்தோடு ஒட்டினாற்போல மனிதர்கள் உட்கார்ந்திருப்பதையுங் கண்குளிரக் கண்டேன். அங்கு எங்கேபார்த்தாலும் வெள்ளைவெளிறென்றிருந்த மணற்காட்டின் இடையிடையேயுள்ள பனந்தோப்புகளில் மண்குடிசைகள் பல சேர்ந்த கிராமங்களிலுள்ளவர்கள் வெள்ளாடுகளையும், நாய்களையும் வைத்துக்கொண்டிருப்பதையும், அவர்களின் குழந்தைகள் அரையில் ஒன்றுமில்லாமல் அம்மணத்தோடு அருகேயுள்ள மணலில் விளையாடுவதையுங்கண்டு எனக்கு ஆச்சரியமுண்டாயிற்று. இவையெல்லாம் எனக்கு முற்றிலும் புதுமையாயிருந்ததனால் வெகு நன்றாயிருந்தது. வண்டியில் என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண்குழந்தைக்கும் அது புதுமையாகத்தானிருந்தது. ஆயினும் நான் அவளைப் பார்த்து அது விஷயத்தைப்பற்றி அவளோடு பேசத்தொடங்குகையில், அவள் முகங்குனிந்து, "மனமொன்றிற் சென்றால் காதொன்றுங் கேளா" என்றபடி தான் அதற்குமுன்னே எப்பொழுதோ படித்திருந்த புத்தகமொன்றை எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தாளேயல்லாமல் அவளுக்கு அது சங்கதியொன்றுந் தெரியவில்லை.

எலிஜபெத்து ராஜகுமாரி இவ்வாறு கண்குருடாக யாத்திரை செய்ததில்லை. ஒரு காலத்தில் அவள் சுவிட்ஜர்லாந்திலுள்ள ஜினீவா ஏரியண்டை சென்று அதன் அழகையும், அதனருகேயுள்ள கிராமங்களின் சிறப்பையுங் கண்டாள்.

பின்பு அவள் தனது அத்தைமார்களில் ஒருத்தியோடு அங்கிருந்து இத்தாலியாதேசத்திற்குச் சென்று நேப்பில்சு நகரத்திலிருந்து 1862-ம் ஞு ஜனவரிமீ 19உ அடியில் வருமாறு கடிதம் எழுதினாள்;—

"நாங்களிவ்விடத்திலிருக்கிறோம். இங்கே சைரோசோ என்னும் நெருப்புக்காற்று பலமாக அடிக்கின்றது, அலை நொந்தளித்துக் கடல் குழம்புகின்றது, கடல்நாரைகள் அலையின்மேல் மிதந்தோடுகிற நுரைக்குமேலே வட்டமிடுகின்றன. நேற்றிரவில் புயல் பலமாய் அடிக்க, அதைக்கண்டு குதிரை நடுங்கியது. மேகம் கீழே இறங்கி விசூவியஸ் என்னும் அக்கினிமலையைச் சுற்றிக்கொண்டிருக்கின்றது. காற்றும் மழையுங் கலந்தடிப்பதனால் பலகணிவாயில்களின் கதவுகள் காது செவிடுபடும்படி படபடவென்று அடித்துக்கொள்ளுகின்றன. கடல் பசுமையாயும் சாம்பல்நிறமாயும் தோற்றுகிறது. அலையின் வெண்ணிறமான முடிகள் விசித்திரமாக மின்னுகின்றன. எங்கே பார்த்தாலும் புயலடித்தவண்ணமாயிருக்கிறது."

மறுநாள் அவள் உள்ளதையுள்ளபடி நாம் நேரில் பார்ப்பதுபோல எழுதியிருப்பதாவது:—

"ஜனவரிமீ 20உ. இன்று காலையில் குன்றின்மேலிருந்து நாங்கள் தூங்கியெழுந்திருக்கையில் அசையாமல் கண்ணாடி போலிருந்த கடலில் வெயில் காய்ந்தது. கதவுகளும், பலகணிகளும் நன்றாகத் திறந்து வைக்கப்பட்டிருந்தன. தென்றற்காற்று வீசுவதனால் தேகத்துக்குச் சுகந்தருவதுமன்றி அதிக சந்தோஷத்தையுமுண்டாக்குகின்றது. என்னுடம்பு வளப்பங்கொண்டது, இன்னும் நெடுங்காலம் பிழைத்திருக்க வேண்டுமென்று ஆசையுண்டாகிறது. உயர அண்ணாந்துபார்த்தால் விசூவியஸ்மலையின் அந்தகாரமான நீர்ப்புகை மண்டியெழுவதும், அம்மலையின் சிகரம் மேகத்தால் மறைந்திருக்கிறதும்

கண்ணிற்குப் புலப்படுகின்றன. கீழே நோக்கினால் இடது பக்கத்தில் நேப்பில்ஸ் நகரத்தில் வெயில் காய்வதும், வலது பக்கத்தில் கடலும், காப்ரி தீவுகளின் குன்றுகள் படிப்படியாய் நிறைந்திருப்பதுந் தெரிகின்றன."

"நேபிலஸ் நகரத்தை நான் முதலில் பார்க்கையில் எனக்குத் தோன்றின அதன் அழகை இவ்வளவென்று சொல்லக் கூடவில்லை; ஆதலினால் நான் முதலில் அதன் அழகில் முழுகிவிட்டேன்" என்பதாம்.

பின்பு அவள் மற்றொரு சமயத்தில் எழுதியது:—

"நான் வேலைசெய்து என் காலத்தைப் போக்கியபின்பு, எனக்கு மக்களாவது, பேரப்பிள்ளைகளாவது இல்லாவிட்டாலும், என்னை நினைத்து அழும்படியாக நான் கடவுளை வேண்டிக்கொள்ளுகிறேன்" என்பதாம்.

இவ்வாறு அவளது நீடிய குழந்தைப்பருவமானது பிரயாணஞ் செய்வதிலும், தன் பந்துக்களிடம் போயிருந்து வருவதிலும், யாண்றிபோலில் தனியே யிருப்பதிலுங் கழிந்தது. அவள் கவிபாடிக்கொண்டு வந்தாள் ஆயினும் அவள் அப்படிப் பாடியது ஒருவருக்குந் தெரியாது. அவள் அதிகமாக ஆழ்ந்துபடித்தாள். அவள் வெகுகாலமட்டும் இரண்டு சிறுமிகளுக்கும் ஒரு சிறுவனுக்கும் நாள்தோறும் மூன்றுமணி காலம் பாடஞ்சொல்லிவந்தாள். பிறர்க்கு உபகாரஞ் செய்வதென்றால் அவளுக்கு அதிக சந்தோஷம். அவள் தன் தந்தை கேட்க எவ்வளவோ படித்ததுண்டு. அதன்பின், காலக்கிரமத்தில் அவளது தந்தையிறந்தார். அவருக்குப் பின்பு அவள் சகோதரனும் இறந்தான். பெற்றோரும் கூடப்பிறந்தோரும் தவிர சகலமும் வாங்கலாமென்று தேர்ந்தாள்.

அவளுக்குத் தன் கருத்தையெல்லாஞ் செலுத்தும்படியான ஏதேனும் ஒரு நல்ல வேலையில் அமரவேண்டுமென்று, பெண்களுக்காகப் பெரிதான பாடசாலையொன்றை ஸ்தாபித்துத்

தானே அதற்குத் தலைவியாயிருக்கவேண்டுமென்றும் வெகு நாளாக ஓரெண்ணமிருந்தது; அந்த வேலையை நன்றாகச் செய்தற்பொருட்டு அதற்கு வேண்டியதைச் சிறிதுகாலம் படித்தும் வந்தாள். ஆயினும், அவள் வேறு வேலையில் அமர்ந்துகொள்ள வேண்டியதாயிற்று. 1869-ம் ஞு ஜனவரிமீ அவள் தன்னுடைய தினசரியில் அடியில் வருமாறு எழுதியிருக்கிறாள்:—

"சென்ற வருஷம் சந்தோஷமாகக் கழிந்ததைப்பற்றி நான் கடவுளுக்கு வந்தனம் புரிகிறேன். இப்பொழுது பிறந்திருக்கிற புதுவருஷம் எப்படி முடிந்தாலும் சரி; நான் செய்யும் வேலைகள் நன்றாக முடியும்படி ஆண்டவன் அருள் புரிவாராக. இந்த தினசரி புத்தகத்தில் நான் எழுதத் தொடங்கி இன்றோடு ஒன்பது வருஷமாயிற்று. அதில் நான் எனது இளமைப்பருவத்தைப்பற்றி யெழுதியிருக்கிறேன். சிலவேளைகளில் ஈசுவரபக்தி மேலிட்டு உள்ளங்கனிந்து எழுதியிருப்பேன்; சிலசமயங்களில் அதிக சந்தோஷத்தோடு எழுதியிருப்பேன். ஆயினும் நான் எழுதியவற்றுள் பெரும்பான்மை துக்கமாகவேயிருக்கும். எனக்கு பாலியத்தில் யாவரிடத்திலும் அன்புடைமையும், பக்திவைராக்கியமும் உண்டாயின. என்னுடைய மித்திரர்கள் என்னைக் கைவிட்டார்களென்ற துக்கமட்டும் எனக்கு எந்நாளுங் கிடையாது. அல்லாமலும் நான் இன்னமும் இளமை குன்றாமலிருக்கிறேன்; தேகத்தில் நல்ல பலமிருக்கிறது; இனி "உள்ளநாளுள்ள மட்டும் ஓயாப்பெருங்கவலை" என்பதில்லாமல் சுகமாகவே காலத்தைக் கழிப்பேனென்று தோற்றுகிறது. என்னிடத்தில் பாடுந் திறமைமட்டும் ஆண்டவனருளால் கெடாதிருக்குமேயாயின் அதை நான் வரப்பிரசாதமாக வெண்ணி அபிவிருத்தி செய்துவருகிறேன். சந்தோஷமாகக் கழிந்த அழகிய சென்ற வருஷமே! உனக்கு வந்தனம். புதிய வருஷமே!

அன்போடும், நம்பிக்கையோடும் உன்னை உபசரித்தழைக்கிறேன். "செய்வன திருந்தச்செய்" என்பதை நான் உறுதிமொழியாகக்கொண்டு செய்வேனாக" என்று எழுதினாள்.

அதே வருஷம் அக்டோபர்மீ 12உ எலிஜபெத்து தனது தினசரியில் அடியிற் கண்டவாறு எழுதினாள்:—

"என் கலியாணத்திற்கு வரன் நிச்சயமாயிற்று; என் ஆசைக்கேற்ற காதற்கணவர் கிடைத்திருக்கிறார்."

அவள் வாழ்க்கைப்பட நிச்சயித்தவர் ஜர்மனிதேசத்து ராஜவம்சத்திற்கு உறவாகிய ஹோஹின்ஸாலரன் என்னும் வம்சத்திற் பிறந்த சார்லஸ் என்னும் ராஜகுமாரர். புதிதாக ஏற்படுத்தப்பட்ட நாடாகிய பொஹீமியாவுக்கு அவர் அதிபதியாகி அதை அரசாளவேண்டுமென்று ஐரோப்பாவிலுள்ள பிரதான அரசர் கேட்டுக்கொண்டபடி அதற்கு அரசனானார். பொஹீமியாவென்பது ருஷியாதேசத்தின் தென்மேற்கிலும், கருங்கடலுக்கு மேற்கிலுமுள்ள சிறு தேசம். அது முன்னே துர்க்கிதேசத்தாரால் பிடித்துக்கொள்ளப்பட்டு வெகுகாலமட்டும் அவர்களுடைய ஆதீனத்திற்குட்பட்டிருந்தது; ஆனால் ஐரோப்பியருடைய உதவியினால் அது இப்பொழுது சுவாதீனம் பெற்றிருக்கிறதென்றாலும், துர்க்கியரோடு ஒற்றுமையாகவிருக்கிறது. அதில் உற்பத்தியாகும் பொருள்களை விருத்திசெய்யும்படி ஜனங்களுக்குத் துணையாக நின்று அதை விமர்சையாக ஆளும்படியான நல்ல அரசனை நியமிக்கவேண்டுமென்பதும், அடிமைத்தனத்தைவிட்டு அவர்களை விடுவிக்க வேண்டுமென்பதும் எல்லோர்க்குமுள்ள கருத்து. ஆனதினாலேதான் மேற்சொன்னபடி ஹோஹின்ஸாலரன் வம்சத்திலே பிறந்த சார்லஸ் என்பவனை அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால் எலிஜபெத்து ராஜகுமாரி இவருக்கு எப்படி மனைவியானாளென்று கேட்கலாம்.

சில வருஷங்களுக்குமுன்னே எலிஜபெத்தின் தோழி யொருத்தி அவளோடு "அம்மா! நீர் ஏதோ ஒரு நாட்டின் சிங்காதனத்தை அலங்கரிக்கப்போகிறீர்" என்று சொல்லக் கேட்டு அவளும் வேடிக்கையாகவே, "அப்படி நான் அரசியாகிறதாகவிருந்தால் அது பொஹீமியாதேசத்து சிங்காசனமாகத்தானிருக்கவேண்டும்; ஏனெனில், அங்கே போனால் அது எனக்கேற்றபடி உபகாரஞ்செய்வதற்கேற்றவிடமாகும்" என்று சொன்னாள்.

அவள் சொன்ன வார்த்தையின்படியே எல்லாம் நிறைவேறியது. எலிஜபெத்து இதற்கென்றே முந்தியே ஏதோ நிச்சயித்திருந்தாள்.

கார்லஸ் ராஜகுமாரர் வெள்ளேட்டுப் புத்தகமொன்றின் முதல் பக்கத்தில்:—

"சிநேகம் சிநேகத்தைத் தரும்; நீ என்னிடம் வருவது போலவே உன் குடிகளிடத்தும் அன்போடும், நம்பிக்கையோடும் வா; நீ எனக்குமாத்திரமே உரியவளல்ல; ஒரு தேசத்தில் வாழும் ஜனங்களெல்லாரும் உன்னை நெஞ்சார நினைந்து உன்னிடத்தில் அன்பும் ஆதரவுமுடையவர்களாக வேண்டுமானால் நீயும் அவர்களிடத்தில் அப்படியே அன்பு பாராட்டவேண்டும்" என்று எழுதியிருக்கிறார்.

1869-ம் ௵ நவம்பர் ௴ 12௳ மாலையில் எலிஜபெத்து எழுதிய தினசரியில், "நான் நல்லவிடந்தேடி வாழ்க்கைப்பட்டேன்; இது நான்பெற்ற பெரும்பேறு" என்றெழுதியிருக்கிறாள். அவர்கள் விவாகம் 1869-ம் ௵ நவம்பர் ௴ 15௳ நியூவிட் நகரத்தில் நடந்தது; அதன்பின்பு உடனே பொஹீமியாவுக்குச் சென்றார்கள்.

நவம்பர் ௴ 22௳ எலிஜபெத்தும் அவளுடைய கணவனும் பொஹீமியாவின் எல்லையோரத்திலுள்ள டர்மியுஸெவின் என்னுமிடத்திலிருந்தார்கள்.

அவர் அந்நாட்டின் வழக்கத்தின்படி ரொட்டியும், உப்பும் சாப்பிட்டார்; இப்படிச் செய்வது அவர்களுக்குள் உபசரிப்பதென்று பாரம்பரியமாக எண்ணப்பட்டிருக்கிறது. இதன்பின்பு அவரிடத்தில் நம்பிக்கையுண்டாயிற்றென்பதற்கு அடையாளமாக அந்நகரத்தார் தங்கள் கோட்டையின் திறவுகோலை இவரிடங் கொடுத்தார்கள்.

அந்தத் தேசத்திலுள்ள பல நாடுகளினின்று ஜனங்கள் அவர்களுக்குப் புதிதாகக் கிடைத்த அரசனையும், அவர் மனைவியையும் காணும்படி வந்தார்கள். எலிஜபெத்தைப்போன்ற பெருந்தன்மையுடைய மாதைக் காண்பதே ஒரு அழகு.

அந்நாட்டார் இயல்பாக உடுக்குமுடை விசித்திரமானது; வெவ்வேறான நிறமும், சித்திரவேலையுமுடைய ஆடையணிந்திருப்பார்கள். பெண்கள் பனிக்கட்டிபோல் வெள்ளைவெளேறென்று வெளுப்பான நார்மடி உடையணிந்திருந்தார்கள். சிறிய குதிரைகள் எட்டும், பத்தும், பன்னிரண்டுமாகப் பூட்டிய ரதங்களின்மேல் ஏறி ஸாரதி ஒருவன் தன் ஒரு கையால் செலுத்துவதைக் கண்டு அவற்றின்மேல் விருப்பமுண்டாயிற்று. தெருக்களெல்லாம் நருங்காலிப் பலகை பரப்பியிருந்தார்கள். இருபுறமும் செல்வர்களின் மாளிகைகளும், சிறு குடிசைகளுமிருந்தன. தனவான்களின மாளிகைகளுக்கு இடையே வெண்ணிறமான சிறு குடிசைகள் இவற்றிற்கேற்ற சிறிதான பலகணிகளோடிருப்பதைப் பார்த்தால் அழகாயிருக்கும். அங்கே அவள் பார்த்தவிடமெல்லாம் கண்ணுக்கினிய காட்சியாகவிருந்ததைக் காண எல்லாம் அவளுக்குப் புதியனவாகவும், இன்பந் தருவனவாகவுமிருந்தன. அவள் சுறுசுறுப்போடு எப்பொழுதும் தனக்குள்ள வழக்கத்தின்படியே தனக்குப் புதிதாகக் கிடைத்திருக்கும் உயர்ந்த நிலைமைக்கேற்றபடி தான் செய்யும் வேலையைச் செய்யத்தொடங்கினாள்.

அந்நாட்டாரோடு அவள் வாழ்ந்திருத்தற்பொருட்டு அவர்களுடைய நடையுடை பாவனைகளை யறியவேண்டியது அவள் வேண்டியவற்றுள் முதலாவதாயிற்று. ஆதலினால் அவள் அநேகரைக் கண்டு வார்த்தை சொல்லும்படி வரவழைத்தாள். ஏககாலத்திலே அநேகரைப் பார்க்கும்படி வைத்துக்கொண்டதினால் அவளுக்கு ஒருவரையும் நன்றாய்க் கண்டுகொள்ளக் கூடவில்லை. ஆனதினால் ஒவ்வொரு சீமாட்டியையும் தனித்தனியே கண்டு வார்த்தை சொல்லும்படி திட்டஞ்செய்தாள்.

இவ்வாறாக அவள் எல்லோரோடுங் கலந்து வார்த்தை சொல்லுவதைப்பற்றித் தனது தினசரியில் அடியில் வருமாறு எழுதியிருக்கிறாள்:—"இப்படிப் பார்த்துப் பேசும்போது என் மனதிலில்லாததை உள்ளதுபோலப் பாவித்துச் சொல்ல வேண்டியிருக்கிறது: ஆதலினால் உள்ளேயொன்றும், வெளியேயொன்றுமாக இல்லாமலிருக்கும்படி எல்லோரிடத்திலும் பிரியமாகவே செய்துகொண்டேன். பிறர் அன்பு எல்லோர்க்குமே வேண்டும். இப்படிச் செய்துகொண்டதினால் ஒவ்வொருவரும் எனக்குப் பிரியமானார்கள்: இப்பொழுது ஜனங்களைப் பார்ப்பதென்றால் எனக்கு வெறுப்பில்லை; அதனால் எனக்கு விருப்பமுண்டாகிறது. ஆதலினால் ஒருவன் ஒன்றைக் குறைபடச்செய்து முடிக்கவேண்டுமானால் நன்றாய்ச் செய்யவேண்டும்" என்று எழுதினாள்.

உடனே அவள் பொஹீமியா பாஷையைக் கற்க ஆரம்பித்தாள். இப்பொழுது அவள் அந்தப் பாஷையை நன்றாயறிந்து வெகு திறமையாக வார்த்தை சொல்லுகிறாள். அந்தத் தேசத்தார் அவள் தங்கள் பாஷையில் தங்களைவிடப் பேசுவதில் வல்லவளாயிருக்கிறாளென்று பெருமையாகச் சொல்லுகிறார்கள். எப்படியெனில் வார்த்தை சொல்லும்போது அத்தனை அழகாய் உச்சரிக்கிறாள். அவளுக்கு லத்தீன் பாஷையும், வேறு பாஷைகளும் தெரியுமாதலாலும் பொஹீ

யபா பாஷை இவ்விரண்டிற்கும் சம்பந்தமுடைய தாகை யாலும் அப்பாஷையை அத்தனை நன்றாகக் கற்றுக்கொள்ளல் எளிதாயிற்று. ஒரு பாஷை தெரிந்திருந்தால் அதன்மூலமாக மற்றொன்றைக் கற்றுக்கொள்வது எளிதல்லவா?

அந்தக்காலத்தில் ரோமானியாவில் கல்வி மிகவும் அவமதிக்கப்பட்டிருந்தது. எலிஜபெத்து வந்த சிறிது காலத்திற்குள் சிறுவர்கள் படிப்பதற்கென்று புத்தகங்களை மொழிபெயர்க்குஞ் சங்கமொன்றை ஏற்படுத்தினாள். அவள் அப்பொழுது அங்கே கல்வியிருந்த நிலைமையைப்பற்றித் தன் தாய்க்கு ஒரு கடிதம் எழுதினாள். அதாவது, “பாடசாலைகளுக்கும், ஜனங்களுக்கும் படிப்பதற்கு உபயோகமான புத்தகங்களில்லை. இதைப்பற்றி ஏற்பாடு செய்யவேண்டும். சிறு பெண்கள் படிப்பதற்காக நான் சிறுமியாக விருந்தபோது வாசித்த சிறந்த ப்ரெஞ்சுபாஷைப் புத்தகங்களைக் கொடுத்திருக்கிறேன். அன்றியும் இந்த விஷயமாகப் புத்திசாலிகளான சிலரோடு கலந்து வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கிறேன். அலெக்ஜாந்தர் என்னும் புலவர் மொழிபெயர்ப்புகளை ஒத்துப்பார்த்துப் பிழைகளைத் திருத்திக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டிருக்கிறார். சீக்கிரத்தில் புத்தகங்கள் பதிப்பிக்கப்பட்டுக் குறைந்தவிலைக்கு விற்கப்படும்” என்று எழுதினாள்.

இதேகாலத்தில், ஏழைகளுக்குத் துணைநின்று அவர்களை ஆதரித்தற்பொருட்டு ஒரு சங்கமு மேற்படுத்தினாள். இப்படி பரோபகாரமாக நன்மைபுரிந்து வருகையில், அவள் குடும்பத்திலும் ஒரு குறையுமின்றி மேலுமேலும் இன்புற்றிருந்தாள்.

1870-ம் ஆு செப்டம்பர் ௳ ௨ தீர்க்கப்பட்ட இருபத்தொரு பீரங்கிவெடிகளின் முழக்கத்தினால் புக்காரஸ்ட் நகரத்தார் ராணிக்குப் பெண்பிறந்ததென்று கண்டு களிகூர்ந்தார்கள். அந்தக் குழந்தைக்குப் பேர்கொடுத்த தினத்தில் ராணி தன்

தாயின்பெயரையிட்டு அன்றுமுதல் அவளை மரியாளென்று அழைத்தாள். இந்த ராஜகுமாரி சில நாள்களுக்குள் ரோமானியா கண்மணி என்று பிரசித்திபெற்றாள். அந்த நாட்டாரெல்லோரும் அந்தக் குழந்தை தங்கள் நாட்டில் பிறந்ததனால் அவளைத் தங்களுடைமையென்று பாராட்டி அவளுடைய க்ஷேமத்தில் மிக நாட்டமுடையவரானார்கள்.

இதுதான் எலிஜபெத்து அரசியின் மேன்மையான வாழ்நாள். அந்த வருஷம் கோடையின் கொடுமை அதிகமாய் ஊரெங்கும் காய்ச்சலாயிருந்ததனால் குழந்தையின் சுகத்திற்கு நலமென்றெண்ணி அவள் பட்டணத்தைவிட்டுக் கார்பேதியன் மலைக்குத் தன் குடும்பத்தோடு சென்றாள். மரியாளுக்கு மலையின் குளிர்ச்சியும், சோலையின் நிழலும் அவசியம் வேண்டியதாயிருந்தன.

அந்த மலையின் உச்சியில் நினைத்தமாத்திரத்தில் அவர்களுக்கு அரண்மனையைக் கட்டுவதென்றால் எளிதன்று. அதன்மேல் புராதனமான ஆச்சிரமமொன்றும், அதைச் சுற்றிலும் துறவிகள் வாசஞ்செய்யும் சிறியமடமும், அவற்றின் அருகே ஓர் சிறிய கோயிலும் இருந்தன. அங்கே முப்பது சன்னியாசிகள் வசித்தார்கள். கோடைகாலத்தில் உஷ்ணந் தாங்கமாட்டாமல் அரசன் தான்மட்டுந் தனியே குளிர்ச்சிக்காக அந்தவிடத்தில் வசிப்பதுண்டு. அது இப்பொழுது அரசகுடும்பம் வாஸம் செய்வதற் கேற்றவிடமாயிற்று.

அங்கே இடம் போதாமையால் தேவதாருமரத்தால் சில சில அறைகளை அதனோடு சேர்த்துக் கட்டினார்கள். தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு, அதன் வாசலின்மேல் ரோமானியாநாட்டின் கொடி பறவாதிருந்தாலும், காவற்சேனைகள் வாசலில் ஆயுதபாணிகளாய் விடாமற் காத்திராவிட்டாலும், அதில் அரசகுடும்பமிருக்கிறதென்று நன்றாக விளங்கும்படியிருந்தது.

அந்தவிடத்தில் இருந்தபொழுது சற்று அசௌக்கியமும் உண்டு. ராணி உடைதரித்துக்கொள்ளும் அறையை ஒட்டினாற்போல ஓர் பருத்த சன்னியாசியின் அறைவீடு இருந்ததனால் அங்கேயுண்டாகும் சத்தமெல்லாம் அந்த அறைக்குக் கேட்கும். துறவிகள் தங்கள் மடத்தின் பெரிதான போஜனசாலையில் சுகமாக வுண்ணும்போது அரசனும் அரசியும் அதனோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்த சிறிய அறையில் உண்ண வேண்டியதாயிற்று. ஆயினும் இந்த அற்பசங்கதியை அவர்கள் ஒருபொருட்டாக வெண்ணவில்லை. மலைப்பக்கல் சோலையும், குளிர்ந்த காற்றும் இயேச்சையாய் உலாவிவரும் இடமும் கிடைத்திருந்தன. அது ககராலயத்தைப் பார்க்கினும் மேலாகவே யிருந்தது. அவர்களிருந்த இடத்துக்கு மேலே பெரிதான மரங்களின் நிழலில் பசும்புல் நிறைந்த தரையில் ராணி ஓர் சிறுவீட்டைக் கட்டுவித்தாள். அந்த வீட்டிற்குள்ளே தனக்கென்று கடவுளைத் தியானிப்பதற்காகச் சிறிய அறையொன்றை வகுத்திருந்தாள். வெவ்வேறு நிறமுள்ள கண்ணாடிக் கதவுகள் போடப்பெற்ற அந்த அறையினின்றும் வெளியே வெகுகாலமாக ஆகாயமளாவிய பெரிய தேவதாரு விருக்ஷங்கள் நிரைநிரையாயிருக்கிறதைக் காணலாம். அங்கே எழுதுவதற்கு ஒரு சாய்வான எழுதும் பலகையும், இரண்டு நாற்காலிகளும், புத்தகங்கள் அடுக்கியிருந்த ஒரு பீடமும், சித்திரமெழுத வர்ணக்கட்டிகளும் தூரியக் கோல்களும் வைக்கப்பட்டிருந்த ஒரு அடுப்பான பலகையும் தவிர வேறொன்றுமில்லை. மைனியாவுக்கு விருந்தினர் அதிகமாக வந்து அவளுக்கு அதிக சிரமமுண்டானபோதெல்லாம் அவள் இளைப்பாறுதற்பொருட்டு அந்த மலையுச்சிக்குச் செல்லுவாள். அவள் அந்த இடத்தில் ஏகாந்தமாய்ச் சுகமாகத் தன்னிஷ்டப்படியெல்லாமிருந்து விநோதமான வேலைகளைச் செய்வாள்.

அங்கிருக்கும் போதெல்லாம் எப்பொழுதும் ஓயாமல் ஏதாவது வேலை யிருந்துகொண்டேயிருக்கும். எலிஜபெத்து ராணி எந்நேரமும் ஒருகாரியத்தில் மனதைச் செலுத்திக் கொண்டிருப்பாள். ஒரு கணப்பொழுதாவது அவளுக்கு இளைப்பாற நேரமிராது. வித்துவான்களும், பாடகர்களும், சித்திரமெழுதுகிறவர்களும், ஓயாமல் வந்து வெகுநாள் மட்டுங் காத்திருப்பார்கள். எலிஜபெத்துக்குத் தன் செல்வமகளைச் சூழ்ந்து அன்பும் ஆதரவுமாக ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்த சிறு பெண்களிடத்தில் பற்று அதிகம். இவ்வளவுக்கும் ஒருவராயினும் சோம்பலாயிருப்பது கூடாது. சிலர் எழுதுவார்கள்; சிலர் படிப்பார்கள்; வேறு சிலர் சித்திரமெழுதுவார்கள்; மற்றுஞ் சிலர் கவிபாடுவார்கள்.

அவ்விடத்தில் எலிஜபெத்து ராணி அவர்களோடு சந்தோஷமாயிருந்தாள்; சாதாரணமான உடையைத் தரித்து உற்சாகமாக வேலை செய்துகொண்டிருந்தாள். அழகிய அந்த உடையை உடுக்க அவளுக்கு மிகவுங்கொண்டாட்டம். அன்றியும அவள் அந்த ஊராரைக்கொண்டு அங்குள்ளவர்களால் வஸ்திரங்களை நெய்விப்பதில் நாட்டம் வைத்திருந்தாள். இந்த கைத்தொழிலை அபிவிருத்தி செய்யவேண்டுவதற்கென்று அவளும், அவளோடிருந்த சீமாட்டிகளும் அந்தக் கோடையிற் போகும்போதெல்லாம் அந்த வஸ்திரங்களை மாத்திரமே யுடுத்திவந்தார்கள். சித்திரத்தையலால் அலங்கரிக்கப்பட்ட அந்த வுடைகளை அவர்கள் தரித்து மலையின்மீதுள்ள சோலையில் உலாவுவதைக் காணும்போது வனதேவதைகளே வந்திறங்கி வாஸஞ்செய்வதுபோலிருக்கும். அங்கே சுகமாய் வாழ்வதற்கு இதனிலுஞ் சிறந்த உடை வேறென்னவேண்டும்?

இதன்மத்தியில் மரியாள் எலிஜபெத்து என்னும் ராஜகுமாரி நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக நன்றாய் வளர்ந்து தன் தாயாரைப்போலவே மிக்க அறிவுடையவ

ளானுள். அந்தக் குழந்தை கதிரொளிபோல அழகுப் பூங் கொடியாய்ச் சூரியகிரணங்களைத் தனது சின்னஞ் சிறுகைகளை நீட்டிப் பிடிக்க முயல்வாள். எலிஜபெத்து தன் குழந்தையைப்பற்றித் தன் தாயாருக்கு எழுதியதாவது: ''அம்மா! நமது அருமைக் குழந்தை மரியாளைப்பற்றி என்னென்று சொல்லுவேன்! வெகு சாது; எப்பொழுதாயினும் குற்றஞ் செய்வாளாயின் அதனைப்பொறாமல் துன்பப்படுவாளாதலால் அவளை யாராவது சமாதானப்படுத்த வேண்டியிருக்கிறது. தான் என்னும் செருக்காவது, கீழ்ப்படிதலில்லாமையாவது அவளிடத்தில் சிறிதுண்டானுலும் அவளுக்கு அதனை யெடுத்துக் காட்டினமாத்திரத்தில் அவை பறந்துபோம். கதிர்போலக் கூர்மையான புத்தியுடையவள்; பொறுமை அவளிடம் குடி கொண்டிருக்கிறது. அவளிடத்துள்ள புத்திநுட்பத்தை அவள் கண்களே சொல்லும். மதிபோன்ற அவள் முகத்தைப் பார்க்கும்போதே அவளிடத்திலுள்ள நுண்ணறிவு பிரத்தியக்ஷமாகப் படுகின்றது. இவ்வுலகமழியுமளவும் தாய்க்குத் தம்மக்களிடத்திலுள்ள அன்பும், மக்களாலுண்டாகும் ஆனந்தமும் வேறுபடாவென்றும், சம்சாரத்திலுள்ள துக்கங்களெல்லாம் ஒருவாறு மக்கள்முகத்தைக் கண்டமாத்திரத்தில் நீங்குமென்றும் நினைக்கிறேன். ஆயினும் இவ்வுலக இன்பம் இமைப்பொழுதேனும் நிலையில்லாமல் அழிந்துவிடும்'' என்பதாம்.

''மக்கட்பேறல்லது பெரும்பேறில்லை'' என்றபடி அவள் எழுதியது முற்றுமுண்மையே. 1873-ம் வருஷக் கோடையில் அவள் தன் மகளையழைத்துக்கொண்டு ஜர்மனிக்குப் போனாள். அவள் கலியாணத்துக்குப் பின்பு தன் தாய்வீட்டிற்குப் போனது அதுதான் முதல்முறை. அந்தக் குழந்தை ஜர்மனிக்குவந்தது முதல் அந்நாட்டாரெல்லாரும் அவளிடத்தில் மிக்க அன்பு பாராட்டித் தங்கள் கண்ணுக்குக் கண்ணாக நினைத்துவந்தார்கள். ஆயினும் சிறுகுழந்தைபாதல்பற்றித் தான் பிறந்த நாடா

கிய ரோமானியாவிடத்தே அவள் நினைவெல்லாஞ் சென்று எந்நேரம் பார்த்தாலும் தன் தாயாரோடு தன்னை அவ்விடத்துக்குத் திரும்ப அழைத்துக்கொண்டுபோய்விடும்படி கேட்டவண்ணமாயிருந்தாள். அவள் திரும்பிப்போகையில் ஊர் ஊர் என்ற சொல்லுடையவளானாள். அவள் வியன்னாவுக்குப் போனபோது ரோமானியா நாட்டுச் சிறுவர்கள் அவளுக்கு எதிர்கொண்டு சென்று அவளை உபசரிக்கையில் அவள் அவர்களைப் பார்த்து நான் ரோமானியாவுக்குத் திங்களோடு போகிறேன் என்று சொன்னாள்.

அப்பொழுது பக்காரஸ்டில் ஜ்வரமும், வைசூரியுமாயிருந்ததனால் சன்னியாசிகள் வசிக்குமிடமாகிய சைனியாவின் வழியாகச் சென்றார்கள். எலிஜபெத்து தன் தாய்க்கு 1874-ம் வருஷம் எழுதின கடிதத்தில் பக்காரஸ்டில் காய்ச்சலும், வைசூரியும் செய்யுங் கொடுமை இவ்வளவவ்வளவென்றல்ல; கணக்கில்லாமற் குழந்தைகள் இறந்துபோகின்றன. தாய்மார்களாகிய நாங்கள் ஒருவரையொருவர் காணும்போதெல்லாம் குழந்தைகள் க்ஷேமமா என்பது முதலாவது கேள்வியாகின்றது என்று எழுதினாள். பிள்ளையருமை பெற்றவளுக்குத் தெரியுமல்லவா?

மரியாளுக்குக் கொஞ்சம் காசநோய் கண்டது; அதற்குத் தக்கபடிச் சிகிச்சை செய்யப்பட்டு உடனே நோய் சாந்தப்பட்டது. ஆயினும் ஏப்பிரல்மீ ௫உ ஞாயிற்றுக்கிழமையன்று ஜ்வரமும், காசமுங் கலந்துகொண்டு நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகப்பட்டு வியாழக்கிழமை யிராத்திரி ஜ்வரவேகத்தினால் இடையிடையே நான் சைனியாவிற்குப் போய் அங்குள்ள பாலாக்கு நதியின் தண்ணீரைக் குடிக்கவேண்டும் என்று பிதற்றியது. அந்தக் குழந்தை கேட்டபடி ஒரு கிண்ணந் தண்ணீரைக் கொடுக்கப்போக, அது தன் கையைத் தூக்கிக்கொண்டு அங்கிலேய பாஷையில் எல்லாந் தீர்ந்துவிட்டது

என்றது. அது வியாழக்கிழமை காலையில் ஐந்து மணிக்குப் போய்விட்டது. தன்னை வளர்த்த அங்கிலேய முலைத்தாயின் மடியில் படுத்திருந்தது. எலிஜபெத்து தன் குழந்தையின் பக்கத்தில் முழங்காலிட்டு உட்கார்ந்து குழந்தையின் சிறு கைகளைத் தாங்கிக்கொண்டிருந்தாள். குழந்தைக்கு மூச்சு இழுத்துக்கொண்டிருந்து பனிச்சென்று சுவாசமும் நின்று பிராணன் போய்விட்டது.

குழந்தைக்குப் பிராணன் போகுமளவும் ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையானதால் அருமை மகள் பிழைப்பாளென்றே எலிஜபெத்து எண்ணியிருந்தாள். தன் குழந்தைக்குப் பிராணன் போய்விட்டதென்று கண்டவுடன் அவளுக்கு ஆற்ற வொண்ணாத துக்கமுண்டாகி அங்கம் பதறினாள் என்றாலும், தலைகுனிந்து கடவுளை வணங்கி எல்லாம் ஆண்டவன் செயலென்று ஈசுவரன் வசம் ஒப்புவித்து அவனே கதியென்றிருந்தாள்.

சற்றுநேரத்திற்கெல்லாம் அவள் தானே தன் குழந்தையின் கண்களை மூடிவிட்டு, மெல்ல வெழுந்திருந்து, அங்கிருந்த வைத்தியர்கள் தன் குழந்தைக்காகப் பட்டபாடுகளுக்காக அமரிக்கையாய் அவர்களுக்கு வந்தனஞ் செய்தாள். அவள் வாய்விட்டு தெய்வத்தின்மீது சிறிதேனுங் குறைகூற வில்லை. பின்பு அவர்கள் குழந்தையை யெடுத்து அதற்குச் செய்யவேண்டியவற்றையெல்லாஞ் செய்திடமட்டும் அவள் தன் விசனத்தைக் காட்டாமல் உறுதியாக விருந்தாள். அதன் பின்பு அவள் துக்கம் பொங்கியெழுந்தது. இவ்வாறு "பொல்லாதகாலம் சொல்லாமல் வந்தது" என்றபடி திடீரென் றுண்டான மரணத்தினால் அரசனும் அவளைப்போலவே விசன மடைந்தவனானான். ஆயினும் அவன் தைரியத்தை விடாமல் ஒருவாறு துக்கத்தை யடக்கிக்கொண்டு "வாழ்நாளுக்கு ஏற்ற

வயிற்றெரிச்சல்" என்று தன் மனைவிக்குத் தேற்றம் சொல்ல முயன்றான். எலிஜபெத்து "ஈசுவரன் என் குழந்தையை என்னிலும் அன்பாக விரும்பினான்; அவன் அவளைத் தன்னிடஞ் சேர்த்துக்கொண்டான்" என்று அவள் சாந்தத்தோடு உருக்கமாகச் சொன்னாள்.

அந்தக் குழந்தையின் பிரேதத்தைப் பெட்டிக்குள்ளே வைத்துக்கொண்டு அரசி தன் கையை அதன்மேல் வைத்து "ஆண்டவனே! என் குழந்தையை இரக்ஷிப்பீராக" என்றாள்.

அரசன் அந்தப் பெட்டியைப் படிக்கட்டின்மேலே கொண்டு போகையில் தானுந் துணையாக நின்று தூக்கினான். அந்த விடத்திலிருந்து சிறு பெண் குழந்தைகள் நீண்ட வெள்ளை முக்காடுகளைத் தரித்து, வெண்மலர்மாலைகளை யணிந்து அவளுக்கு எந்தக்கோயிலில் முன்னே ஞானஸ்நானம் செய்யப்பட்டதோ அந்தக் கோயிலுக்குக் கொண்டுபோகப்படுமளவும் கூடவே சென்றார்கள். அந்தக் கோயிலில் எங்குமுள்ளவர்கள் வந்து நிறைந்து மாலைமாலையாகக் கண்ணீர்விட்டு விம்மி விம்மியழுதார்கள். அந்தக் குழந்தையை எலிஜபெத்தா டயானு என்னும் கோயிலண்டையில் மலைப்பக்கமாயுள்ள சோலையில் அடக்கஞ்செய்தார்கள்.

பின்பு அதுமுதல் சிலமாதங்கள்மட்டும், அவ்வாறு குழந்தையை யிழந்த தாய்தந்தையர்களுக்காகப் பரிதவித்து அந்த நாட்டில் எறும்புமுதல் எண்ணுயிரம்கோடியும் அழுதது; ஜனங்கள் அவ்விடத்துக்குச் சென்று அந்தக் கல்லறையின் மேல் மலர்களைக் கொண்டுபோய்த் தூவினார்கள். அந்தக் குழந்தையை ரோமானியா நாட்டாரெல்லாரும் தங்கள் உடைமையென்றெண்ணி அவள்மீது மிகவும் அன்புபாராட்டி வந்தார்கள். அரசனும், அரசியும் கடவுளின் ஆக்கினைக்குட் பட்டுக் கண்ணான தங்கள் அருமை மகளை யிழந்துவிட்டுப் பரிதவித்துக்கொண்டிருக்கையில் அவர்களை துக்கம் விசாரிக்க

வந்தவர்களெல்லாரும் அவர்களைக் கண்டு அதை ஆற்றாதவா்களாகி மனம் வெந்து "ஆர் இட்டசாபமோ அடிநாளின் தீவினையோ" என்றார்கள்.

இது சங்கதியை எலிஜபெத்தினிடஞ் சொன்னபோது அதற்கு அவள் நான் என் தாயார் செய்தபடியே யழுகிறேனென்றும், அவள் என்னிலும் பலமுடையவளென்றும். அவள் துக்கப்பட்டதைக் கண்டிருக்கிறேன் என்றும் அவர்களோடு சொல்லச் சொன்னாள்.

அந்தக்குழந்தை போனபின்பு 1874-ம் ஸ்ரீ ஏப்பிரல் ௴ 12௳ தன் தாயாருக்கு, "அம்மா! ஆண்டவனுக்கு என் செல்வமகள் மரியாளினிடத்துள்ள அன்பின் மிகுதியினால் அவர் அவளைத் தம்மிடம் திரும்ப அழைத்துக்கொண்டார். அதனால் நான் அனுபவித்த பரிசுத்தமான அந்த பிரமானந்தத்திற்காக அவரை வந்திக்கிறேன். குழந்தைக்குத் தாயாராவதிலும் நயோபியைப்போலக் கல்லாகச் சமைந்து கண்ணீர் விட்டுக்கொண்டிருப்பதே நலமென்று காண்கிறது.

ஆம்; மக்களைப் பெறுதலால் மனிதருக்கும் பேரானந்தமுண்டாகிறதென்பதுண்மையே. என் குழந்தை அதிக சந்தோஷமாயிருக்கிறாள். சகக்குழியிலும் நான் அவளிடத்தில் அதிக அன்புடையவள். அவள் சுகித்திருந்தால் அதுவே எனக்கு ஆனந்தம். என் மகளின் பெருந்தன்மையை நான் என்னென்று சொல்லப்புகுவேன். சிறு குழந்தைப் பருவத்திலே தானே நற்குணமும், சயமுயற்சியும், புத்திகூர்மையும், அன்புமுடையவளானாள். அவள் இனிமேல் என்றைக்கும் என்னுடைய மகளேயாவாள். எனது அருமைக்கண்ணாட்டி என்னிடமிருந்து பிரித்துக்கொண்டுபோகப்பட்டாளேயென்று எனக்கு அவளிடத்திலுள்ள தாயின் உருக்கம் நீங்கவில்லை. அவளால் எனக்குண்டான சுகம் அவள் இறந்ததோடு போய்விடவில்லை. அவளால் எனக்குண்டான ஆனந்தத்தில்

இந்தத் துக்கம் மறைந்துவிடும். இப்பொழுது துக்கமாகவிருந்தாலும் இனிமேல் அத்தனைக்கத்தனை இன்பந்தரும். கடவுள் எனக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்திருக்கிறார். இத்தன்மையான தந்தையும், தாயும், கணவனும், குழந்தையுங் கொடுத்தருளினார். ஆம்; இது அதிகமே. நாங்கள் படும்பாட்டில் ஜனங்கள் எங்களிடம் அன்பாயிருக்கிறார்கள். எங்கள் குழந்தையின் சமாதியில் எங்களுக்குத் தெரியாமலே யாராயினும் முடிகளையும் மலர்களையுங் கொணர்ந்து பரப்புகிறார்கள். அன்புள்ள சிறுமிகள் தினந்தோறும் அதிகாலையில் அந்தச் சமாதியண்டை சென்று, கடவுளைத் தோத்திரஞ்செய்து, மலரைத் தூவி, அதில் எரியும் விளக்கைத் தூண்டிவிட்டுப் போகிறார்கள். இறந்தவர்களுக்கு இத்தனை பேறுதருகின்ற நல்லநாட்டிற்கு நான் வந்தது நல்லதாயிற்று" என்று எழுதினாள்.

ஜர்மனியில் இருந்ததுபோலவே எலிஜபெத்து ரோமானியாவிற் டிம்போவிட்ஸா என்னும் நதியோரத்தில் வந்தாள். அந்த நதியைப்பற்றியும் தன் குழந்தையைப்பற்றியும் அவள் தன் கவியில் வியந்து பாடியிருக்கிறாள்.

அவள் இன்னமும் தன் அருமைப் புதல்வியைப்பற்றி "என் தோளிற் கட்டிக்கொள்ளுகின்ற உனது சிறிது கைகளை இனி நான் என்று காணப்போகிறேன்; உனது பவளவாயினது தேனினுஞ் சிறந்த சுவையுடைய மதுரமொழிகளை இனி என்று கேட்பேனோ! என் செல்வமகளே! நீ ஆசையோடு எங்களை முத்தமிடுவதை நான் எப்போது பெறுவேன்; என் கோகில மொழியாளே நீ பாடுவதை நான் கேட்கப் பெறுவதெந்நாளோ! நீ அம்மாவென்று அன்போடு என்னை மீண்டும் எப்போது கூப்பிடுவாயோ! நீ உன் சிறுகாலால் இங்கெங்கும் ஓடி யுலாவினது இப்பொழுதுதான் நேரில் உன்னைக் காண்பதுபோல என் மனதை உருக்குகின்றது; உன் கூந்தலழகை

என்னென்று சொல்லுவேன்! என் கண்மணியே என் ஆசைக் கொள்ளைசெய்வேன்? கடவுளையன்றி உன்னை என்னிடங் கொடுப்பவருண்டோ" என்று உள்ளமுருகி நொந்தாள்.

இவ்வாறு எலிஜபெத்து ஆற்றங்கரையோரத்தில் அடக்கஞ் செய்யப்பட்டிருந்த தனது அருமை மகளைப்பற்றி நெஞ்சந் துடித்துப் புலம்பியதை இவ்வளவோடு நிறுத்திவிடுவோம்.

மரியாளுக்கப்புறம் எலிஜபெத்துக்கு வேறுகுழந்தை பிறக்கவில்லை. ஆயினும் குழந்தைகளைக் கண்டால் அவளுக்கு எப்பொழுதும் அவர்களிடத்தில் அதிக ஆசை. அவள் குழந்தைகளைத் தன்னைச்சூழத் தரையிலும், மடியிலும் வைத்துக்கொண்டு அவர்கள் சொல்லும் வேடிக்கையான கதைகளைக் கருத்தாகக் கேட்டுக்கொண்டிருப்பாள். எலிஜபெத்து எழுதிய புத்தகங்களால் அவளுக்கு, கார்மென் ஸில்வா என்பது சாதாரணமான பேரென்று கற்றோர்க்கெல்லாந் தெரியும். கார்மென் என்பதற்கு செய்யுள் என்று பொருள்; ஸில்வா என்பது காடு என்று பொருள்படும். அவள் தனது சிறுபருவந்தொட்டே காட்டில் வாசித்து நன்றாகப் பாடத்தலைப்பட்டதனால் கார்மென் ஸில்வா என்னுந்தொடர் காட்டில் பாடுபவள் என்று பொருள்படுமாதலால் இந்தப்பெயர் அவளுக்கு அமைந்ததாம்.

மனதுக்கு எவ்வளவுதான் சங்கடத்தின்மேல் சங்கடமுண்டானாலும் நன்றாகப் பாடுபவர்களுக்கு அத்தனையும் நீங்கிப்போமென்பது அவளது கோட்பாடு. தன் குழந்தை போனபின்புதான் அவள் புத்தகங்களை விடாமல் முயன்று எழுதிவந்தாள். சிலகாலமளவும் ரோமானியாவிலுள்ளவர் ஒருவருக்கும் தங்கள் அரசிக்குக் கவி பாடுந்திறமை யுண்டென்பது தெரியாதிருந்தது.

அலெக்ஸாந்திரி என்னும் ரோமானியா நாட்டுக் கவியை அவள் முதலில் கண்டு அவரோடு வார்த்தை சொன்னபோது

நாணி, "புலவரே உம்மோடு ஒன்று சொல்லவேண்டும்; ஆயி னும் அதைச் சொல்ல எனக்குத் தைரியமில்லை. கவி பாடு வதில் நீர் இட்டது பிச்சையல்லவா" என்றாள். சற்றுநேரங் கழித்து அச்சத்தோடு நானும் கவிபாடுவதுண்டு என்று அமர்ந்து சொன்னாள்.

அந்தக் கவிஞன் அவள் பாடியவற்றுள் சிலவற்றைத் தனக்குக் காட்டவேண்டுமென்று வேண்டினான்; அவன் அவற் றைப் பார்த்தவுடனே அதன் சொற்சுவையைக் கண்டு கொண் டாடி அப்படியே விடாமற் பாடிக்கொண்டு வரவேண்டு மென்று விரும்பிக் கேட்டுக்கொண்டான். அவளும் அவ னது வேண்டுகோளுக்கிணங்கி ரோமானியாநாட்டுப் பாட்டு களையும், சரிதைகளையும், கட்டுக்கதைகளையும் பிரஞ்சுபாஷை யிலேயன்றி, ஜர்மன்பாஷையிலும் செய்யுளாகப் பாடினாள். இவ்வாறாக நெடுநாள் மட்டும் வெளிப்படாதிருந்த அவள் கல்வித்திறமையினால் சாதாரண ஜனங்களுக்குப் பயன்படும் படி புதிதான புத்தகங்கள் எழுதி அச்சிட்டு வெளிப்படுத் தினாள்.

ஆயினும் எலிஜபெத்து ஜூலை 7௨ "நான் இப்பொழுது சிறிதாயினும் மொழிபெயர்க்கிறதில்லை; ஏனெனில் அதிகமாக எழுதிக்கொண்டு வருகிறேன், லேகனியைக் கையிலேயெடுத்த மாத்திரத்தில் என் மனதில் எண்ணங்கள் பூர்ணமாகின்றன. மொழிபெயர்த்தல் அதிகமாக உபயோகமுள்ளதென்பது மெய்யே; ஆயினும் சொந்த அபிப்பிராயத்தை ரசனைசெய்து எழுதினால் வெகு நன்றாயிருக்கும். என் மனதில் ஏதேனு மொருகருத்துத் தோன்றினால் நான் உடனே அதனை வசனமா கவேனும் செய்யுளாகவேனும் செய்யவேண்டும்; இல்லாவிடின் என்மனது விச்ராந்திபெறமாட்டாது" என்றாள்.

சிலநாள்மட்டும் எலிஜபெத்து எழுதியவைகள் எல்லாம் கையெழுத்துப் பிரதிகளாகவேயிருந்தன. அவற்றை ஒவ்வொ

ருவாகப் படித்துவிட்டு மற்றவர்களுக்குப் படிக்கக்காட்டிக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அலெக்ஸாந்திரி என்னும் புலவரின் வேண்டுகோளுக்கு அவள் இணங்கினதனால் அவளால் செய்யப்பட்ட கதைகளும், ஸாபோ ஹாமாஸ்டின், ஜூனிபகாரி என்னும் பேருள்ள மூன்று செய்யுள் கிரந்தங்களும் கார்மென் ஸில்வாவின் முகாமையாகவே அச்சிட்டுப் பிரசுரமாயின.

அந்த வருஷத்தில் "கார்மென் ஸில்வா அரசாங்கத்தினிலே" யென்று பெயருள்ள கதைப்புத்தகமொன்று பிரசுரமாயிற்று. பின்பு அந்தப் புத்தகம் பலபாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டது. அதின் முகவுரை சிறுகுழந்தைகளை நோக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அதிலுள்ள கதைகளெல்லாம், செய்யுள் ஞானமுள்ள எந்தப் பருவமுடையவர்களுக்கும் எளிதில் இன்பந்தரும்படி நிராகூபாபாகமாகச் சுமமாக எழுதப்பட்டிருக்கின்றன.

கார்மென் ஸில்வா உலக வியாபாரங்களையெல்லாம் நன்றாக அறிந்திருந்ததினாலும் துக்கப்பட்டவளானதினாலும் எல்லாந் தெரிந்துகொண்டு, எல்லோரையுந் தன்னைப்போலவே எண்ணி யாரிடத்திலும் அன்பும் ஆதரவுமுடையவளாயிருந்தாள். அவள் எழுதியிருக்கிற கதைகளும் நாடகங்களும் படிக்கப் படிக்க இன்பமும் உற்சாகமும் தருவனவாயிருக்கும். அவள் எழுதும் நடை நிராகூபாபமாகவும், விஷயங்கள் இப்பொழுதுதான் எதிரே நடப்பனவைபோலவும் தெளிவாக விளங்கும். அவள் எழுதிய மற்ற நாடகங்களிலெல்லாம் கருணாரஸமே மேலிட்டிருக்கும்; அவள் எழுதுவதெல்லாம், நீதி அல்லது மதத்தைப்பற்றியவையாயிருக்கும். அவள் தீமைசெய்ய என்றும் இடந்தருகிறதில்லை; குற்றஞ் செய்தவர்களுக்காக அநுதாபப்படுகிறதுமில்லை.

நடந்ததை நடந்தவண்ணம் தெளிவாக எழுதுவது அவளது இயல்பாதலால் கற்பனை சிறிதுமிராது.

கார்மென் ஸில்வா என்னும் மறுபேர்கொண்ட எலிஜபெத்து முடியிற் கண்டவாறு சுருங்கக்கூறுகிறாள். அதாவது, 'ராஜாளிபோலச் சுவாதீனமும் தைரியமுமுடையவனாகவும், நரியனைப்போலக் காய்பவனாகவும், உண்மையுடையவனாகவுமிருத்தல்வேண்டும். தொட்டாற்சிணுங்கியென்னும் ஓஷதி உணர்ச்சியையும், வெள்ளத்தின்வேகம் வலிமையையும், வஸந்தகாலம் நிர்மலத்தையும் அவனுக்குக் கொடுப்பனவாக" என்பதாம். இதுவரையில் எலிஜபெத்துக்கும், அவள் கணவனுக்கும் அரசியென்றும் அரசனென்றும் பட்டப்பெயர் பகிரங்கமாகக் கிடையாதிருந்தது.

1887-ம் ௵த்தில் துருக்கியைச்சேர்ந்த கிறிஸ்தவர்கள் நாடுகளிலுள்ள கிறிஸ்தவர்களெல்லாரும் அதிக கொடுமைக்கு ஆளானார்கள்.

உருஷியர் துர்க்கியரோடு யுத்தஞ்செய்ய ஆரம்பித்துத் தங்களுக்கு அநுகூலமாயிருந்த ரோமானியா நாட்டின் வழியாகச் சென்றார்கள். சண்டைமுகத்திலே நமக்கு என்ன காரியம் என்று சிறியராஜ்யமாகிய ரோமானியா நாட்டார் ஒருவரோடுஞ் சேராமல் இரண்டு கக்ஷிக்காரர்களுக்கும் பொதுவாயிருக்க விரும்பினார்கள். நல்லவன் ஒருவன் நடுவே நின்றால் அருகாமழுக்கும் அவர் என்று முதுமொழி இருத்தலால் இருவரில் யாருடனாவது சேர்ந்துகொள்ள வேண்டுமென்று துருக்கியர் அவர்களைப்பலவந்தப்படுத்தினார்கள். 1877-ம் ௵ சண்டைக்காரம்பிக்க ரோமானியர் உருஷியர்களோடு சேர்ந்துகொண்டார்கள்.

அந்த யுத்தத்தில் ரோமானியர் தங்களாலியன்றமட்டும் வருந்தி யுழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட

எலிஜபெத்து அதன் கொடுமையை மட்டுப்படுத்தும்படி வேண்டிய முயற்சிசெய்தாள்.

பரோபகாரமே பெரிதென்று எலிஜபெத்து தன் ராஜசபா மண்டபத்தை வேலைசெய்யும் சாலையாக்கினாள். அந்நாட்டிலுள்ள சீமாட்டிகளோடு சேர்ந்து யுத்தத்தில் அடிபட்டவர்களுக்குக் காயங்கட்டுக்கள் கட்டுவதற்காக நார்த்துணிகளை வேண்டியபவளவிற்கு வாங்கினாள். இன்னதென்று பேதமில்லாமல் பலவிடங்களிலிருந்து அளவற்ற ஸ்திரீகள் வலியவந்து சிறிதும் வஞ்சனையின்றித் தையல்வேலையைப் புண்ணியத்துக்கு வருந்திச் செய்தார்கள். உணவுக்கு வழியில்லாத அதிக ஏழைகள்கூடத் தாமாகவே வந்து "அம்மா! தாங்கள் எங்களுக்கு இரண்டு வருஷகாலமாக வேலைகொடுத்துக் காப்பாற்றினீர்களே; நாங்கள் இப்போது ஒருவாரம்கூலிபெறாமல் வேலைசெய்வது தகாதோ" என்றார்கள். வேண்டாமென்று மறுத்தால் அவர்கள் முகம் எங்கே கோணுமோ வென்றஞ்சி அவள் அதற்கிணங்கினாள்.

எலிஜபெத்து தன்னுடைய சிங்காரவனத்தில் நூறு குழந்தைகள் இருக்கும்படி நூறு படுக்கைகளைத் தன் சொந்தச் செலவில் செய்வித்துத் தானே அவர்களைத் தன் மக்களைப் போலப் பாதுகாத்துவந்தாள்.

யுத்தகளத்திலிருந்து காயப்பட்டவர்களை யெடுத்துக் கொண்டுவரும் புகைவண்டித்தொடர் வரும்போதெல்லாம் அவள் தானே சென்று அழைத்துவந்து அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களையெல்லாஞ் செய்து தைரியப்படுத்தி இறந்துபோகிறவர்களின் அருகேயிருந்து குளிர்ந்த வார்த்தைகளைச் சொல்லுவாள். அங்கசேதம் பண்ணும்போது வலிதெரியாதிருத்தற்பொருட்டுக் கொடுக்கப்படுகின்ற மயக்க மருந்தை அவள் கையால் கொடுத்தால் பேசாமல் பெற்றுக் கொள்ளுவார்கள். பிராணனைக் காப்பாற்றுதற்பொருட்டுக்

கைகால் முதலியவற்றுள் எதையேனும் வெட்டிவிடவேண்டு வது அவசியமென்று காணப்பட்டால் பிணியாளிகள் அவள் சொன்னபடி கேட்பார்கள். ரோமானியருக்கு நொண்டி யாயிருப்பதென்றால் அதினினும் கொடியது அவர்களுக்கு வேறில்லை. வாலிபனான ஒரு போர்ச்சேவகனது உயிரைக் காப்பதற்பொருட்டு அவன் காலை வெட்டிவிடவேண்டுமென்று கண்டபொழுது அவன் "நொண்டியாயிருப்பதிலும் பிரா ணனை விட்டுவிடுவதே நன்று" என்று சொன்னான். அதைக் கேட்டு ராணி மெள்ள அவன் படுக்கையண்டை போய். இத்தனை இளமைப்பருவத்தில் வீணே உயிரை விடலா காதே என்றாள். அதற்கு அவன் தாயே ராணியாரே! நாங்கள் இத்தனைதூரம் சொல்லுகிறபடியால் தங்களுக் காக உடன்படுகிறேன் என்று சொன்னான். "பங்கச்சொல் பதினாயிரம்" ஆகையால் காயம்பட்ட போர்வீரர்கள் அவள் தங்கள் படுக்கையண்டை வரும்போதெல்லாம் அவளைக் கண்டு தங்கள் துக்கத்தை மாற்றிவிடுவார்கள்.

அவளால் நோய் தீர்க்கப்பட்ட வீரர்களெல்லோரும் அவளைத் தங்கள் நாட்டாரின் தாயென்று சொல்லத் தலைப் பட்டார்கள். அவள் என்ன சங்கடம் நேரிட்டாலும் அஞ் சாமல் பொறுப்பாள்.

அவளும் கணவனும் பூவும் மணமும்போல் ஒத்த குண முடையவர்கள். அவள் கணவனாகிய சார்லஸ் அஞ்சா மையும் ஆண்மையுமுடையவனாகித் தன் சேனைக்கு அதி பதியானான். ரோமானியர் துருக்கியரின் கையினின்று வெளிப்பட்டுச் சுயாதீனம் பெற்றதற்கு அவளே காரண மென்று அவளைக் கொண்டாடினார்கள்.

அந்தச் சண்டை முடிவுபெற்று 1878-ம் வருஷம் அக் டோபர் 20ஆ சார்லஸ் அரசன் தன் சேனைக்குமுன்னே ஜயகோஷத்தோடு பக்கார்ஸ்ட் நகரத்திற்குள்ளே வந்தான்.

அந்த வெற்றியை ரோமானியர் உள்ளளவும் மறவார். அன்று அந்தப் போர்வீரர்களின் மனைவியர்களெல்லாம் அந்த யுத்தத்தில் தங்களுக்குண்டாயிருந்த கவலையைக் காட்டும்படி சிலைப் பதுமை பொன்றைச் செய்வித்து அதை அவனிடங் கொடுத்தார்கள். அது எலிஜபெத்து காயப்பட்டுக் கிடந்த ஓர் போர் வீரனண்டை முழந்தாளிட்டு உட்கார்ந்து ஒரு கிண்ணியில் தண்ணீரை அவனுக்குக் கொடுக்கும்வண்ணமாகச் செய்யப் பட்டிருந்தது.

1881-ம் வூ மார்ச்சுமீ 21௳ ரோமானியர் சயாதீனம் பெறவே எலிஜபெத்தும், சார்லசும் அரசியும் அரசனுமானார்கள். மேமீ 22௳ எல்லார் மனமும் குளிரும்படி பட்டாபிஷேகம் நடந்தது. அத்திருநாளைப்பார்க்க ஆயிரங்கண்கள் வேண்டும். பட்டாபிஷேகம் நடந்ததைப்பற்றி எழுதப்புகின் பெருகுமாதலால் அப்பொழுது நடந்தவற்றுள் முக்கியமான இரண்டொன்றைமட்டுஞ் சொல்லிவிடுவது நன்று:—அன்று காலையில் சிறுபெண்கள் வெள்ளை உடைபூண்டு கோட்டைக்குப் போய் அதன் பலகணிவாயிலின் கீழேநின்று தங்களுக்கு ராணியாகிறவளைப்பற்றிப் பாடினார்கள். பதினொருமணிக்குச் சேனைகள் முன்னேசெல்ல, வாத்தியகோஷங்கள் முழங்க, மெய்காப்பாளர் புடைசூழ, பரிவாரங்களோடு அரசன் குதிரைமேலே பவனியாகக் கோயிலுக்குச் சென்றான். வீதிகளெல்லாம் பலவர்ணக் கொடிகளாலும், பூமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அந்த வேடிக்கையைக் காணும்படி எங்குமுள்ள ஜனங்கள் அந்நகரத்துக்கு வந்து வீடுகளில் நிற்க இடமில்லாமல் கூரைகளின்மேலும் ஏறி நின்று கைகொட்டி ஆர்ப்பரித்துத் தங்கள் கைக்குட்டைகளை விசிறி மலர்மாரி பெய்தார்கள். பின்பு எட்டுக் குதிரைகள் பூட்டப்பட்டு வெள்ளைமலர்களால் சிங்காரிக்கப்பட்ட ராணியின் ரதம் வந்தது. அதில் ஏறிவந்த ராணி தேவஸ்திரீயைப்போலிருந்தாள்.

அவளைக் கண்டமாத்திரத்தில் அவர்கள் அத்தனைபேரும் ஆநந்த பரவசர்களானார்கள். அந்நாட்டார் தங்களுக்குள்ள விசுவாசத்தைக் காட்டும்படியாக தோரணங்களை நாட்டி, மலர்களைப் பொடித்து, அதனோடு தங்கப்பொடியைக் கலந்து தூவினார்கள். வெள்ளைப்புறாக்களை விடுக்க அவைகள் சமாதானத்தையும், சந்தோஷத்தையுங் காட்டும் அறிகுறியாகி நின்று தேரைச்சுற்றி அதில் சிங்காரிக்கப்பட்ட மலர்களில் உட்கார்ந்தன.

ராஜதம்பதிகள் நோயிலிருந்து வந்ததும் முன்னே சண்டையில் காயம்பட்டவர்களுக்கு வைத்தியசாலையாகவிருந்த அரண்மனைக் கொலுமண்டபத்திற்கு வந்து அங்கிருந்த சிங்காதனத்தில் இருவரும் வீற்றிருந்தார்கள். அவ்விடத்தில் அந்த நாட்டின் மஹாராஜனங்களும், பார்பேத்திய மலைநாட்டாரும் அவர்களை உபசரித்தார்கள்; தங்கள் நாட்டுக்குரிய உடைதரித்துச் சிங்காதனத்தின்கீழ் வரிசையாகநின்று அதன் படியண்டை வந்து நமஸ்காரஞ்செய்து அதை முத்தமிட்டார்கள். மற்றவர்கள் தாங்கள் இதற்குமுன்பே எழுதிக்கொண்டு வந்திருந்த மங்கள பத்திரங்களை யெடுத்து அவளுடைய பாதங்களில் வைத்தார்கள். மலைநாட்டார் தங்கள் மலையிலுள்ள தேவதாருக்களின் கிளைகளை ஒடித்து வழியில் வாடிப்போகாதபடி பத்திரமாகக் கொண்டுவந்து காணிக்கையாகச் சேர்த்தார்கள்.

பட்டாபிஷேகமானவுடன் அதைக் காணவந்தவர்களெல்லோரும் நகரத்துக்கு வெளியே அடிக்கப்பட்டிருந்த கூடாரங்களில் வசித்தார்கள். அவர்கள் அத்தனைபேருக்கும் விருந்திட்டார்கள்; அரசன் நேரே சென்று அவர்களை உபசரித்தான். இரவில் பட்டணமெங்கும் தீபாலங்காரஞ் செய்யப்பட்டது; அங்குவந்திருந்த நாட்டாரெல்லாரும் அதைக்கண்டு மெய்ம்மறந்து இரவில் சூரியகாந்தி கண்டோம் என்று ஸந்தோஷித்தார்கள்.

எலிஜபெத்து அதிகமான வேலைசெய்யத் திறனற்றவளானினும், பட்டாபிஷேகத்தன்று நல்லோருக்குப் பொறுமையே அழகு என்றபடி தைரியமாகப் பொறுத்துக்கொண்டு முகங்கோணாமல் செய்கடன்களைச் செய்து மரியாதைகளைப் பெற்றாள். அவள் அதைப்பற்றி ஒருவருக்கு எழுதின கடிதத்தில் "காலை பதினொரு மணிமுதல் மாலை நாலுமணிநேரமளவும் நாங்கள் எண்ணூறுபேரோடு வார்த்தைசொன்னோம். இரவில் எட்டுமணிக்கு மீண்டும் ஆயுதம் பூண்டிருந்தோம்; தீவட்டி வரிசைகளோடு நாங்கள் பட்டணமுழுவதும் வலம் வந்தோம்; பின்பு வாணவேடிக்கை நடந்தது; நாங்கள் மாளிகைக்கு வந்துசேர இரவில் பதினொருமணிக்கு மேலாயிற்று. கடைசியில் எனக்கு வந்தனஞ் செய்தவர்களுக்கு நான் திரும்பி வந்தனஞ் செய்யக்கூடப் பலமில்லாமல்போனதனால் என் கைக்குட்டையை எடுத்து விசிறினேன். இவ்வாறு பெரிய கும்பல்கள் பேரானந்தங்கொண்டு வந்தனஞ் செய்யுங் காட்சியைக் காண்பது ஆச்சரியமாயிருந்தது. மேமீ 22யன்று உதயமுதல் அஸ்தமனமளவும் முற்றும் இவ்வமுடைத்தாயிருந்தது" என்று கண்டிருக்கிறாள்.

முதல் குழந்தைக்கப்புறம் எலிஜபெத்துக்கு வேறு குழந்தை பிறக்கவில்லை. அதனால் அவள் காலத்திற்குப் பின் பட்டத்திற்கு யாரை வைக்கவேண்டுமென்று நிச்சயிக்க வேண்டியதாயிற்று. அரசன் மருமகனும், பக்கத்துநாட்டின் இராஜகுமாரனுமாகிய பெர்டினண்டிற்குப் பட்டங்கட்ட வேண்டுமென்று தீர்மானித்தார்கள். தங்களுக்குப்பின் பட்டமாளுவதற்குப் பிள்ளையில்லையேயென்று அரசனுக்கும் அரசிக்கு மிருந்த துக்கத்திற்கு அளவில்லை. பட்டத்திற்கு உரியவன் இன்னானென்று பத்திரமெழுதிப் படிக்கப்பட்டதைப் பற்றி அவள், "அந்தக் காட்சி ஒருவாறு துக்கத்தை யுண்டு பண்ணிற்று. அரசுபுரிவதற்கேற்ற ஒருவனை நாங்கள் நியமித்

ததற்காக மந்திரிமார்கள் எங்களுக்கு வந்தனஞ் சொல்லுவ தற்கே வந்திருந்தார்கள். அவ்வமைச்சர்களில் ஒருவராகிய பிரோஷியம் என்பவர் துக்கத்தினால் ஒட்டமாக வாசிக்கமாட்டாமற் படித்தார். அதை அவர் படித்தானபின்பு நான் அவருக்கு என் கையை நீட்டினேன்" என்று சொன்னாள்.

எலிஜபெத்து தன் நாட்டாருக்குச் செய்த நன்றியை இன்னும் ஒருவாறுசொல்லி இதை முடித்துவிடுவோம். இளமைப் பருவந்தொட்டே பிறருக்குச் சொல்லிக்கொடுப்பதிலும், கல்வியை அபிவிருத்தி செய்வதிலும் அதிக முயற்சியுடையவளாயிருப்பது அவளதியற்கை. "கை பண்டாவது கற்றவர்களுக்காமே" என்று உணர்ந்து அப்படிச் செய்தாள்.

அவள் ரோமானியாவுக்கு வந்தவுடன் தன்னிடத்தில் மிக்க அன்புவைத்திருந்த அத்தையாகிய ஹெலன் என்பவள் பேரால், தாய்தந்தையரை யிழந்து ஆதரிப்பாரில்லாதிருந்த பெண் குழந்தைகளை வளர்த்து அவர்களுக்குக் கல்வி கற்றுக்கொடுக்கும் பாடசாலையொன்றை ஸ்தாபித்தாள். அதில் ஐந்து வயதுமுதல் இருபதுவயதுவரையில் உள்ள பெண் நானூற்றுறுபது பேர்களுக்கு அன்னவஸ்திரங் கொடுத்துப் பாதுகாத்துக் கல்வியறிவூட்டி வருகிறார்கள். தொழில்செய்முறை, சாஸ்திரம், அயல்நாட்டுப் பந்தடிகள், தையல்வேலை, கணக்கு எழுதுதல் முதலானவற்றைக் கற்றுப் பாடசாலைகளில் பாடஞ்சொல்லத் திறமையுள்ளவர்களாகுமட்டும் அங்கிருந்து கற்றுப் பரிக்ஷைகொடுத்துத் தேறுமளவுமிருந்து விட்டுப் போகிறார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் கல்வி கற்றான பின்புதான் கலியாணஞ் செய்துகொள்ளுகிறார்கள். அந்த நாட்டிலுள்ள ஆண்பிள்ளைகள் ஹெலன் பாடசாலையில் கல்விபயிலும் பெண்களை விரும்பி மணம்புரிகிறார்கள். அவள் 'எலிஜபெத்து வோறு' என்று பேரிட்டு வஸ்திரங்களில் பூத்தைக்கக் கற்றுக்கொடுக்கிற பாடசாலையொன்றை ஏற்படுத்தி

ளாள். அதில் எழுபதுபேர் ஏழைப்பெண்கள் எழுதவும் படிக்கவும் பயின்று அந்த நாட்டுக்குரிய சித்திரவேலை கற்றுவருகிறார்கள்.

வஸ்திரங்களுக்குக் கரை கட்டுதல், கொடிபொழுதிப் பூப்போடுதல் முதலிய சித்திரவேலையில் ரோமானியருக்கு இயல்பாகவே அதிகமான திறமையுண்டு. அவர்கள் தங்கள் நாட்டின் காட்சிகளை வஸ்திரங்களில் அழகாக யுக்தக்க நிறங்கள் அப்படியே தோற்றும்படி எழுதுவார்கள். ஏழைகள் வேலை செய்து பிழைப்பதற்காக 'ஆல்பினியா' என்னும் பெருஞ்சங்கமொன்றை ஏற்படுத்தியிருக்கிறாள். அதில் எளிய பெண்களுக்கு வேலைகொடுத்து அவர்களைக் காப்பாற்றுகிறார்கள். அதில் முதலில் ஆறு பெண்கள் வேலைசெய்துவந்தார்கள். இப்பொழுது ஆயிரக்கணக்கான பெண்கள் வேலைசெய்து வருகிறார்கள். அவர்களில் பலர் தையல் யந்திரங்களை விலைக்குவாங்கி வேலைசெய்கிறார்கள். 1881-ம் வருஷத்தில் 'ஆல்பினியா' தொழிற்சாலையிலுள்ள பெண்கள் 30,000 கூடாரங்களை இராணுவத்தின் உபயோகத்திற்காகச் செய்தார்கள். அன்றியும் இராணுவத்திற்கும் வைத்தியசாலைக்கும் வேண்டிய உடைகள், கட்டுகள் முதலிய யாவையும் அந்தப் பெண்களே செய்துவருகிறார்கள்.

அரசியினால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற சபைகள் இன்னும் எத்தனையோ உண்டு. ரோமானியாவில் உற்பத்தியாகின்ற சணலையெல்லாம் நெய்யும்படி நெசவுசாலையொன்றை ஏற்படுத்தியிருக்கிறாள். பெண்களுக்குப் பாகசாஸ்திரமும், பிரசவ சிகிச்சை முதலிய வைத்திய முறைகளும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. எந்தச் சபை ஏற்பட்டாலும் எலிஜபெத்து அதற்குத் தலைமையாக நின்று செய்துமுடிப்பாள். பொதுநன்மைக்கான எதிலும் [redacted]பொழுதும் விடாது முயல்வாள்.

"முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்"

என்பதை அவள் கோட்பாடாகக்கொண்டு ஓயாமல் பாடுபடுவாள். விடாது நன்முயற்சி செய்கிறவர்களுக்குக் கடவுளும் கூடவே துணையாய் நின்று இடையூறுண்டாகாதபடி எளிதில் அவர்களது காரியத்தைச் செய்து முடிப்பாரென்பது திண்ணமேயாம்.

எலிஜபெத்துக்குச் சிறு குழந்தைகளிடத்தில் அதிகமான அன்புண்டு. குழந்தைகளின் அருமையை அவள் நன்கு அறிந்தவள். அவளுக்கு இளமைப்பருவமுதற்கொண்டே ஏரிகளிலும், மலைகளிலும் திரிந்து இயற்கைப்பொருள்களினிடம் அதிகமாகப் பழகியிருந்ததனால், ரோமானியாவில் நெடுங்காலமளவும் வைத்தியசாலை முதலியவற்றிலிருந்தது அவளுக்கு வெறுப்பாகி, மீண்டும் சுகமாக வெளியே திரிந்து விநோதங்காட்சிகளைக் கண்டு களிக்க விரும்பினாள். வேலை செய்யாவிடில் அவளுக்குப் பொழுதுபோகாது.

பிறகு எலிஜபெத்து தன் கணவனோடு ரோமானியரின் நன்மைக்காகப் பாடுபடுவதையும், தன் இன்னுயிர்க்குழந்தையின் சமாதியைப் பார்த்துவிட்டு வருவதையும் விட்டுவிட்டுத் தான் பிறந்தவிடமாகிய ரைன்நதிக்கரையிலுள்ள நியுவீட்டில் தன் தாயுடன் வசித்துக்கொண்டிருந்தாள். நமது பாரதகண்டத்தில் வசிக்கும் பெண்பாலோரெல்லோருமே முற்றும் உண்மையான இந்த உத்தமியின் சரித்திரத்தைக் கருத்தாகப் படித்து, நம்மெல்லோரையும் படைத்துக் காக்கின்ற கருணைக்கடலான பரம்பொருளைத் தியானித்து, எலிஜபெத்து தன் கணவனோடு சுகமாக வாழ்ந்திருந்து இன்னும் வெகுகாலமளவும் பரோபகாரஞ் செய்வதையே விரதமாகக்கொண்டு பாடுபட்டுச் சுகம் பெற்று வாழ்ந்திருக்க வேண்டுமென்று தோத்திரஞ் செய்வார்களாக.

# KATE MARSDEN.

*(A Living Philanthropist.)*

## கேட் மார்ஸ்டன்.

ஸ்நானஞ்செய்ய ஆற்றிற்குப் போகும்போதும், வீட்
டிற்குரிய சாமான்களை வாங்கக் கடைக்குப் போகும்போதும்,
இந்துக்களின் பெரிய தேவாலயங்களில் நடக்குந் திருவிழாக்
களைக் கண்டுகளிக்கப் போகும்போதும், நாளுக்குநாள் சிறிது
சிறிதாகத் தசையைத் தின்றுகொண்டுபோகிறதும், அவ்வாறு
உடம்பு அழுகிப்போகிறதினால் மரணத்திற்கு ஏதுவாகிறதும்,
பார்த்தவுடனே அச்சத்தை உண்டாக்குவதுமாகிய குஷ்ட
மென்னும் பெரிய நோயினால் அவஸ்தைப்படுகிற மகா
ரோகிகளைப் பார்த்துப் பயத்தோடு திகைப்படைந்திருப்பீர்க
ளென்று நான் நிச்சயமா யெண்ணுகிறேன். இந்தப் பெரும்
வியாதியானது பார்ப்பதற்கே மிகுந்த பயத்தை விளைப்ப
தாக இருக்க, இதனால் பீடிக்கப்பட்டவர்களுக்கு இவ்வ
ளவு பயத்தையும், துன்பத்தையும், நோவையும் உண்டாக்கு
மென்று கணக்கிட முடியாததாகும். இந்தக் குஷ்டரோகி
களைச் சிறிது நேரம் பார்த்தபின்பு நீங்கள் நடுக்கத்தோடு
முகத்தை உடனே திருப்பிக்கொண்டு, கடவுள் நம்மை இக்
கொடுநோயினால் துன்பப்படாமலிருக்க அனுக்கிரகித்தா
ரென்று அவரை மிகு பக்தியோடு தோத்திரஞ் செய்திருப்
பீர்களல்லவா?

இப்போது உயிர் வாழ்ந்திருப்பவரும், இப்படிப்பட்ட
நோயாளிகள் மற்றவர்களால் ஒதுக்கப்பட்டு இருக்க வீடில்



ஸைபீரியா தேசத்துக் குஷ்டரோகிகளுக்கு உதவிய
கேட் மார்ஸ்டன் என்னும் மஹோபகாரி

லாமல் திரிந்துகொண்டு துன்பத்தினால் வருந்துவதைப் பார்த்து மிகுதியும் பரிதபித்தவளுமாகிய ஒரு ஆங்கிலேயக் குலமகள் சரித்திரத்தை நான் உங்களுக்குச் சுருக்கிச்சொல்ல விரும்புகிறேன்.

இந்தப் பெண்மணி மகாரோகிகளைப் பார்த்து தாமரை யிலைத் தண்ணீர்போல மனங்கலங்கி அனுதாபப்பட்டாள். ஆனால் மற்றவர்களைப்போல வெறுப்போடு தன் முகத்தை மறு பக்கம் திருப்பும் குணமுடையவளல்லள். அந்நாள்தொட்டு அந்தப்புண்யவதி இத்தன்மையான பிணியாளருடைய ஆருயிரை ஆதரிக்க ஓர் ஆலோசனை செய்யவேண்டுமென்பதே முக்கிய கருத்தான முடிவுடையவளா யிருந்தனள். இந்த அம்மாள் பெயர் கேட் மார்ஸ்டன் என்பதாம். இந்தப் பெயர் ஐரோப்பாவிலுள்ள எல்லாராலும் மேன்மையோடு நன்கு மதிக்கத்தக்க தகைமையை யுடைத்தா யிருக்கின்றது. இந்தக் காரணத்தினால் இந்தியாவில் வசிக்கும் பெண்மக்களாகிய உங்களுக்கு அந்தப் பெண்ணாயகத்தின் குணத்தை நன்கு விளங்கச் செய்வதே என்னுடைய முக்கியமான கருத்து; அதினால் நீங்களும் அந்தம்மாளைப்போல் யாவரும் அதிசயிக்கும் பணிவுள்ள பரோபகாரியாகக்கூடும்.

---

கேட் மார்ஸ்டன் என்னும் பெண்மணி ஒரு தரும வைத்தியசாலையில் பணிவிடைசெய்யத் திறமையுடையவளாகிய ஆங்கிலேயக் கோயிலைச்சார்ந்த தரும சகோதரி. ஆனால் உருஷியா தேசத்தார்களுக்கும், துருக்கிய தேசத்தார்களுக்கும் யுத்தம் நடந்தபோது போரில் காயப்பட்ட யுத்தவீரர்களுக்குப் பணிவிடை செய்ய நிமித்தம் இந்த உத்தமி துருக்கி தேசத்திற்குச் சென்றனள். இவ்விடத்திற்றான் இந்த அம்மாள் முதன்முதல் இந்தக் கொடுமையாகிய பிணியைக் கண்ணுற்று அப்பிணியாளர்க்குவேண்டியவற்றை உதவ மனவுறுதிகொண்

டனள். அதற்குமுன் யாராலும் ஆதரிக்கப்படாத அகதிகளுக்கு உதவிசெய்யவேண்டுமென்பதுவே முக்கியமான கருத்தாயிருந்தது. இங்கிலாந்திலும் இன்னும் ஐரோப்பா கண்டத்து அநேக நாடுகளிலுமுள்ள ஏழைகளும், நோயாளிகளும் கிறிஸ்துமதத்தைச் சேர்ந்தவர்களால் நியமிக்கப்பட்ட நல்ல வைத்தியர்களாலும், பக்ஷமுள்ள பணிவிடைக்காரர்களாலும், தரும வைத்தியசாலைகளாலும் ஆதரிக்கப்பட்டு வருகின்றார்கள் என்று இந்த அம்மாளுக்கு நன்றாகத் தெரியும். பாழானதும், புல் பூண்டு முளையாததும், பனியால் மிகு குளிருடையதும், சொற்ப ஜனவாசமுடையதும், உருஷியா தேசத்தாருக்குரியதும், ஆசியா கண்டத்திற்கு வடக்கிலுள்ளதுமாகிய ஸைபீரியா என்னும் பிரதேசத்தில் அநேகர் இந்தக் கொடு நோயினால் வருந்துகிறதாயும், இந்தப் பயங்கரமான புண்ணானது தோன்றின மாத்திரத்தில் நோயாளர்களை அந்த நாட்டார் ஊருக்குப்புறம்பே வெளிப்படுத்துவதினால் அப்பிணியாளர் கொடுமையாகிய பனியினாலும், குளிரினாலும் தங்க இடமில்லாமல் அவஸ்தைப்படக் காடுகளில் இருப்பதாயும். அவர்கள் எடுத்துக்கொள்ளும்படி உதாரகுணத்தோடு ஊரார் சிலர் உணவும் வேண்டியவைகளும் தூரத்தில் நின்று கீழே வைத்து வருகிறதாயும் இந்த உத்தமி கேள்விப்பட்டாள். இப்படிப் பட்ட அநேக நோயாளரில் சிலர் இக்காட்டில் களிப்புற்றிருந்த கரடிகளுக்கும், தோண்டான்களுக்கும் இரையாய்விடுகிறார்கள்; சிலர் தாங்கள் அழைத்துக்கொண்டுபோன நாய்களால் காப்பாற்றப்பட்டு வருவதும் உண்டு. இந்த நாய்கள் புத்தி சாதுர்யத்தால் அடர்ந்துவரும் மிருகங்களைக் குலைத்துக் குலைத்து வெகுதூரம் ஓடச்செய்து மறுபடியும் அருகான சிறுவழியாக ஓடிவந்து எஜமானனைச் சேரும். "அகதிக்கு ஆகாயமேகதி" யென்று இப்படி வருத்தப்படுகிற குஷ்டரோகியினாது ஆருயிர்கள் தந்தம் நாய்களினால் ஆதரிக்கப்பட்டு வருகின்றன.

ஆனால் சைபீரியாவிலிருக்கும் இந்நோயாளர் பூமியின்கண் கடவுள் சிருஷ்டிப்பொருள்களால் பெரும்பாலும் ஆதரிக்கப்படவில்லையென்று மனந்துணிவுற்றனள். தரும வைத்தியசாலைகளும், வீடுகளும், ஆடைகளும், உண்ணுதற்குரிய உணவுகளும், மருந்தும், தேகம், மனம், ஆத்துமா இவற்றிற்குரிய உதவியுமின்றிக் காட்டு மிருகங்களினாலும் குளிரினாலும் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிற கானகவாசிகளாகிய அந்நோயாளர்களுக்கு ஒத்தாசை செய்யும்பொருட்டு இந்தப் பெண்ணுபகமாகிய மிஸ். மார்ஸ்டன் உடல், பொருள், ஆவி மூன்றினையும் பரித்தியாகந்தான் செய்யவேண்டியது. ஆனால், இந்த அம்மாள் அவர்களுக்கு எங்ஙனம் உதவி செய்யக்கூடும்? இந்த அம்மாள் ஆசியாவைச்சேர்ந்த ஓர் ஆங்கிலேயப் பெண்மணி. ஆனால், இந் நொந்நோயாளர் ஆசியாவைச்சேர்ந்த ருஷியாதேச சாதியாரேயொழிய ஐரோப்பாவிலுள்ள ருஷியசாதியாரல்ல. ஒரு கூட்டமாக வசிக்காமல் இரண்டு மூன்று பெயர்களாகவும் பத்து இருபது தொகையினராகவும் அதிக விஸ்தீரணமான ஆசியா கண்டத்திலுள்ள வடக்குக் கடைமுனையிலிருக்கின்ற ருஷியாவில் 100 மைல் தூரத்திற்குத் தூரம் சிதறியுள்ள ஜனங்கள் இவர்கள். இந்த அம்மாளுக்கு இந்தத் தேசமானது மிகத் தூரமாய்க் கொடுமையுள்ளதாயிருப்பதும் தவிர, அவர்களுடைய பாஷையில் ஒரு பதமேனும் அறிந்தவளுமல்லள். இவ்வூருக்குச் செல்லுதற்குரிய பிரயாணத்தில் சிறிது தூரந்தான் இருப்புப்பாதையிற் போகக்கூடும். மற்றுள்ள வழிகளனைத்தும் பயங்கரமான கரடுமுரடான பாதைகளும் பாலங்களில்லாப் பல நதிகளும் பாதையில்லாத சதுப்பான பல காடுகளும் அடர்ந்துள்ளவையாம். இப்படியிருக்க அந்தப் பேதமைக்குணமுடைய பெண்மணி அவர்கள்பாற் செல்ல எங்ஙனந் துணிவள்? இந்தக் கருணாகரியாகிய பெண்

மணி திரவியமற்றவளாயிருந்தனள். பிரயாணத்தைத் நடை செய்யும் இவ்வித நூதன கஷ்டமிருந்ததினால் தன்னுடைய கோரிக்கை முடியும்பொருட்டுக் கடவுளையே நம்பித் தியானிப்பதற்குக் காரணமென்ன? அது இந்த அம்மாள் தன்னுடைய கோரிக்கையில் ஜெயமடைவாள் என்பது அவருடைய திருவுள்ளமாயின் இந்த கஷ்டங்களெல்லாம், ஒன்றொன்றாய் விட்டோடும். ஏனெனில் "என்னைத் தந்தையாக எண்ணி நீங்கள் வேண்டினவற்றைக் கேட்டபோது தான் அவைகளை அளிப்பதாகக் கிறிஸ்துவானவர் தன்னடியார்களுக்குச் சொல்லவில்லையா?" மேலும் நமது அன்பும் காருண்யமுமுள்ள குயின் விக்டோரியாள் என்னும் சக்கரவர்த்தினியார்க்கு நன்மையான காரியங்களில் அன்போடும், பரிதாபத்தோடும் மனங்கனிய முயலுகிறது வழக்கம். ஆகையால், இதை அம்மாள் அவ்விராணியாரவர்களுக்குத் தன்னெண்ண முடிவுபெற உதவி செய்யவேண்டுமென விண்ணப்பம் செய்துகொண்டனள். பின்னர் சக்கரவர்த்தினியார் மறுமொழியாகப் பின்வருமாறு கடித மூலமாகத் தெரிவித்தனர். கேட் மார்ஸ்டன் என்னும் பெண்மணி குஷ்டரோகிகளைப்பற்றி முயன்ற தருமகாரியத்தில் இராணியார் மிகுதியும் மனங்கனிந்து முயல இருப்பதாயும் இந்த அம்மாள் செய்யும் நற்காரியத்தில் எவ்வெவருடைய வுதவி வேண்டியதாக விருக்குமோ அவ்வவர்களுக்கு எழுத்து மூலமாக வாக்குச்சகாயம் செய்ய விருப்பமுள்ளவளாயும், ருஷிய சக்கரவர்த்தினியார் நமது இளவரசருடைய அன்பும், அழகுமுடைய பத்தினியாருக்குச் சொந்தத் தமக்கையாகவும் இருப்பதினால் இந்த அம்மாள் கேட் மார்ஸ்டன் எவ்வெவ்விடங்களுக்குச் செல்ல விருப்பமுள்ளவளா யிருக்கின்றனளோ அவ்வவ்விடங்களிலுள்ள இராணுவ உத்தியோகஸ்தர்களால வேண்டிய வுதவியை இந்த ஜனோபகாரிக்குக் கூடுமான

வரையிற் செய்விக்க ருஷியா இராஜாங்கத்துக்கு ஒருபக்ஷமான கடிதம் எழுதி கேட் பார்ஸ்டனுக்குக் கொடுத்தனுப்பினர்.

இப்பொழுது உங்களிடம் தேசபட புத்தகம் இருக்குமல்லவா அதில் உலகமுழுது மிருக்கிற படத்தைப் பார்த்து கேட் பார்ஸ்டன் சென்ற வழிகளைப் பார்ப்பீர்களானல் உங்களுக்கு அதிக விநோதமும் ஆச்சரியமும் உண்டாகும். இந்த அம்மாள் முதல் டர்க்கி தேசத்து முக்கிய நகரமாகிய கான்ஸ்டாண்டிநோபிளிலிருந்து புறப்பட்டுக் கருங்கடல்மூலமாகச் சென்று 1890-ம் ௵ நவம்பர் ௴ மாஸ்கோ என்னும் பட்டணத்தில் வந்து சேர்ந்தனள். இந்த அம்மாள் இரண்டு மூன்றுநாள் அந்நியதேசங்களில் தங்காமலும் அந்த தேசங்களுக்குரிய பாஷைகளைத் தெரிந்துகொள்ளாமலும் பிரயாணம் செய்தனள். அதனால் இந்த அம்மாள் தங்குமிடம் போய்ச்சேர ஆவலுள்ளவளா யிருந்திருக்கலாமென்று நீங்கள் நினைக்கக்கூடும். மாஸ்கோ என்பது பெரிய பட்டணம். அது அவ்வூரிலிருக்கப்பட்ட அநேக கோயில்களை அலங்கரிக்குப்படியிருக்கிற பொன்மயமான கும்பங்களினால் (The Golden headed city) பொற்சிகரநகரம் என்று சொல்லப்பட்டு வழங்குகின்றது. நீலவர்ணத்தினால் சித்திரிக்கப்பட்ட சில கும்பங்களும் பச்சை வர்ணத்தினால் சித்திரிக்கப்பட்ட சில கும்பங்களும் கோபுரங்கள் மற்ற விடங்களில் வெண்மையாயிருப்பதினால் இந்தப் பிரகாசமான நிறங்கள் முக்கியமாய்ச் சூரிய காந்தியினால் மிகுதியும் அழகாகத் தோன்றுகின்றன. கேட் பார்ஸ்டன் என்னும் இப்பெண் நாயகமானவள் இருப்புப்பாதையினின்றும் இறங்கின பின்னர் வேறோர் வண்டியினும் ஏறுபல் உறைபனியால் மூடிக்கொண்டபொழுது உபயோகப்படுத்தப்பட்டதும் சக்கரமில்லாமல் இரண்டு மூன்று குதிரைகளால் இழுக்கப்பட்டதுமாகிய வண்டியில் ஏறினள். குறுக்கமானதும்,

சித்திரமானதாயுமிருக்கிற பல விதிகள் மூலமாய் இந்த விநோதமான வண்டியானது இந்த அம்மாளை ஏற்றிக்கொண்டு சந்தடியில்லாமல் துரிதமாய் மலையின்மேல் ஏறி யிறங்கிச் சென்றது. ருஷியாவின் மேன்மைபொருந்திய சக்கரவர்த்தியாகிய ஜார் என்பவருக்குப் பிரதிநிதியாகத் தொழில் நடத்துபவராகிய பிரின்ஸ் டால்கொர்கோ என்பவரை முதல்முதல் பிரார்த்தித்தனள்.

மிஸ். மார்ஸ்டனுக்குப் பெருமையான ஆடையில்லாமையாலும், தான் தரும வைத்தியசாலையில் பணிவிடைக்காரியானபடியாலும், அதற்குரிய ஆடை உடுத்திக்கொண்டும், தலையில் பெண்டுகள் போட்டுக்கொள்ளும சிறிது கிழிந்த டொப்பியைத் தரித்துக்கொண்டும் போகும்படி நேரிட்டது. டால்கொர்கோ என்னும் இராஜகுமாரன் "அம்மா உனக்கு என்றால் முடியவேண்டுவன என்ன" என்று இந்த அம்மாளைக் கேட்டபோது இவருடைய நாகரிகமான வார்த்தைகளும், பட்சமுள்ள நல்லொழுக்கமும் இந்த அம்மாள் சிறிதும் கூச்சப்படாதிருக்கும்படி செய்தது. பின்பு இந்த அம்மாள் அந்த ஊரிலுள்ள குஷ்டரோகிகளைப் பார்க்கும்பொருட்டு அங்கிருக்கப்பட்ட தரும வைத்தியசாலைகளில் சென்று பரிசோதனை செய்யவேண்டியதாகிய கருத்தை வெளியிட்டனள். இராசகுமாரன் இதைக் கேள்விப்பட்ட பின்னர் தருமவைத்தியசாலைகளுக்குரிய விசாரணைக்காரர்களைக் கூப்பிட்டு இந்த அம்மாள் பார்க்க இஷ்டப்படுகிற இடங்களில் அழைத்துப்போய்க் காட்டும்படி கட்டளையிட்டனன். மிஸ். மார்ஸ்டன் யுரஸ்கோ என்னும் பட்டணத்திலிருந்தபோது தனக்கு உதவிசெய்யத் தகுந்தோர்களை அழைத்துக்கொண்டு ரெயிலில் 12 மணி காலஞ்செல்லும் பிரயாணமுள்ள செண்ட் பீடர்ஸ்பர்க் என்னும் ஒரு பெரிய பிரதான பட்டணத்திற்குத் தினம் இரண்டு முறை போகிறது வழக்கம். சக்கரவர்த்தினியார் இந்த அம்

மாளுக்கு 1000 ரப்பிலாய் அதாவது 1500 ரூபாய் கொடுத்தார். மேல்டால்ஸ்டாய் என்னும் குலமகள் இந்த அம்மாளுக்கு அதிக ஒத்தாசை செய்தனள். ஒரு இராஜகுமாரத்தி அந்த நற்செய்கையைப்பற்றி ஒரு வர்த்தமான பத்திரிகைக்கு மிகுதியும் சிறப்பாக ஒரு கடிதம் எழுதினள். அதன்பிறகு வர்த்தமான பத்திராதிபர்கள் இதைப்பற்றி யோசித்தார்கள். நானாவித பாகங்களிலிருந்து இதற்காகச் சனங்களால் நிதி வைக்கப்பட்டுப் பணம் வந்துகொண்டேயிருந்தது. வேண்டிய சாமான்களும் துணிகளும் சேகரிக்கப்பட்டுச் சில வாரங்களுக்குள் அபாயமான இன்னவிடமென்று குறிப்பிடத்தகாத இடத்திற்குப் போகும் பிரயாணத்திற்கு வேண்டியவைகளெல்லாம் ஆயத்தமாய்விட்டன.

அதிக சூடான இந்தியா தேசத்தில் அவ்வளவு உஷ்ணத்தைத் தரும் ஆடைகள் ஒருவன் உடைத்தாயிருந்தாலே யாராவது கேட்டால் உடனே அவர்களுக்கு மனத்தளர்ச்சியுண்டாகும். ஆனால் ஸைபீரியாவில் செல்லுகிற குளிருக்குப் பழகப்படாத ஒருவன் ருஷியாவில் நன்றாக உயிரோடிருந்து ஜீவித்திருக்கலாம். ஆடைதரிக்கும் கோலம் மேற்கூறியது மாத்திரமல்ல, உரோமங்களால் செய்யப்பட்ட இரண்டு நாற்சட்டைகளை இந்த அம்மாள் உடுத்திக்கொண்டு அதன்பின்பு துணைமக்கள் உடுத்திக்கொள்ளும் வேட்டைக்குரிய மிகுதியும் பருமனான இரண்டு நாற்சட்டைகளையும் உடுத்திக்கொண்டபின் ருஷியாவில் தோலால் செய்யப்பட்ட இரண்டு பெரிய பாதரட்சைகளையும் பாதகோசங்களையும் தரித்துக் கொண்டனள். இவையன்றித் தான் அழுக்குவட்டை வைப்பதற்குரிய ரோமங்கள் பொருந்திய தோல்பைகளும், சால்வைகளும், கம்பளிகளும், போர்வைகளுமாகிய இவைகளை இந்த அம்மாள் உடைத்தாயிருந்தனள். மாஸ்கோ என்னும் பட்டணத்திலிருந்து ஜ்லேடோஸ் என்னும் பட்டணத்

திற்கு இருப்புப்பாதையின் மூலமாகச் சென்றனள். அதன் பின்பு சைபீரியாவுக்கு முன் கூறிய சக்கரமில்லாத வண்டியில் சென்றபோது இராணுவ உத்தியோகஸ்தர் எல்லாரும் இந்த அம்மாளைக் கண்டு தங்களால் கூடுமான ஒத்தாசை செய்தார்கள். இந்த அம்மாள் தான் வைத்திருந்த கனமான ஆடைகள் இத்தன்மையான சக்கரமில்லா வண்டியில் காக்கப்பட்டமையால், இந்த வண்டியில் போகும் பிரயாணம் சௌக்கியமானதாகத் தோன்றவில்லை. மணிப்பாறையின்மேல் புதுவண்டிகள் செல்வதினால் உண்டாக்கப்பட்ட பள்ளங்களிலும், மேடுகளிலும் குலுங்கிப் போவதினால் அதிலுள்ள ஜனங்கள் மோதப்பட்டும், நசுங்கப்பட்டும் தங்கள் தங்கள் அவயவங்கள் வருந்தியிருக்கிறார்கள். வண்டி ஓட்டுகிறவர்கள் ஓயாமல் செய்யுஞ் சத்தமானது அச்சக்கரமில்லா வண்டியில் கட்டப்பட்ட மணியின் ஓசையைப் பார்க்கிலும் அதிகப்பட்டது. இந்தக் கஷ்டத்தில் கொஞ்சநேரம் அவஸ்தைப்பட்டவர்கள் சமமாயிருக்கும் இருப்புப்பாதையின் சுகுணத்தை நினைத்தால் பரலோகத்தைக் கண்டது போல் தோன்றும். இந்த வண்டியோட்டுகிறவன் வண்டியில் பூட்டிய குதிரைகளை இருபக்கங்களிலும் சவுக்கினால் குருட்டடி அடிக்காமல் எனது சிறிய புறாக்களே! சிறிய தங்கைகளே! என்று மிகுந்த அன்போடு கூப்பிடுகிறது வழக்கம். கடைசியாக இந்த வண்டியானது அப்புறம் தங்குமிடத்திற் சேர்ந்தபிறகு குதிரைகளை நோக்கி செத்த பிணத்திற்குங் கடையாக இழுத்துப்போடப்பட்டு வருவீர் என்றாள். அந்த மார்க்கத்திலுள்ள சத்திரங்கள் மிகுந்த அசுசியாயும், காற்று வருவதற்கு இடமில்லாமல் நெருங்கியிருப்பதினால் அதிக வெப்பமாயும், தெள்ளுப்பூச்சிகளாலும் மூட்டைப்பூச்சிகளாலும் நிறையப்பட்டுமிருக்கின்றன. ஆனால், அவ்விடத்தில் வேலைக்காரர் யாருமில்லை. அச்சத்

திரங்களில் செம்மறியாடுகளின் தோல்களும், கம்பளங்களுங் விரிக்கப்பட்டு இருப்பதினால் பிரயாணிகள் மிகுதியும் நித்திரைசெய்ய உபயோகமாயிருக்கிறது. அங்கு அகப்படும் உணவோ, பிரயாணிகள் கொண்டுவரும் உணவுதான். ஆகிலும் உலர்ந்த கோதுமை அப்பமும், ஒரு கிண்ணம் சூடான தேத்தண்ணீரும் சதா கிடைத்தலும் கூடும். இவ்விதப் பிரயாணத்தில் கேட் மார்ஸ்டன் அநேக வழிகளைத் தாண்டி இரு பக்கங்களிலும் மரத்தால் கட்டிய வீடுகளுள்ள பெரிய வீதிகளடங்கிய அநேக கிராமங்களைக் கடந்து எகடரின்பர்க் என்னும் பட்டணத்திலிருக்கிற சிறைச்சாலைபோய்ச் சேர்ந்தாள். அந்தச் சிறைச்சாலையினுள் நன்றாகத் தீபம் வைக்காமலும், மிகுதியும் காற்றுவர இடம் வைக்காமலும் இருப்பதையும், அசுசியாயிருப்பதையும் கண்டாள். குற்றவாளிகள் சாப்பிடும் இடமானது காற்றில்லாமலும், அசுத்தமாயும், ஜனங்கள் அடர்ந்திருப்பதையும் கண்ணுற்றனள். "அருவருப்புச் சோறும் அசங்கிதங்கறியும் இடுவதைப்பார்க்கினும் பட்டினி நன்று" என நினைத்தனள். எகடரின்பர்க் என்னும் பட்டணத்திலிருக்கும் சிறைச்சாலையைப்போல் இந்தியா இராஜ்யத்தில் ஒரு சிறைச்சாலையாவது, அல்லது ஒரு தரும வைத்தியசாலையாவது இல்லாமல் எல்லாம் சுத்தமாயும், காற்றுவர வழியுடைத்தாயிருப்பனவும், சௌக்கியத்தைத் தரத்தக்கனவாயிருப்பனவுமாகிக் குற்றவாளிகள் நன்றாகவும், விசேஷமாக உண்பிக்கப்படும் நோயாளர்கள் பரிவுடன் ஜாக்கிரதையாகப் பாதுகாக்கப்பட்டும் வருவது மிகுதியுள்ளதும், பெருமையுள்ளதும் அல்லவா? எகடரின்பர்க் என்னும் பட்டணத்தில் ஆங்கிலேய தூதர்கள் சாந்தமும், நல்ல உள்ளமும், நேசமும், ஜனங்கள் நன்றாக வாழ்ந்து இறக்கும்பொருட்டுப் பாவங்களை மன்னிக்கும் மன்னிப்பும் சொல்லப்பட்ட வேத புத்தகங்களை விக்கிரயம் செய்கிறார்கள்.

குஸ்மான்.—பெரிய நீண்ட வீதிகளுள்ளதும் பச்சை வர்ணம் பூசப்பெற்ற விமானங்கள் பொருந்திய ஆலயங்களையுடையதுமாகிய குஸ்மான் என்னும் பழைய பட்டணத்தில் மிஸ். மார்ஸ்டன் தான் கண்டுவந்த தரும வைத்திய சாலைகளில் மிகுதியும் கேடாயுள்ள ஒரு தரும வைத்திய சாலையைக் கண்டனள், இதைக் கண்டபின்பு இந்த அம்மாள் சொன்னதாவது: "சுத்தமாயும், வெளிச்சமாயுமுள்ள ஆங்கிலேய தரும வைத்தியசாலையைப் பார்த்தபின்பு, இதைப் பார்க்க மிகுதியும் நுட்பமாய்ப் பிழைபார்க்க நிச்சயித்திருக்கிறேன்" என்றதே. ஆனாலிந்த அம்மாள் ஜனங்களுக்கு வேண்டிய கல்விப் பயிற்சியில் மனம் செலுத்தவில்லை. அருகிலிருக்கும் இரண்டு மூன்று கிராமங்களில் படிக்கவும் எழுதவும் கூடிய மனிதன் ஒருவனைத்தான் காணலாம். பலதரம் அந்தச் சக்கரமில்லா வண்டிகளை இழுக்கும் குதிரைகளின் இடுப்பு அறுபட்டதினால், வண்டி செலுத்துவோர்கள் குதிரைகளையும் பிரயாணிகளையும் தனியாக பனிக்கட்டியினால் வருந்த விட்டுவிட்டு அநேக மைல் நடந்து, அருகிலிருக்கும் கிராமத்திற்குச் சென்று உதவி பெற்றார்கள். ஒருதரம் வண்டியில் கட்டப்பட்ட குதிரைகள் அறுபட்டு நின்றபோது அருகிலிருக்கும் கிராமத்திற்குச் சென்று, புதிய குதிரைகளைக் கொண்டுவந்து கட்டி அடுத்த மஜிலியிலிருக்கும் ஒரு அசுத்தமான சத்திரத்தைச் சேர நடு இராத்திரியாய்விட்டது. இன்னொருதரம் இரண்டு வண்டிகள் நேருக்கு நேராய் வந்து தாக்கப்பட்டு, அதினால் மிஸ். மார்ஸ்டன் பக்கத்திலிருந்த பனிக்கட்டிகள் நிறைந்த பள்ளத்தில் விழ, அதினால் வண்டி போகத் தாமதித்து, மற்றொரு மஜிலிக்குப்போக மறுநாள் இரண்டு மணியாய்விட்டது.

போல்ஸ்க்.—பின்பு மிஸ். மார்ஸ்டன் போல்ஸ்க் என்னும் பட்டணத்தில் சென்று அங்கிருக்கப்பட்ட சிறைச்

சாலையானது, மிருதியும் சுத்தமாயிருப்பதைக்கண்டு விசேஷ அதிசயமுற்றனள். இந்த இடத்திலிருந்து பிரயாணப்பட்டுப் போகும்போது பாதைகள் கேடுகெட்டிருக்கக் கண்டு, மிஸ். மார்ஸ்டன் இளைப்பினாலும், சாப்பாடில்லாமையாலும், டுக்காவிஸ்க் என்னும் பட்டணத்தில் மறுநாள் சாயங்காலம் வரையிலும் தங்கும்படி நேரிட்டது.

ஓமஸ்க்.—இதன்பின்பு ஓமஸ்க் என்னும் பட்டணத்திற் சென்று, தான் அசௌக்கியமாயிருந்தபடியால் கவலையோடு பதினைந்துநாள் தங்க நேரிட்டது. பின்பு ஓமஸ்க் என்னும் பட்டணத்தைவிட்டுச் சென்றபோது வழியில் ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும் கைதியாக்கப்பட்டுச் சுதேசத்திலிருந்து சைபீரியாவுக்குச் செல்வதையும், அவர்களோடு இராணுவசேவகர்கள் சனியனென்னும் ஆயுதபாணிகளாகப் போதலையும், அவர்கள் கால்களில் தளைபூட்டப்பட்டிருப்பதையும் கண்டனள். எவனாவதொரு குற்றவாளி விடுபட்டுச்செல்லத் தொடங்குவானானால், அவனை உடனே அவர்கள் துபாக்கியால் சுட்டுவிடுவார்கள். வழியில் குற்றவாளிகளில், எவனாவதொருவன் நோயாளியாவானாயின் அவனை ஏற்றிக் கொள்ளும்பொருட்டு ஒவ்வொரு கூட்டங்களுக்கும், ஒரு வண்டி பின்போவதையும் பார்த்தனள். இப்படிப்பட்ட அநேகரைக் கண்டால, கேட் மார்ஸ்டன் உடனே தன்னுடைய போர்வைகளைக் கழற்றிவைத்துவிட்டு அவர்களிடம் சென்று, சர்க்கரை தேயிலை ஞானநூல்கள் ஆகிய இவற்றைத் தருவது வழக்கம். இவ்வாறு போகும் பெண்பிள்ளைகள் அநேகருள் சிலர் இயற்கையிலேயே குற்றவாளிகள் தான். மற்றவர்கள் தங்கள் புருஷர்களாகிய குற்றவாளிகளை இராஜாங்கத்தாருடைய செலவினால் காப்பாற்றும்பொருட்டு தங்கள் தங்கள் குழந்தைகளை எடுத்துக்கொண்டு உடன்செல்வதையும் நோக்கினள். மிஸ். மார்ஸ்டன், ஏப்பிரல் மீ௱ சம்

தோமஸ்க் என்னும் பட்டணத்தைச் சேர்ந்தபின்னர், தேக சௌக்கியம் குறைவுற்று இருந்ததினால், அங்கிருக்கிற சிறைச் சாலையைப் பரிசோதிக்க இரண்டுநாள் தடைபட்டன. அதன் பின்னர் இக்குணசீலி, முதலில் தருமவைத்தியசாலையிலும், பின் சிறைச்சாலையிலும் சென்று ஏறக்குறைய இரண்டாயிரம் பேர்களுக்கு உணவையும், ஞானத்தை விளக்கும் புத்தகங்களை யும் கொடுத்தனள். சிறைச்சாலைகள் மிகுதியும் அசுசியா யிருப்பதையும் இராஜாங்கத்தார் புதிதாகத் தருமவைத்திய சாலைகளையும், சிறைச்சாலைகளையும் கட்டும்பொருட்டு மிக்க பொருளுதவி செய்திருப்பதையும் செவியுற்றனள். தோமஸ்க் என்னும் பட்டணத்தைவிட்டுச் சென்றபோது வீஞ எனனும் ஆற்றைக் கடக்கும்படி நேரிட்டது. ஆனால், பனிக்கட்டி கள் கரையுங்கால் இந்நதியைக் கடப்பது மிக அபாயம். பனிக் கட்டிகள் உருகுவதும், இறுகிக் கட்டுவதுமாயிருப்பதினால், வித்தியாசம் யாதொன்றும் தோன்றாமையால், பனியினி முத லான நதிகளைக் கடக்குங்கால் அநேகர் தங்கள் தங்கள் பிரா ணனை இழந்தவராயினர். துடுக்கான ஒரு பெண்பிள்ளை இந்தக் கசிவான தரையின்மீது நடக்கத் தொடங்குங்கால் அந்த அம்மாள் படும் அனுபவங்களை நாம் சற்றே நினைக்க வேண்டும். தோமஸ்க் என்னும் பட்டணத்திலிருந்து சுமார் ஐந்நூறுமைல் தூரமுள்ள கிராஸ்நாயர்க்ஸ்க் என்னும் பட் டணத்திற்கு வந்து சேர்ந்தாள். இந்த இடத்தில் மிஸ். மார்ஸ்டன் தனது சக்கரமில்லா வண்டியிற் போதலைவிட்டு தான் விலைக்குவாங்கின டரன்டாஸ் என்னும் வண்டியில் போகப் பிரவேசித்தனள். இந்தம்மாள் இந்த வண்டியின் உண்மையான விலை முடிவுக்கு வருகிறவரையில் மிகுதியும் விலைபேசவேண்டியதாயிற்று. இந்த வண்டி வில்லின்றியோடும் வலியுடையது, சக்கரமில்லாதது. அது பூமிக்கு உயரமா யிருப்பதினால் இறங்கவும் ஏறவும் மிகவும் கஷ்டமாயிருந்

த்து. பாதைகள் மிகுதியும் பள்ளமேடுகளாயிருப்பதனால் பயங்கரமான மார்க்கங்களாக இருந்தன. அப்படிப்பட்ட அபாயகரமான பாதைகளில் ஆயிரமைல் தூரம் வண்டியைச் செலுத்துபவன் மிகுதியும் தைரியத்தோடும் பொறுமையோடும் கூடி இருக்கவேண்டும். மிஸ். மார்ஸ்டன் தான் அனுபவித்த அனுபவங்களைப் பின் வருமாறு சொல்லத் தொடங்குவாள்:—"நீங்கள் இப்படிப்பட்ட பிரயாணம் ஒருநாள் செய்வீராயின், உங்கள் அவயவங்கள் நோகும்; தசையும் இன்னும் தேகத்திலுள்ளவைகளும் மிகுதியாக நோகும்."

"இவ்விதமாகப் பல கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு முதல்நாள் பிரயாணம் செய்தபின்பு ஒருவாரம் அம்சதூளிகா மஞ்சத்தின்மேல் சயனிக்க நீங்கள் விரும்புவீர்கள். இப்படிச் செய்யாமல், மஜில்கள் சிலவாகிலும் ஒன்றுக்கொன்று நெடுந்தூரம் உள்ளவையாயும் இருப்பதினால் நீங்களேறிச் செல்லும் வண்டியில் இரவு முழுவதும் போகவேண்டியதாயிருக்கும். சிலநாள் இவ்வித பிரயாணத்தைச் செய்வீர்களாயின் ஒரு மாதம் எல்லாவற்றையும் மறந்து ஆ! ஓய்ந்த பம்பரம்போல், ஓய்வையும் நித்திரையையுமே விரும்புவீர்கள்" என்றாள்.

இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்தைச் சேர்ந்தபோதுதான் மிக்க நோயினால் வருந்திய இந்தப் பெருமாட்டி யாதொன்றையும் கவனிக்கச் சக்தியற்றிருந்தாள். இந்த லோகோபகாரி அவ்விடத்தில் இரண்டுதினம் தங்கியிருந்து கவர்னரவர்களைக் கண்டு பிரார்த்தித்தனள். யாகட்ஸ்க் என்னும் பட்டணத்தில் வயிறார போஜனமும் புண்ணுற மருந்துமில்லாமல் வருந்தும் குஷ்டரோகிகளைப்பற்றிய விசனகரமான குறைகளைத் தான் கேள்விப்பட்டதாக கவர்னரவர்களுக்கு விண்ணப்பம் செய்துகொள்ள, அவரும் அதற்கு அங்கீகரித்து மிகுதியும் உதவிசெய்ய ஆவலுடையவராயும் கனவான்

கள் சிலரைச் சேர்த்து தருமகர்த்த சபையாராக்கி அவர்கள் மூலமாக வடக்கே சென்ற இந்த நோயாளருக்கு உதவி செய்யும்பொருட்டு அப்பட்டணத்திலுள்ள வர்த்தரிடம் பொருள் சேர்க்கத் தொடங்கவும் ஒத்துக்கொண்டார். இரண்டு பெரிய பிரதான அத்தியட்ச குருக்களும், அத்தியட்ச தேவாலயத்திலுள்ள குருக்களும், இராசாங்கத்து மந்திரிகளும், பட்டணத்திலுள்ள படைத்தலைவனும் ஆகிய இவர்கள் கூடி கவர்னரைச் சங்கத்தலைவராக்கி இந்த நோயாளிகளை ஆதரிக்கச் சட்டங்களை ஏற்படுத்தினர். அவர்கள் மிஸ். மார்ஸ்டன் தான் மேற்சொன்ன வியாதியில் படுகிறவர்களின் நிலைமைகளைப் பலவிடங்களிலும் போய்ப் பார்த்தபின்பு இந்த அம்மாளுடைய அறிக்கைக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். இப்படியாக இந்தச் சங்கமானது 1891-ம் வரு மேமீ 21௳ ஏற்பாடு செய்யப்பட்டது.

பிரயாணத்திற்குரிய சாமான்களைத் தயார்செய்துகொண்டும், யாகட்ஸ்க் என்னும் பட்டணத்து கவர்னருக்கு ஒரு கடிதம் தயார்செய்துகொண்டும் மிஸ். மார்ஸ்டன் இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்திலிருந்து புறப்பட்டாள். முதல் சிறிது தூரம் டாரண்டாஸ் என்னும் வண்டியில் ஏறிச்சென்று பின்னர் லீனா என்னும் ஆற்றைக்கடந்து சலத்தின்பேரிலேயே பிரயாணம்செய்து யாகட்ஸ்க் என்னும் நகரஞ்சேர்ந்தனள். இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்திலிருந்து யாகட்ஸ்க் என்னும் பட்டணத்திற்குச் சாமான் ஏற்றிக்கொண்டு போகும் ஓடத்தைப்பார்க்கிலும் இந்தம்மாள் ஏறிச்சென்ற படகானது அதிக நலமானதல்ல. மேலும் கப்பல் சரக்குகளோடு இந்தம்மாளிருந்தே நித்திரை செய்யவேண்டியதாக நேரிட்டது. மிஸ். மார்ஸ்டன் இங்கிலாந்தைவிட்டு ஏறக்குறைய பன்னிரண்டு மாதங்களாயின. இப்படிப் பிரயாணஞ்செய்து யாகட்ஸ்க்கை அடைந்தபொழுது, அங்கு கவர்னர் இல்

லாமையைக் கண்டு அதிக விசனத்தையும், நம்பிக்கை பங்கத்தையும் அடைந்தாள். "எழுந்திருப்பாள் காலில்லை." அந்த அதிகாரியைக் காணுவதாயின் சமுத்திரக் கரையோரமாய்ச் சென்று காட்டில் குறுக்குவழியாய்ப் போய் அதன் பின் ஆற்றையடைந்து ஜலமார்க்கமாகப் போய் அவர் செல்லும் படகைக் கண்டாலும் காணலாம். அந்தப் படகின் எஜமானன், இந்த அம்மாளைச் சீக்கிரத்திற் கொண்டு போய்விட ஒப்புக்கொண்டான். இவர்கள் அநேக மைல் தூரம் செடிகளடர்ந்த காட்டுச் சிறு பாதையிற் சென்று அதிசயமான நீண்ட சட்டையை உடுத்திக்கொண்டிருக்கும் யாகட்ஸ்க் ஜாதியார் அநேகரை வழியிற் கண்டார்கள். அவர்கள் ஆற்றிற்கருகில் வந்தபோது நீராவிக் கப்பலினின்று வரும் புகையின் தோற்றத்தைக் கண்ணுற்றார்கள். இதைக் கண்ட மாத்திரத்தில் உடனே தாங்கள் ஏறிவந்த சிறிய குதிரைகளைச் சீக்கிரத்தில் விட்டுக் கரையை அடைந்து ஒரு கப்பற்படகில் ஏறிப்போகும்போது புகைக்கப்பல் விரைவிற் போவதைப் பார்த்துத் தெளிந்து சாடையால் நிறுத்தும்படி செய்து சீக்கிரத்தில் அதன் அருகே சென்றபோது புகைக்கப்பலில் உள்ளவர்கள் படியேணி போட்டார்கள். கவர்னரும் மனப்பூர்வமாக மிஸ். மார்ஸ்டனுக்கு உபசாரங்களைச் செய்தனர்.

துஷ்டரோகிகளைப்பற்றி அவர் சொன்ன விருத்தாந்தங்கள் மிகுதியானவையும் பயங்கரமானவையுமாயிருந்தன. தான் புறப்படுகிறதற்கு முன்னம் அந்த அம்மாளுக்கு வேண்டிய உதவிகளைப்பற்றிய ஏற்பாடுகளைச் செய்து அவர்களிடம் அந்த அம்மாளைப் போகும்படி வேண்டினார். மிஸ். மார்ஸ்டன் இவ்விதமாக ஒரு மணிநேரம் வரையிலும் சம்பாஷணை செய்துவிட்டுத் தனது சிறிய கூட்டைப் படகில் வந்து சேர்ந்தனள். இந்த அபாயமான நதியானது "ஆகாசத்திலிருந்து அறுந்துவிட்டேன். பூமிதேவி ஏற்றுக்

கொண்டாள்". என்பதுபோல் மிகுந்த ஆவலோடு இவர்களுடைய நல்வரவை எதிர்கொண்டது. அவர்கள் படகைவிட்டுப் பூமியில் இறங்கும்போது இராத்திரி ஒரு மணியாய்விட்டது. அதன்பின்பு குதிரைகளின்மேல் சவாரி செய்துகொண்டு யாகட்ஸ்க் என்னும் நகரமடைந்தார்கள். சைபீரியாவின் வடகிழக்கிலுள்ள மேற்படி யாகட்ஸ்க் மாகாணமானது, 25 லட்சம் மைல் விஸ்தீரணமுள்ளதும், நானாவித ஜனங்கள் சஞ்சரிக்கின்றதுவுமாம். மேற்படி மாகாணமானது, ஐந்து பிரிவாகப் பிரிக்கப்பட்டும், இந்தப் பிரிவுகளும் கிராமங்களாகப் பிரிக்கப்பட்டும் இருக்கின்றன. இந்த யாகட்ஸ்க் என்னும் முக்கிய நகரமானது லீனு என்னும் நதிக்கரையில் உள்ளதும், ஏழாயிரம்பேர் வசிக்கும் ஜனத்தொகையுள்ளதுமாம். நான் இனி அதிகமாகக் கேள்விப்படப்போகிற விலாடிபூஸ்க் என்னும் பிரிவானது ஐந்துலட்சத்து ஐம்பத்தொன்பதினாயிர மைல் விஸ்தீரணமுள்ளதும் நான்கு கிராமங்கள் அடங்கியுள்ளதுவுமாம். இவ்விடத்தில் காடுகளையும் பள்ளத்தாக்குகளையும் ஏரிகளையும் காணக்கூடும். ஆனால், ஏரிக்கரைகளிலும் ஆற்றங்கரைகளிலும் ஜனங்கள் தங்கள் தங்கள் ஆடுமாடுகளைப் போஷித்து வருகின்றனர்.

சுதேசிகள் ஏறக்குறையப் பாதிப்பட்சத்தார் அற்பகுணமுடையவர்களும் விக்கிரகாராதனை செய்பவர்களுமாம். ஆனால் இப்பொழுது அநேகர் கிறிஸ்தவர்களாயிருந்தும், புறச்சமயத்தார் செய்யும் வழக்கங்களைத் தாங்களும் செய்ய சம்மதிப்பட்டவர்களாயிருக்கின்றார்கள். அவர்கள் ஏழைகள்: மிக்க மெல்லிய உரோம வர்த்தகத்தினால் ஜீவித்து வருகின்றனர். அநேகர் மரங்களின் பட்டைகளினால் பொருத்தமான பல வர்ணங்கள் பிரகாசிக்கும்படி கூடைகள் செய்துகொண்டும், தண்ணீர் குடிக்கப் பாத்திரங்களும், தொட்டில்களும் செய்துகொண்டும் வருகிறார்கள். ஜனங்கள் களிமண்

ணினாலும் சாணியினாலும் மேல்பூசப்பட்டுள்ள குடிசைகளில வாசம்பண்ணுகின்றனர். முற்கூறிய பெரிய நோயாளிகள் வந்து சேர்வதினால் அந்த ஊரார் மிக வறுமையை யடைகிறார்கள். ஆகையால் குடிகள் செலுத்தவேண்டிய வரிகள் அதிகமாகச் சேர்ந்து வருகின்றன. பாகட்ஸ்க் என்னும் பட்டணத்தில் இரவில் எட்டு மணிக்கெல்லாம் கதவை மூடிக்கொள்கிறார்கள். சீதளம் அங்கே அதிகம், மூடுபனி அடர்ந்துள்ளது. ஒரு வருஷத்தில் எட்டுமாதம், காலை பத்துமணிக்குமேல் வெளிச்சந்தோற்றும். மறுபடி மத்தியானம் இரண்டு மணிக்குள் இருள் சூழ்ந்துகொள்ளும். தினம் பன்னிரண்டுமணி நேரத்தில், ஆறுமணி நேரம் ஜனங்கள் சீட்டு ஆடுகிறதிலும், சுருட்டுப் பிடிப்பதிலும் காலங்கழிப்பார்கள். பெண்பிள்ளைகளும் சுருட்டுப் பிடிப்பார்கள், ஏழைகள் தங்கள் வீட்டுச் சன்னல் கதவுக்கு வேண்டிய கண்ணாடிக்குப் பதிலாக இரண்டு மூன்றங்குல கனமுள்ள பலகைபோன்ற பனிக்கட்டிகளை உபயோகித்து வருகின்றனர். சாமான்கள் வருஷத்திற்கு ஒருமுறை விற்கப்படும். ஜனங்கள் அப்போதுதான் பன்னிரண்டு மாதங்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்கிக்கொள்வது வழக்கம். மிஸ். மார்ஸ்டன் பாகட்ஸ்கில் வந்தவுடன் அத்தியட்ச குருவைக் காணப்போயினள். இவர் ஜனங்கள் விஷயத்தில் மிகுந்த ஆவலும் சுறுசுறுப்புமுள்ளவர். மேலும் பட்டணத்திலுள்ள கனம்பொருந்தியவர்களைச் சேர்த்து இந்தப் பெரிய வியாதியாளர்களுக்கு உதவி செய்வதாக இந்தப் புண்ணியவதிக்கு வாக்களித்தனர்.

போய்ச்சேர்வதற்கு அருகிலுள்ள காடுகளிலும் சதுப்பு நிலங்களிலும் இருக்கின்ற பெரிய வியாதிக்காரரைப்பற்றிய பயங்கரமான சவிஸ்தாரங்களை இந்த அத்தியக்ஷ குருவினிடத்தும், அந்தப் பட்டணத்திலிருந்த ஒரு வைத்தியரிடத்திலும் கேள்விப்பட்டாள். வைத்தியர் இந்த அம்மாளை

அவர்களுக்குத் தேயிலையும் புகையிலையும் கொண்டுபோய்க் கொடுக்கும்படி வேண்டினார். அத்தியட்ச குருவும் பிரதி தேசாதிபதியும் விசாரணைசெய்யும் வைத்தியரும் அந்த மாகாணத்து வைத்தியர்களும் ஆகிய யாவரும் ஒருங்குசேர்ந்து ஒரு சபை கூடினார்கள். எந்த வழியாகச் செல்லவேண்டுமோ அதைப்பற்றி ஏற்பாடு செய்துகொண்டனர். அங்கிருந்த பாளையக்காரன் ஒருவன் மிஸ். மார்ஸ்டனுடன் தான் செல்வதாயும் மேலும் இந்த அம்மாளுக்கு வேண்டிய பணமில்லாமை கண்டு வேண்டும் குதிரைகளை உதவிசெய்வதாயும் ஒத்துக்கொண்டான். "பக்கச்சொல் பதினாயிரமல்லவா?" வண்டியில் போவதினால் காடுகளில் அநேக சங்கடங்கள் நேரிடுவதையறிந்து, குதிரைகளின் மேற்செல்ல நிச்சயித்துக் கொண்டு, சாமான்களைத் தூக்கிக்கொண்டு வருவதற்கும் காட்டுக்கரடி முதலான மிருகங்களால் வரும் துன்பங்களைத் தடுக்கும்பொருட்டும் சில மனிதர்களையும் ஏற்பாடு செய்து கொண்டார்கள். இந்தக் குதிரைச்சவாரி மிகவும் ஆச்சரியகரமாயிருந்தது. இதில் மிஸ். மார்ஸ்டன் ஒருத்திதான் பெண்பிள்ளை. இவள் பதினைந்து மனிதர்களோடும் முப்பது குதிரைகளோடும் சென்றனள். "ஜெயமுள்ளமட்டும் பயமில்லை" என்று மிஸ். மார்ஸ்டன் பெரிய கைகளையுடைய சட்டையொன்றைப் போட்டுக்கொண்டு தன்னுடைய தோளின்மேல் சிறிய பை ஒன்று தொங்க இரண்டாயிரம் மைல் போகவேண்டியதைப்பற்றிப் பெண்பிள்ளைகளைப்போல் ஒரே பக்கமாக உட்கார்ந்து சவாரி செய்யாமல் ஆண்பிள்ளைகளைப்போலவே உட்கார்ந்து சென்றனள். இவர்கள் எல்லோரும் புறப்படுகிறதற்கு முன்னர் அத்தியக்ஷ குருவின் வீட்டிற்குச் சென்று கடவுளை நோக்கித் துதித்துப் பின்பு 1891-ம் ௵ ஜூன்௴ 22௳ புறப்பட்டார்கள். ஆனால் செல்லப் பாதையொன்றும் காணாதாகி மலைகளைச் சுற்றிக்கொண்டு எங்காயினும்

வழி கஷ்டமாயிருந்தால், சுற்று வழியாகச் சென்று போனார்கள். பிரயாணத்தின் முதலில் குதிரைகள் சதுப்பு நிலத்தில் இடைப்புவரையிலும் புதைந்தன; தன்னோடு வந்த மற்றவர்கள் குதிரைகளினின்றும் கூக்குரலிடவும், மிஸ். மார்ஸ்டன் தன்னால் கூடியவரையிலும் குதிரையைச் செலுத்திக்கொண்டு முன்வைத்தகால் பின்வைக்கமாட்டேன் என்று சென்றாள். பின்பு இராக்காலம் வந்தபோது கூட வந்தவர்கள் கூடாரம் அடித்துக்கொண்டு நெருப்பு மூட்டித் தேத்தண்ணீர் காய்ச்சிக் கொடுத்தார்கள். காடிவந்தால் உடனே சுடும்பொருட்டுத் துப்பாக்கி வைத்துக்கொண்டிருந்தவர்கள் அதின்மேலேயே படுத்துக்கொண்டு நித்திரைபோயினர். அங்குள்ள சிலரைக் காவல்காக்க வைத்தார்கள்; கொசுக்கள் அங்கே அநேகமாயிருந்தபடியால் அவற்றின் கடியினால் மிஸ். மார்ஸ்டன் கைகளும் மணிக்கட்டுகளும் அதிக நோயுடன் வீங்கின. மேலும் குதிரைகளின் கடிவாள வாரினால் அந்த அம்மாளுடைய கைகள் கொப்பளிக்கப்பட்டன. அந்த வார்கள் குதிரைகளின் வால்தோலினால் செய்யப்பட்டமையால் மிகவும் கடினமாயிருந்தது. இதன்றிக் குதிரைகளும் கொசுக்கடியினால் மிகவும் வருந்தின. இராக்காலங்களில் பூமியானது உஷ்ணப்படுவதனால், மழை பெய்தபின்பு அந்தப் புழுங்கப்பட்ட பூமியினின்றும், மூடுபனியாகிய குளிர்ந்த மேகம் எழும்புகின்றது. இந்தப் பக்கங்களில் காற்று இடி மின்னல்களோடுங் கூடிய புயல் மிகுதியும் அதிகம். இவ்வளவு பெரிய தேசத்தில், எங்காவது ஓரிடத்தில், ஆடுமாடுகளாலும், மனிதர்களாலும் சஞ்சரிக்கப்பட்டுள்ளதும், மிகுதியும் அசுசியானதும் ஆகிய ஒரு சத்திரத்தைக் காணலாம். பகல் குறைந்த கோடைக்காலத்துத் தினங்களிலுள்ள வெயிலின தீட்சண்ணியமானது, பகல் நீண்ட மாரிகாலத்துத் தினங்களின் குளிர்ச்சியைப்போலு மவ்வளவு கடுமையாகவேதானி

ருக்கும். வெயிலினின்றும் துன்பப்படாதிருக்க இந்தப் பத்துப்போடங்கிய கூட்டமானது இரவிலும் பிரயாணஞ்செய்வது வழக்கம். அநேக மரங்கள் விழுந்துள்ள பல காடுகளையும் கடந்து சென்றார்கள். இவ்வாறு மரங்கள் விழுந்திருப்பதை அங்குள்ள மந்திரக்காரிகளின் மகிமையென்று அங்கு வசிக்கும் மூடஜனங்கள் கட்டுக்கதையாய்ச் சொல்லுகிறார்கள்.

ஆனால் இப்படித் தரைமீது விழுந்துகிடக்கும் மரங்களைப்பற்றி மிஸ். மார்ஸ்டன் சொன்ன வுண்மையான காரணமானது இந்தக் கட்டுக்கதையைப் பார்க்கிலும், ஆச்சரியகரமாயும் கேட்க இன்பமாகவுமிருக்கும். இந்தக் காட்டுப் பூமியின் அடிப்புறமானது தகிப்பு வியாபித்துள்ளது. மழையினாலுண்டாகும் ஜலப்பிரவாகமும் வெயிலினால் பனிக்கட்டிகள் உருகி ஓடும் பனிச்சலமும் மேற்கூறிய தகிப்பை அடக்காமல் இருப்பதினால் இந்தத் தகிப்பானது தாக்கி அநேக மரங்களின் வேர்களை யெரிக்க நிலைதளர்ந்து நேரிடும் காற்று மழையினால் விழுந்திருக்கின்றனவே யன்றி வேறன்று. மிஸ். மார்ஸ்டன் இவ்விதமா யெரிந்த மண்ணை மாதிரிக்காக ஆங்கிலேய பலபொருட் காட்சிச்சாலைக்குக் கொண்டுபோயினள். காடிகளின் பயம் அடிக்கடி நேரிடுவதுமன்றி அங்குள்ள சுதேசிகள் தாங்கள் அப்போதுதான் பதினொரு காடிகளைப் பார்த்ததாகச் சொன்னார்கள். சில சுதேசிகள் மரத்தின் பட்டைகளைப் பாலில் கலந்து சாப்பிடுகிறார்கள். பால் கட்டியாக விற்கிறார்கள். இதுபோலும் பாற்கட்டிகள் இங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும் மத்தியிற் போகும் புகைக்கப்பல்களில் உபயோகப்படுத்தப்பட்டன. ஏறக்குறைய ஒவ்வொரு கப்பலிலும் பனிக்கட்டி வைத்திருக்கும் ஒவ்வொரு அறையைக் காணலாம். மாரிகாலத்தில் சைபீரியா என்னும் தேசத்தில் பிரேதங்களை அடக்கம்செய்வது மிகவும் கஷ்

டம். மூன்றுநாளிரவும் பகலும், பூமியின்மீது அக்கினியை
யுண்டாக்கி பின்பு பூமியைத்தோண்டி அதிலுள் பிரேதத்தை
அடக்கம் செய்வதினால் பிரேதங்கள் குளிர்ச்சியினால் அநேக
வருஷம் அழிவின்றியிருக்கும். இப்படியாகச் செய்யும் பிர
யாணத்தில் மிஸ். மார்ஸ்டன் மிகவும் தேகதளர்ச்சியடைந்து
சதுப்பு நிலங்களிலும் காடுகளிலும் கஷ்டத்துடன் சென்றும்,
இரவில்கூடாரம் அடித்துக்கொண்டும், சிலவேளைகளில் அசுத்த
யான மூட்டைப்பூச்சிகள் நிறைந்த குடிசைகளில் நித்திரை
செய்யும்பொருட்டுத் தங்கியும், "நாசி இரண்டு வருத்தாயி
னும் அதைக் காண்பது கஷ்டம்" என்பதுபோல் அநேகவித
மான கஷ்டங்களை அநுபவித்துக் கடைசியாக வில்யூயிஸ்க்
என்னும் பட்டணத்தைச் சேர்ந்தாள். பிரயாணஞ் செய்ததைப்
பார்க்கிலும் அதிக விஸ்தீரணமுள்ள ஒரு பாகத்தைக்
கண்டனள். இவ்விடத்தில் வசித்திருந்து வியாதியுள்ள
ஜனங்களுக்கு வரும் நோயைத் தீர்க்கும்படி ஒரு வைத்திய
தான் வைக்கப்பட்டிருந்தார். மிஸ். மார்ஸ்டன் ஜான் என்
பவனைக் கண்டனள். வெளியில் நின்றும் மிகவும் கஷ்
டப்படாமலிருக்கும்படி சாயங்காலம், மிஸ். மார்ஸ்டன்,
தான் அநேகநாள் பார்க்க எண்ணியிருந்த தருமவைத்
தியசாலையிலிருக்கும் இடத்திற்கு ஜான் என்பவருடன் சென்
றனள். இப்படியாக இந்த ஜான் காட்டின் வழியாய்
இருபது மைல் தூரம் குதிரை சவாரிசெய்த முடிவில்
தரும வைத்தியசாலையிருக்கும் இடத்திற்குச் சென்று அந்த
இடம் வைத்தியசாலை யிருக்கத் தகுந்த தன்மையைக் கண்
ணுற்றனள். இவ்விடத்தி லிருந்து யாவரும் நடு இராத்திரியில்
போய்ச் சேர்ந்தபடியால், அங்கு அன்றிரவு தங்கிச் சற்று
யோசனை செய்தபின்னர் இந்த வைத்தியசாலையைப்பற்றியும்,
குஷ்டரோகிகளைப்பற்றியும் சிறிது சம்பாஷணை செய்து
கொண்டே நித்திரை செய்துவிட்டாள். மறுநாள் பின்

மார்ஸ்டன் அநேக வருஷங்களுக்குமுன் கட்டியிருந்த ஒரு தரும வைத்தியசாலை அப்போது மூலதனமில்லாமையால், மூடப்பட்டிருந்ததைக் கண்ணுற்றனள். மிஸ். மார்ஸ்டன் குஷ்ட நோயாளர் வசிக்கு மிடமாகிய காட்டையும், படுக்கப் பாயும் தூங்க இடமும் இல்லாமல் இவர்கள் தனியாக வசித்துக்கொண்டிருப்பதையும், பக்கத்தில் இருக்கப்பட்ட கிராமங்களில் உள்ளவர்கள் தங்களுக்குத் தரும் உணவுகளைப் பெற்றுக்கொள்ளும்படி இவர்கள் அநேக மைல் தூரம் செல்ல வழி வெட்டியிருப்பதையும், அந்தப் பாதையில் நூறு மைல் தூரம் கம்பங்களைப் பூமியில் நட்டிருப்பதாகிய குறியினால் கண்ணுற்றனள். வழி முழுவதும் தறித்த கட்டைகளும் மரத்தின் வேர்களும் போடப்பட்டிருப்பதினால் இவ்விருவரும் தாங்கள் ஏறிச் செல்லும் குதிரைகளின் கால்கள் இடற அதிக சங்கடப்பட்டுக்கொண்டு, கடைசியாக அநேக நோயாளர் இருக்கின்ற இடத்தை அடைந்தார்கள். இந்த அம்மாள் குதிரையினின்றும் இறங்கி, நொண்டி, குருடர் முதலான அவயவம் இழந்தவரிடம் சென்றபோது, சிலர் பூமியில் விழுந்தும் சிலர் முட்டி போட்டுக்கொண்டும் இந்த அம்மாளையும் ருஷிய சக்கரவர்த்தினியாரையும் மிகுதியும் பயபக்தியோடு தோத்திரம் செய்தார்கள். இதன்பின் தேயிலை, புகையிலை, வஸ்திரம் முதலானவைகளை இந்த அம்மாள் அவர்களுக்கு அன்போடளித்தனள். மேலும் குஷ்ட வியாதிக்காரர் இருக்கின்ற குடிசைகளுக்குச் சென்று பெருங்கும்பலாய்ப் படுக்கப் படுக்கையில்லாமலும், போர்த்துக்கொள்ளப் போர்வையில்லாமலும், அவர்கள் வைத்திருந்த துணிகள் மிகக் கிழிவுற்றும், அழுக்குற்றும் இருப்பதினால் அந்தக் கொடுநோயாளர்கள் அநேக வருஷம் தங்கள் மரணகாலம் நேரிடும்வரையில், இவ்விதத் துன்பங்களினாலும், நோயின் கொடுமையினாலும் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்தனள். அவர் முக்கியமாக அழுகின மீன்களைத்

தான் தின்பது வழக்கம். அவர்களுடைய குடிசைகள் மூட்டுப்பூச்சிகள் நிறைந்தும், தங்கள் தங்கள் மனைவிமக்கள் ஆடு மாடு கன்றுகள் இவையாவும் யாதொரு வித்தியாசமின்றி அசுசியால் நிறையப்பட்டிருக்கின்றன. சிலகாலங்களில் இவர்களுக்கு அம்மை நோயும் வருவது வழக்கம். இதனால் மரணமடைகிறவர்களை அக்குடிசைகளுக்குச் சில கெஜதூரத்தில் புதைப்பார்கள். மிஸ். மார்ஸ்டனும் இன்னும் மற்றுமுள்ளவர்களும் அவ்விடத்தைவிட்டுத் திரும்புகையில் ஒரு காட்டுயானையது எதிர்வர அதைப்பார்த்துக் குதிரைகள் மிகவும் பயந்து வழியென் மரம் கிளை முள் என்பனவற்றையும் தெரியாமல் ஓட இதனால் மிஸ். மார்ஸ்டன் அதிக தொந்தரை அடைந்து குதிரையை விட்டுக் கீழிறங்கிவிட்டாள். அவர்களுடைய பிரயாணத்தில் சிறிதுதூரம் ஆற்றில் படகின்மீது செல்லவேண்டியதாகவிருந்தபடியால் அவர்கள் அதிக கஷ்டப்பட்டுக்கொண்டு செல்லுகையில் கொடிய காற்று மழை வந்தமையால் படகானது அடிக்கடி மோதப்பட்டது. கப்பல்கள் கடலில் விழுவது போலிருந்த அத்தருணத்தில் அவர்கள் படகைவிட்டிறங்கி பத்து மைல் தூரம் காட்டில் நடந்தும் சென்றார்கள். மிஸ் மார்ஸ்டன் இதுகாறும் நெடுந்தூரம் நடந்து கஷ்டப்பட்டவளல்லள். ஆகையால் மூன்று மைல் தூரம் நடந்தபின்பு சக்தியற்றவளாய் நின்று மறுபடியும் நடக்கத்தொடங்கி நாலு புத்தவீரர்களின் உதவியினால் மற்றுமுள்ள வழியைக் கடந்து அலுத்துப்போய் விராஸ்க் என்னும் பட்டணத்தைச் சேர்ந்தார்கள். இவ்விடத்தில் இந்த அம்மாள் தூக்கமின்றி அதிக கஷ்டப்பட்டமையாலும் இரண்டு நாளைக்குள் அநேக மைல் தூரம் பிரயாணம் செல்லவேண்டியதால் இரண்டு நாள் யாதொரு தொந்தரையில்லாமல் நித்திரை செய்தாள். இன்னும் இந்த நோயாளர்கள் அநேக இடங்களில் பரவியிருப்பதினால் இவர்களிடம் தானே நேரில் சென்று அவர்களுடைய

...ரிதாபிக்கும்படியான நிலைமையையும் நோயையும் பார்த்தா லொழிய அவர்கள் யாவரையும் ஒரு இடத்தில் ஒன்றாகச் சேர்க்க யாதொரு ஏற்பாடும் செய்ய சக்தியற்றவளாயிருந்தாள்.

...லை 27-ம் இந்த அம்மாளும் இன்னும் மற்றுமுள்ளவர்களும் பிரயாணப்பட்டுப் படகில் ஏறிச்சென்றும் காட்டில் குதிரை சவாரி செய்துகொண்டும் இராக்காலங்களில் கூடாரம் அடித்துத் தங்கியும் இவ்விதமாக நூறு மைல் தூரம் பிரயாணம் செய்துகொண்டு சிலிட்னி விலாஸ்க் என்னும் பட்டணத்தைச் சார்ந்தார்கள். இவ்விடத்தில் குஷ்டரோகிகளோடிருந்த ஒரு நல்ல குருவானவர் இந்த அம்மாளைக் கண்ட மாத்திரத்தில் இந்த நோயாளருக்கு உதவிசெய்யும்படி மிகுதியும் பிரார்த்தித்து ஒரு தரும வைத்தியசாலை கட்டுதற்குரிய ஏற்பாடுகளைப்பற்றிப் பேசித் தெளிந்தார்கள். இந்தவிடத்திலிருந்து இன்னும் நூற்றைம்பது மைல் சென்றால் இந்நோயாளர் இருக்கின்ற மற்றோரிடத்தைக் காணக்கூடும். ஒரு இடத்தில் பெரிய வியாதியால் பிடிக்கப்பட்ட பெண்பிள்ளையோடு பைத்தியம் பிடித்த ஒருவன் ஒரே குடிசையில் சுமார் நான்குவருடகாலமாக வாசமாயிருப்பதைக் கண்டார்கள். மற்றோரிடத்திற்கு அநேகநாள் குதிரையின்மேல் சவாரி செய்துகொண்டு போய்ச் சேர்ந்தபோது, அவ்விடத்தில், ஒன்று பெரிய வியாதியால் வருந்துகிறவர்கள் மிகுந்த குளிரினாலும், துணியில்லாமையாலும் கந்தைகளையும், வைக்கோல்களையும் போர்த்துக்கொண்டிருக்கக் கண்டார்கள். மற்றோரிடத்தில் இந்த வியாதியே பிடித்த ஒரு பெண்பிள்ளை சுமார் ஆறுவருடகாலமாகத் தனக்கு உணவு கொண்டுவந்து நூறு கஜதூரத்தில் வைக்கப்பட்டவுடனே வைப்போர் கைகொட்டிச் சத்தம்செய்து செல்லுகிற குரலோசை தவிர வேறொரு மனித சஞ்சார சத்தத்தைக் கேட்டவளல்லள். இப்படி வைக்கப்பட்ட உணவை இந்த நோயாளி மெல்ல மெல்ல நகர்ந்துகொண்டு

வந்து எடுத்துக்கொண்டு போகவேண்டியதாக விருக்கின்றது. இந்தப்பிரயாணத்தில் மிகுந்த ஆநந்தமும், ஆச்சரியமும் உள்ள ஒரு விநோதத்தைக் கண்ணுற்றனன். அது என்ன வெனில் மெல்லிய கூரைமேலணைந்த தரைக்கீழ்ப் பாதையில் குதிரைகள் செல்லும்போது எந்தச் சத்தம் உண்டாகுமோ அந்தச் சத்தமே இந்தக் குதிரைகள் பூமியின்மீது செல்லும் போதும், உண்டாவதைச் செவியுற்று அறிந்தனன். இதற் குக் காரணம் என்னவென்று யோசித்துப்பார்க்கை யில் பூமியின் கீழ் நெருப்பு கொதித்து மிகவும் அதிக கொடுமையாகப் பற்றி எரிவதே காரணமாகத் தோன்றுகின் றது. இரவு வந்தபோது தடித்த இருள் எங்களைச் சுற்றி லும் சூழ்ந்துகொள்ளக் கண்டோம். மிஸ். பார்ட்டன் தான் அநுபவித்த அநுபவங்களைப் பின்னும் சொல்லத் தொடங்கு வாள். இவ்விதமாகச் செல்லும்போது வெகு தூரத்தில் பலபக்கங்களிலும் விளக்கு வெளிச்சங்கள்போலக் கண் டோம். இதன்பின் இந்த வெளிச்சங்களெல்லாம் ஒன்றாய்க் கூடி ஒரு சோதியாய்த் தோன்றிற்று. இப்படியாக அநேக கஷ்டங்களை அநுபவித்துக் காட்டைக் கடந்த பின்னர் தணை கட்டின கப்பல்போல் ஒரு பெரிய பெருவெளியில் வந்து சேர்ந்தோம்.

ஆ, ஆ, என்ன இந்தப் பூலோகத்தின்கண் எப்போதும் கண்டிராத தோற்றம் என் கண்களுக்கு முன்னால் தோன் றியது. நாங்கள் தவிர மற்றப் பூமி முழுவதையும் எங்க ளைச் சுற்றி அநேக மைல்தூரம் பலவித வர்ணத்தோடுங் கூடிப் பூமியின்மேல் நான்குபுறத்திலும் சுடர்விட்டெழுந்துவர தோன்றக் கண்டோம். நெருப்பைச் சேர்ந்த யாவும் அதன் நிறமாகு மல்லவா? பின்பு நாங்கள் எங்களுக்குள்ளேயே மனதைச் சிறிது திடப்படுத்திக்கொண்டு எங்களால் கூடிய வரையிலும் நிதானித்துக் தாண்டிக்கொண்டே சென்றோம்.

இந்த அக்கினியாலுண்டாகும் புகை எங்கள் கண்களில் வந்து அடிக்கடி படியக் கண்டோம். மேலும் சுவாலையில் உண்டாகும் நெருப்புக் காற்றினால் எங்கள் சுவாசம் அடிக்கடி அடைக்கப்பட்டது. ஆனால் நாங்கள் இந்த அபாயத்தினின்றும் நீங்கிச் செல்ல வேறிடமில்லாமையால் நெருப்பினால் சுவாலை வீசப்பெற்ற வழியாகவே போகவேண்டியதாய் நேரிட்டது. நாங்கள் இதினின்றும் தப்பியபின்னர் உயிரோடுங்கூடி ஜீவந்தரா யிருப்போமென்று நினைக்கவேயில்லை; ஆனால் திரும்பிச் செல்வதைப்பார்க்கிலும் மரணமடைவதே நலமாகும். எங்கள் குதிரைகள் மிகுதியும் மூச்செறிந்துகொண்டே நடுங்கிச் செல்ல நாங்கள் மெதுவாக ஜாக்கிரதையாய்ச் செல்லலுற்றோம். இப்படி மூன்றுமைல் தூரம் நாங்கள் கடந்து செல்லும்போது சண்டாளக் குதிரைகளில் ஒன்று மிகுதியும் பயந்து இந்தக் கூட்டத்தினின்றும் பிரிந்து மிகவும் வேகத்தோடு செல்லலுற்றது. இது இந்த அக்கினிச்சுவாலை வீசுகின்ற பூமியின்கண் மிகுதியும் அபாயம் விளைவிக்கத் தக்கதென்று சொல்லவேண்டுமா, ஆகிலும் சிறிது நேரத்திற்குள் குதிரைகள் பயந்தெளிந்து சாந்தமாகவே நாங்கள் எல்லோரும் பின்னர் நெடுமரங்களடர்ந்த ஒரு அழகான வனத்தில் வந்து சேர்ந்தோம்.

இப்படியாக மிஸ். மார்ஸ்டன் அநேக கஷ்டங்களை அனுபவித்த பின்பு தேகத்தளர்வெய்தினாள். இந்த அம்மாள் குதிரையின்மீது விடாமல் சவாரி செய்ததனால் நோயொன்றுண்டாகி மிக வருந்தி ஒரு நாள் இளைப்பாறும்படி நேரிட்டது. இன்னுமுள்ள பிரயாணமனைத்தும் மிகுந்த சங்கடத்துடன் மிஸ். மார்ஸ்டன் சென்றனள். சிலவேளைகளில் நோய் பொறுக்கமுடியாமலிருந்தாள். அவள் அப்போது மற்றவர்களால் கீழே யிறக்கப்பட்டு மிகுந்த நோயுடன் நித்திரை செய்தாள். மறுபடியும் நித்திரை நீங்கி விழித்துக்கொண்ட

பின்பு கடவுள் தான் எடுத்துக்கொண்ட வேலையை முடிக்கத் தனக்குப் பலங்கொடுப்பார் என்னும் எண்ணத்தோடு குதிரையின்மீதேறி சவாரி செய்துகொண்டே போனாள். இப்போதும் நாளுக்குநாள் குஷ்ட ரோகயாளர் தனித்தனியாகவும், ஐவர் அல்லது பதின்மர் கூடியாவது இருக்கக் கண்டுகொண்டே வந்தனள்.

யாகட்ஸ்க் என்னும் பட்டணத்திற்குத் திரும்பிச் செல்லுகையில் ஒரு நாளுக்கு எழுபது மைல் வரையில் சாப்பாடும் நித்திரையும் அதிகமின்றிச் சென்றனள். கடைசியாக இருபது மைல்தூரம் நடந்து சென்றபின்னர் மிஸ். மார்ஸ்டன் குதிரைச்சவாரி செய்யச் சக்தியற்றவளாயிருந்தபடியால் ஒரு வண்டியைப் பேசி அதின்மேல் வைக்கோலைப் பரப்பி அதின்மீதேறிச் சென்று இருபது மைல்தூரம் சவாரி செய்தபின்னர் யாகட்ஸ்க் என்னும் பட்டணத்தை அடைந்தார்கள். அவ்விடத்தில் மிஸ். மார்ஸ்டன் தன்னோடு துணையாக வந்தவர்களுக்கு வந்தனஞ்செய்து இவ்விடத்தில் தான் யாதொன்றும் செய்யமாட்டாமல் "பசிக்குச் சாப்பாடு வேண்டாம், தூக்கத்துக்குப் பாய்வேண்டாம்" என்றவாறு இருபத்து நான்கு மணிநேரம் மெய்மறந்து நித்திரை செய்தாள். இதன் பின்னர் முதல் இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்திற்குப் போக லீனா என்னும் ஆற்றைக் கடக்கும்பொருட்டுப் படகின்மீது ஏறிச் சென்றாள். இந்தப் படகில் ஜனங்கள் அடைந்திருப்பதையும் போதுமான உணவு இல்லாமையையும் கண்டனள். ஆனால் இந்த அம்மாள் அர்ப்பபலமாயிருந்தபடியால் தான் யாதொன்றும் செய்யாளாகிக் கப்பற் பள்ளியறையிற் படுத்துக்கொண்டு அனாதுயிலாக அந்தநாள் முழுதுமிருந்தாள். இதன் பின் இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்தை அடைந்து கவர்னர் ஜெனரலவர்களைக் கண்டாள். அவரும் இந்த அம்மாள் கண்டு வந்த குஷ்டரோகிகளைப்பற்றிச் சொல்லப்போகின்ற விர்த்தாந்

தங்களைக் கேட்கும்வண்ணம் ஒரு சங்கம் ஏற்படுத்தினார். மிஸ். மார்ஸ்டன் மாஸ்கோ ஸெண்ட் பீடர்ஸ்பர்க் என்னும் இரண்டு பட்டணங்களிலுள்ள தலைமையானவரிடம் இடமற்ற குஷ்டரோகிகள் வசிப்பதற்கு ஓரிடம் உண்டுபண்ண வேண்டியதற்குரிய பொருளுதவி செய்வதைப்பற்றிப் பேசவேண்டுமென்றனள். இது இர்கட்ஸ்க் என்னும் பட்டணத்திலுள்ள ஜனங்களை மிகுதியும் எதிர்த் தூண்டினதால் இந்த அம்மாள் இவ்விடத்தைவிட்டு நீங்குதற்கு முன்னமே பதினையாயிரம் ரூபாய் சேர்ந்துவிட்டது. இந்தப் பெண்மணி இத்தொகையை கவர்னரிடமே ஒப்புவித்துவிட்டு டாமஸ்க் என்னும் பட்டணத்திற்கு இர்கட்ஸ்கிலிருந்து மூன்று குதிரைகள் கட்டிய சாதாரணமில்லா வண்டியிற் சென்றாள். இவ்விதமான வண்டி அதிக அதிர்தமாய்ச் செல்லும். இந்த அம்மாள் டாமஸ்க்கை அடைந்தவுடன் அங்கிருந்த கன்னியர்மடஞ் செல்லவே அந்த மடத்துத் தலைவியும் மிகுந்த அன்புடனே உபசரித்தனள். மிஸ். மார்ஸ்டன் குஷ்டரோகிகள் படும் வருத்தங்களையும் மேலும் அவர்களுக்கு வேண்டியவற்றையும் அந்த மடத்திலுள்ள கன்னிகைகளுக்கும் தலைவிக்கும் விவரித்துச் சொல்லவே அவர்கள் மிகுதியும் மனம் வருந்தினார்கள். “இப் பெரிய வியாதியால் வருந்துகிறவர்களுக்கு உபசாரம் செய்ய சுயநலம் பாராட்டாத பெண்பிள்ளைகள் வேண்டுமென்று அந் நக் கன்னியர்மடத்துத் தலைவியை கிறிஸ்துவின் பெயரால் அழைத்து வேண்டினேன். நான் பேசின பின்னர் அந்த அம்மாள் சாந்தமாய் யோசித்து நான் அப்படியே கிறிஸ்துவின்பொருட்டே நீங்கள் வேண்டியவற்றைச் செய்ய விருப்பமுடையவளாக விருக்கிறேன். ருஷியாதேசத்தில் உயர்ந்த வகுப்பினர் வீட்டினின்றும், மத்திம வகுப்பினர் வீட்டுப் பெண்களினின்றும் கன்னியர்மடத்தில் தருமசகோதரிகளாகச் செய்யப் பெண்களை வரவழைத்துக்கொண்டும், பயிர்த்

பொருளுதவிநிமித்தம் உபகார சிந்தையுள்ள சில உதாரிகளு டன் ஆலோசித்து ஏற்பாடு செய்தனள். அன்புடைய ராணி யார் சொல்லுதவி வீண்போகுமா? வெகு சீக்கிரத்தில் பொரு ளும் சேகரிக்கப்பட்டு அதற்கேற்க நிதியும் உண்டுபண்ணினா ர்கள். வர்த்தமான பத்திரிகைகளிலும் சகலமான ஜனங்களுக் கும் இந்தத் தருமவிஷயம் தெரிவிக்கப்பட்டது. குஷ்டரோ கிகளை ஆதரிக்கும்பொருட்டு முன்னமே யோசித்தபடி நவீன மாய்க் குடியேறத் தேசம் ஒன்றை உண்டாக்குவதில் மிஸ். மார்ஸ்டனுக்கு உதவிசெய்யும்படி பெரிய வியாதியாகிய கொடி யநோயைத் தீர்க்க வைத்தியத் தேர்ச்சியடைந்து யாவருக்கும் தெரிந்த ஒரு வித்தியார்த்தியாகிய பீட்டர்ஸன் என்பவர் ஆங்குள்ள வைத்தியக் கூட்டத்தாரால் நியமிக்கப்பட்டனர். யாகட்ஸ்க் என்னும் பட்டணத்திற்கும் அதைச்சேர்ந்த தேசங் களுக்கும் சென்று அவ்வூரார்களை அறிந்த வைத்திய பண் டிதர்கள் ஒரு சிறு சபைகூடி. மேற்சொன்ன ஏற்பாட்டுக் கிசைந்து பின்வருமாறு நியமனம் செய்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் பத்து நோயாளிகள் வாசம் செய்யக்கூடிய பத்து வீடுகளைக் கட்டவேண்டுமென்றும், பெரிய வியாதியின் மிகுந்த கொடுமையினால் வருந்துபவர் வைத்தியஞ் செய்துகொள் ளும்பொருட்டு ஆண் பிள்ளைகளுக்கும் பெண் பிள்ளைக ளுக்கும் தனித்தனியாக இரண்டு ஆஸ்பத்திரிகளும், வைத் தியர் ஒருவருக்கும் அவருக்கு உதவிசெய்துவரும் இருவ ருக்கும் ஒரு வீடும், வைத்தியசாலையில் பணிவிடை செய் யும் பெண்பிள்ளைகளுக்கு ஒரு வீடும், குருக்களிருக்க ஒரு வீடும் ஒரு கோவிலும், இவையன்றித் தொழிற்சாலையொன் றும், ஸபாமண்டபம் ஒன்றும், ரொட்டி செய்ய ஒரு பாகசா லையும், மயானச்சாலை ஒன்றும் ஆகிய மேற்சொல்லிய கட்ட டங்களைக் கட்டி முடிக்கவேண்டுமென்றும் ஏற்பாடு செய் தார்கள். பெரிய வியாதிபிடித்த புருஷனுக்குப் பெண்சாதி

குழந்தை முதலிய சமுசாரமிருந்தால், அவன் மேற்படி
சமுசாரத்தோடும் மற்றவர்கள் தனித்தனியாகவும் இருக்க
வேண்டுமென்றும், ஒவ்வொரு வீடும் ஒரு தோட்டமும், சமய
லிடமும், இரண்டு பசுவிருக்கத்தக்க தொழுவமும், தனித்
தனியாக உடைத்தாயிருக்கவேண்டுமென்றும் முடிவுசெய்தார்
கள். இப்படியாக நவீனமாய்க் குடியேறப்போகின்ற இந்த
தேசத்தை உண்டுபண்ண ஏறக்குறைய ஒன்பதினாயிரம் சவ
ரன்கள் (9000 £) வேண்டியதாயிருந்தன. மாஸ்கோவில்
அநேக பாடசாலை உண்டுபண்ணின பரோபகாரியும், ஜனங்
களுக்கு மிகுதியும் உபயோகப்படத்தகுந்த புத்தகங்களைப்
பரவச்செய்வதற்குரிய சங்கத்தாருள் தலைவியும் ஆகிய ஸ்மரீ
காலாப் என்னும் பெயருடைய பெருமாட்டியைக் காணும்
படி ஒரு கடிதம் கேட் மார்ஸ்டனுக்குக் கொடுத்தார்கள்.
இந்தப் பரோபகாரியும் கேட் மார்ஸ்டனைத் தன்னோடிருந்து
மாஸ்கோவென்னும் பட்டணத்திலுள்ள ஜனங்களுக்கு இந்த
மகா ரோகிகள்மேல் பரிதாபம் உண்டுபண்ணும்படி வேண்
டினள். ருஷியாதேசத்திலுள்ள சில குலப்பெண்கள் சபை
சேர்ந்து பரோபகாரமான கிருத்தியங்களைச் செய்துகொண்டு
வந்ததுமன்றி இன்னும் நூறு பெரிய நோயாளிகளுக்கு
வேண்டிய ஆடைகளையும் நவீனமாகக் குடியேறப்போகிற
ஊருக்கு வேண்டிய சாமான்களையும் இன்னும் பலவிதமான
வேலைகளுக்கு உபயோகப்படுவதற்குரிய சணல் நூற்புடை
வைகளையும் சித்தப்படுத்துவதில் பிரவேசித்தனர். மாஸ்கோ
வென்னும் பட்டணத்தில் இருந்த ஷகூஸ்கா என்னும் இராஜ
குமாரியினிடம் தரும சகோதரி முறைமையைப் பாராட்டி
வந்த ஓர் கன்னிகை மிஸ். மார்ஸ்டன் இப்பெரிய நோயாளிக
ளைப்பற்றிய விருத்தாந்தமனைத்தும் சொல்லக் கேட்டனள்;
மேலும் ஐந்து கன்னிகைகள் பெரியவியாதி கண்டவர்நிமித்த
தம் சைபீரியாவுக்குப் போகச் சம்மதிப்பட்டார்கள். இராஜ

குமாரியால் நியமிக்கப்பட்ட வைத்தியசாலையில் நானூறு ஜனங்கள் பலவிதமான வியாதிகளினால் வருந்திக்கொண்டிருந்தார்கள். அவர்களில் அநேகர் பைத்தியம் பிடித்தவர்கள். இவ்விடத்தில் இந்நோயாளர்கள் அறுபது கன்னிகைகளால் பணிவிடை செய்யப்பட்டு வருகின்றனர். ஆனால் இந்தச் சாலையோ முக்கியமாக இராஜகுமாரியினால் ரக்ஷிக்கப்பட்டு வருகின்றது. மேற்கூறிய கன்னிகையர் ஐவரும் அந்நோயாளரிடம் போய்ச் சேருவதற்கும், மற்றுமுள்ள செலவுக்கும் எண்ணாயிரம் ரூபாய் ஸோராபிட்ஸ் என்பவரால் அனுப்பப்பட்டது. 1892-ம் ௵ மேய௴ மறுபடியும் திரும்பி வருவதற்கு அசாத்தியமான நெடும் பிரயாணம்போக இக்கன்னியர்கள் நிலைப்பட்டார்கள். மிஸ். மார்ஸ்டன் இதன் பின்னர் இங்கிலாந்துக்குச் சென்று சைபீரியாவிலுள்ள குஷ்டரோகிகளைப் பார்க்கப் போனபோது, தான் கண்ட சக்கரமில்லா வண்டியைப்பற்றியும், குதிரை சவாரியினால் தனக்கு நேரிட்ட அனுபவத்தைப்பற்றியும் ஒரு புத்தகம் எழுதவும், அமெரிக்காவில் சென்று இதைப்பற்றி நன்றாக ஜனங்களுக்கு விளங்கும்வண்ணம் பிரசங்கம் செய்யவும் தொடங்கினாள். இந்தப் பெண்சிரோமணி எழுதின புத்தகத்திலிருந்துதான் இச்சரித்திரம் எடுத்தெழுதப்பட்டது. இந்தப் புத்தக வியாபாரத்தில் வரும் பொருளினால் இவ்வுலகத்தில் வருந்துகின்ற இக்கொடிய நோயாளர் பலரையும் ஆதரிப்பதில் முக்கியமான கருத்துடையவளாயிருந்தாள். சொற்சுவை பொருட்சுவைகளிலான சரித்திர சங்கிரகம் மிஸ். மார்ஸ்டன் எழுதினதைப்பார்க்கிலும் இன்னும் நன்றாக முடிவு பெறும்படிச் செய்தல் மிக அரியதாகும்.

ஒருகாலத்தில், ஒரு பிரபுவானவர் ஓர் தரும வைத்தியசாலையைப் பார்க்கச் சென்றபோது அதில் அநேகர் இக்கொடிய வியாதியினால் வருந்தக் கண்டு அச்சாலையைத்

தாண்டி, அங்கு தான் அக்கொடிய நோயாளிகளின் பரிதாப நிலைமையைப் பார்த்தபோது தன் மனம் கசிந்ததை யோசித்து, தன்னோடு பின்தொடர்ந்த ஒரு பணிவிடைக்காரியைப்பார்த்து, நீ இப்படிப்பட்ட இடத்தில் இருப்பதால் அதிக அபிமானமும் பரோபகார குணமும் உடையவளாக இருக்கிறாய் என்பது நிச்சயமென்று சொன்னார்.

அதற்கு அப்பணிவிடைப்பெண் "நான் இங்கிருப்பதற்கு அபிமானமும் பரோபகார குணமும் காரணங்களல்ல; சர்வரக்ஷகர்மேல் வைத்திருக்கும் பக்தி விசுவாசமே காரணமாகும்" என்றனள்.

# FRANCES POWER COBBE.

*The Animal's Friend.*

Born 1822.

## மிஸ். பிரான்ஸிஸ் பவர் காப் என்னும் ஜீவகாருணியமுள்ள சீமாட்டி.



வாயில்லாத ஜந்துக்கள் விஷயமாய்ப் பாடுபடுகிறவர்கள் பெரிய புருஷர்களாவது ஸ்திரீகளாவது மிகவும் அருமை. ஆகிலும் இந்நற்காரியத்தில் இடைவிடாது உழைத்தவர் ஒருவர் உண்டு; அவர் யாரெனில், மிஸ். பிரான்ஸிஸ் பவர் காப் என்னும் பெருமாட்டியாம். சில காலத்துக்குமுன் இங்கிலாந்தில் மிகவும் கேடுகெட்ட வழக்கம் ஒன்று உண்டாயிற்று. இரணவைத்தியர்கள் கைப்பயிற்சி உண்டாவதற்காக உயிருள்ள மிருகங்களைச் சேதித்தும் அறுத்தும் வந்தார்கள். இக்காலத்திலோ இவ்வகைப் பிராணி வதையானது சரியல்லவென்று பெரும்பான்மையோர்க்குத் தோன்றிவருகின்றது; இதற்கு முக்கியகாரணம் மேற்கூறிய பெருமாட்டி ஒரு தலைமுறைக் காலமாகச் செய்துவந்த முயற்சியே.

வாயில்லாத பிராணிகளிடத்தில் அன்பு வைக்கவேண்டும் என்பதைக்குறித்து வழக்காடினதுதவிர வேறு நற்செய்கைகள் ஒன்றும் செய்யவில்லையா இப்பெருமாட்டி யென்றாலோ, அப்படியல்ல. இவர் செய்திருக்கிற சிறந்த காரியங்களும் நடத்தியிருக்கிற விசேஷமான நடவடிக்கைகளும் எத்தனையோ உண்டு. அவைகளையெல்லாம் விவரிக்கின் மிகப் பெருகும்.

சென்ற நாற்பதுவருஷ காலத்துக்குள் மிகுந்த பிரசித்தியுடன் வாழ்ந்தவர்கள் அனைவரும் இவருக்குத் தெரியும்; அவர்களில் ஒருவராவது இப்பெருமாட்டிக்குச் சிநேகமில்லாதவரில்லை. அக்கீர்த்திமான்கள் தங்கள் கையால் இவருக்கு எழுதி யனுப்பியிருக்கிற கடிதங்களைப் பரிசோதித்துப் பார்ப்பதே ஆனந்தகரமாயிருக்கிறது. மிருகச்சேதன சாலையின் கொடுமைகளை நிறுத்தவேண்டுமென்கிற இவருடைய கோட்பாட்டிற்கு அவர்கள் எல்லோரும் இணங்கினார்கள்.

இத்துரைமகளின் வாழ்நாளில் 1863-ம் ஆண்டு மிக்க ஏற்றமானது. இவ்வருஷத்தில்தான் இவர் தாம் கொண்ட சீர்திருத்தத் தொழிலைத் தொடங்கியதும், பத்திரிகைகள் எழுதத்தொடங்கியதும். பாரிஸ் நகரத்துக்கு அருகில் ஒரு கிராமத்தில் மிருக வைத்தியர்கள் என்று பேரிட்டுக்கொண்டிருந்தவர்கள் சிலர் தீட்டத் தீட்டக்கூராகிய ஆயுதத்தால் மிருகங்களைச் சேதித்துத் தங்களுடைய கத்தித்தொழில்களைச் செய்வதை இவர் கண்டார். அவர்கள் அவ்வாறு செய்தது தங்களுக்குக் கைப்பழக்கமும் சாஸ்திரப்பயிற்சியும் உண்டாகும் பொருட்டன்றி வேறல்ல. இறந்துபோன மிருகங்களுடலில் தங்களுக்குவேண்டிய பரீக்ஷைகளை நடத்திப் பார்த்தாலும் போதுமானதாயிருக்க, உயிருள்ள சில குதிரைகளுடலில் அறுபதுவிதமான அப்பியாசங்கள் செய்யப்பட்டனவாம். ஒரே மூச்சாக எட்டுமணிநேரம் அக்குதிரைகள் சின்னபின்னமாக வதைக்கப்பட்டனவாம். ஐயோவென்று சொல்ல யாருமில்லாத அந்த மிருகங்களின் பரிதாபமான காட்சியானது இப்பெருமாட்டிக்கு மிகுந்த வருத்தத்தை உண்டுபண்ணிற்று. அதுமுதல் இந்த அப்பியாசத்தைக் கண்டிக்க எவ்வளவோ பிரயத்தனம் பண்ணிவருகின்றார். அவர் பத்திராதிபராக எழுதத் தொடங்கியதும் இக்காலந்தான். 'மனிதனுடைய சுதந்தரங்களும் மிருகங்களின் உரிமைகளும்' என்று ஒரு பத்

திரிகையை முதல் முதல் எழுதினார். பிறகு பற்பல விஷய மான எத்தனையோ பத்திரிகைகளும் கிரந்தங்களும் எழுதிக் கிரந்த கர்த்தாவாக விளங்கி வந்தாலும், தாம் மேற்கொண்ட சீர்திருத்தும் காரியத்தைமட்டும் சிறிதேனும் மறக்காமல் என்றும் ஒரேசீராகப் பாராட்டி முயன்றுவருகிறார்.

இவர் சங்கற்பித்துக்கொண்டிருக்கிற காரியத்தில் இவ்வளவு சிரத்தை வைத்திருக்கிறார் என்பது இவருடன் ஒரு மணிகாலம் சம்பாஷித்தால் யாருக்கும் தெரியவரும். ஜீவ வதை கூடாதென்னும் தம்முடைய வழக்கையாடுவதில் இவர் முன்போல இப்போது முன்வரிசையில் நிற்காவிட்டாலும், 'கத்திவதையினின்று பிருகங்களை விடுவிக்க விக்டோரியா வீதிசபை' என்று ஏற்பட்ட சபையின் காரியதரிசியாகச் சம்பளமில்லாமல் 10 வருஷம் சேவித்த நாளில் எவ்வாறோ, அவ்வாறே நாளைக்கும் அதிக ஊக்கத்துடன் ஹெங்கர்ட் என்னும் வீட்டிலிருந்துகொண்டு தாம் பிடித்த கட்சிக்குப் பாடுபடுகிறார். ஹெங்கர்ட் என்னும் மாளிகையோ குன்றுகளும் சோலைகளும் பச்சைமரங்களும் சூழ்ந்து ரிஷியாச்சிரமம் போல் ரமணீயமாயிருக்கிறது. இந்த வாசஸ்தலம் இவருக்குக் கிடைத்ததே ஒரு ஆச்சரியம். இது 1896-ம் ஆண்டில் இறந்துபோன தம்முடைய இணைபிரியாத தோழியாகிய மிஸ். லாயட் என்பவருடைய சொந்த வீடாயிருந்தும், தாம் வபது மிகுந்து உழைப்புவேலையினின்று ஒழிந்து ஏகாந்தவாசம் பண்ணக் கருதிய சமயத்தில் தாமும் தோழியுமாய் ஒரு சிறிய வீட்டில் குடியிருக்கும்படி நேரிட்டது; ஏனெனில் ஹெங்கர்ட் என்னும் வீடு தங்கள் கையின்கீழிருந்தும் அந்தப் பெரிய மாளிகைக்குத் தகுந்த அலங்காரமும் பரிவாரமும் வைத்துக்கொள்ளப் பணமில்லை. இக்காரணத்தினால் அதை அன்னியருக்குக் குடிக்கூலிக்கு விடுவதைத்தவிர வேறு வழியில்லையென்று நிச்சயித்து என்னைத்தினம் நியாயாதிபதிகள்

முடிவான தீர்மானம் சொல்வதாக அறிவித்திருந்தார்களோ அன்றைத்தினம் காலையில், மிஸ். காப் என்பவருக்கு ஐசுவரியம் கிடைத்துவிட்டது என்று தபாலில் வக்கீல் மூலமாகச் சமாசாரம் வந்தது. பணம் வந்தவழியாதெனில், ஏழை வயிற்றில் பிறந்து திரளான பொருள் சம்பாதித்து வைத்துக்கொண்டிருந்த மிஸ். யாட்ஸ் என்ற ஒரு ஆணைமகள் மிஸ். காப்பினிடத்திலும் இவருடைய ஜீவகாருணியத் தொழிலிலும் தீவிரமான விசுவாசம் பிறந்து அந்தியகாலத்தில் தன்னுடைய தனத்தில் பெரும்பான்மையையும் இவருக்கு எழுதி வைத்து விட்டாராம். தக்ஷணமே இவரும் தோழியும் ஹெரங்கர்ட்வீட்டிற்கு மாற்றம் செய்து கொண்டனர். முன்னவர் நாளதுவரைக்கும் அவ்விடத்திலேயே வசித்துவருகிறார். 1876-ம் வருஷத்தில் தாம் ஏற்படுத்திய 'விக்டோரியா வீதி சபை'யினின்று சென்ற வருஷம் விலகி 'மிருகாங்க சேதனகண்டன பிரிட்டிஷ் யூனியன்' என்ற ஒரு புதிய சபையை ஏற்படுத்தினர்.

ஆணுகட்டும் பெண்ணுகட்டும் மிஸ். காப்புக்கு யார் யார் சினேகமோ, அவர்கள் எல்லோரும் இவருடைய கருத்துக்கு இசைந்தவர்கள்தாம். கல்நெஞ்சராயிருப்பவரையும் தக்கவண்ணம் போதித்து மனதுருகச்செய்ய இவருக்குச் சாமர்த்தியமுண்டு. இது இவரிடத்திலிருக்கிற நேசர் கடிதங்களினால் தெரியவருகிறது. ஜீவகருணையைப்பற்றித் தத்தமக்குத் தோன்றிய தோற்றங்களையெல்லாம் அவர்கள் எல்லாரும் கடிதத்தில் எழுதி இவருக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

இவருக்கு பிரௌனிங் துரை என்ன எழுதியிருக்கிறார் என்றால், 'நமக்கு எள்ளளவும் நோவக்கூடாது என்கிற வியாஜத்துக்காக ஒரு நாயையோ பூனையையோ பிராணஹிம்சை செய்வதைக்காட்டிலும் நானே சித்திரவதைக்குள்ளாவேன்' என்றும், மற்றொரு சந்தர்ப்பத்தில் வேறொரு

தூர்நடத்தையைப்பற்றிப் பேசும்போது 'புறாக்களைச் சுடுவ தாகிய கொடூரம் எப்போது ஒழியுமோ! ஜீவவதையோ அதை விடக் கொடியது? இதின்மேல் யார் கங்கணம் கட்டுகிறார் களோ, அவர்களுக்குத் தெய்வம் அனுகூலம் தருக' என் றும் எழுதியிருக்கிறார். தென்னிஸன் என்னும் இராஜகவி சிரேஷ்டன் மிஸ். காப் நாட்டுப்புறத்தில் ஏகாந்தவாசியா யிருக்கும் காலத்தில் போய்ப்பார்த்துக் கவித்துவத்தைக்குறித் தும் வைத்தியபண்டிதர்கள் செய்யும் கொடுமையைக் குறித் தும் பேசிக்கொண்டிருந்ததுமல்லாமல் 'செத்தவர்களின்மேல் தம்முடைய பரிகாசங்களைக் காட்டித் தம்மிடத்தில் அன் பும் ஆதாரவுமாய்த் தமது அடிவாரத்தில் கெஞ்சிக் காத்தி ருக்கும் நாயைக் கண்டம் கண்டமாய் அறுப்பவர்கள்' என்று தான் தன்னுடைய ஒரு கவியில் சொல்லியிருப்பதைப் பார் த்து ஒரு சாஸ்திரி மிகவும் கோபங்கொண்டார் என்றும் சொன்னாராம். இது விஷயமாக மிஸ். காப் அனுப்பிய விண்ணப்பங்களில் இராஜகவியாகிய தென்னிஸனுடைய கை யொப்பமில்லாதது கிடையாது. அன்றியும் இவளை அவர் கடைசியாகக் கண்டபோது 'அம்மா போய் வருகிறேன். நற்சண்டையைச் செய்யுங்கள், தளரவேண்டாம்' என்று தைரியம் சொன்னதாகவும் தெரியவருகிறது. இப்படியே புத்தியிலும் கல்வியிலும் சிறந்தவர்கள் இவருக்கு எழுதி யிருக்கிற கடிதங்கள் அனேகமுண்டு.

லண்டன் நகரத்தில் கண்ணியமுள்ளவர்களுக்குள் தாமும் ஒருவராய் விளங்கி ஜீவகாருணியத்தைத்தவிர மற்ற விஷ யங்களைப்பற்றியும் மிஸ். காப் பல பெரியோரோடு சம்பா ஷிப்பதுண்டு. ஜான் ஸ்டுவார்ட் மில் என்னும் சாஸ்திரி இவருக்கு நன்றாய்த் தெரியும். அவனைவிடக் கபடமற்ற வித்துவான் கிடையாது என்று இவரால் நமக்குத் தெளி வாய்த் தெரியவருகிறது. ஒருநாள் ஆத்துமா நித்தியம், ஆதா

அழிவில்லாதது. என்பதைக் குறித்து இவர் அவருடன் பேசும்போது நெஞ்சுருகிக் கன்னத்தில் இரத்தம் தளும்பிக் கண்ணீர்விட்டாராம். ஈரமில்லாதவர் என்று எல்லாராலும் சாதாரணமாக எண்ணப்பட்ட புருஷனுக்கு இவ்வளவு உணர்ச்சியும் உருக்கமும் உண்டாயிற்றேயென்று மிஸ். காப் ஆச்சரியப்பட்டார். சார்லஸ் கிங்ஸிலி என்னும் பண்டிதனைக் கடைசியாக இவர் பார்த்தபோது அவருடைய ஏகாந்தசீலம் இவருக்கு மனதிற்பட்டது. அவனைப்பற்றி இவர் 'என்னவோ ஆழ்ந்த நினைவில் மூழ்கியிருந்தார், முகத்தைப் பார்க்கும் போதே மிகுந்த ஏக்கமும் விசனமும் பிடித்தவர்போலிருந்தது. இவ்வளவு மனத்துயரப்படும்போது நாம் ஏன் பார்க்கவந்தோம் என்று நினைத்தேன். அவருடைய மனதில் என்ன தான் புகுந்துகொண்டிருக்குமோ?' என்கிறார். பாஸெட் துரை குருடாயிருந்தாலும் இராஜ்ஜிய தந்திரத்தில் புலி என்று கேட்டிருக்கிறோமல்லவா' அவர் 'குழந்தைப் பிள்ளையைப்போல் சிரித்த முகமுடையவர்' என்று மிஸ். காபினால் தெரிய வருகிறது. அன்றியும் இவருக்கு மாத்தியு அர்னால்ட் என்னும் கலாவல்லபர் எழுதியிருக்கிற ஒரு வேடிக்கைக் கடிதத்தில் 'விண்ணப்பங்களில் வித்துவான்களுடைய கையொப்பம் உபயோகமில்லை. ஏனெனில் கல்வி கற்றவர்கள் உலக நடவடிக்கை தெரியாதவர்களென்றும், கேவலம் கற்பனா சக்தியே மேலிட்டவர்கள் என்றும் சாதாரணமான அபிப்பிராயம்' என் றெழுதியிருக்கிறார்.

மிஸ். காப் என்பவர் நானாதேச யாத்திரைகள் செய்திருக்கிறார். அவைகள் எல்லாவற்றையும் சொல்ல அவகாசமில்லையாயினும் உலகத்தில் உள்ள அருமையான அற்புத வேலைகளில் ஒன்றாகிய ஈஜிப்ட் தேசத்தின் பிரமிட்ஸ் என்னும் கோபுரங்களை அவர் பார்க்கப்போனதைப் பற்றியாயினும் இரண்டொரு வார்த்தை சொல்லாமலிருக்கக்கூடாது. மூங்கியமான நெடுங்கோபுரத்தின் நடுவில் செல்லும்போது

அவர் துணைக்கு அழைத்துக்கொண்டுபோன ஐந்து அரபிக் கூலிக்காரர்களும் சட்டென்று நின்று பணம் அதிகம் கொடுத்தாலல்லது வரமாட்டோமென்றார்களாம். இந்த வர்த்தமானத்தைப்பற்றி அவர் சொல்லுகிறதாவது "கூலி ஆட்களுடைய பிடிவாதம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்தது: இருட்டில் என்னைத் தனியே விட்டுவிட்டு அவர்கள் ஓடிப்போய்விட்டால் வக்காப்பிடித்துத் தடுமாற வேண்டுமேயென்று திகிலடைந்தேன். நான் வந்ததோ கைரோநகரத்தில் ஒரு காக்கை குருவிக்குக்கூடத் தெரியாது; சிலநாள் வரைக்கும் என்னை ஒருவரும் தேடக் காரணமிராது. நிராயுதபாணியாய் ஐந்து முரட்டு மனிதர்களினடுவில் நின்றேன். ஓடிப்போவோமென்று அவர்கள் நினைப்பதுதானே தாமசம். ஓடிவிட்டால் நம்முடைய கதி யென்னவென்று நினைத்துப்பார்த்தேன்" என்கிறார். ஆயினும் உள்ளே யிருந்த பயத்தை வெளியிட்டு உபசாரவார்த்தை சொன்னால், அவர்கள் இன்னும் தலைமேல் ஏறுவார்கள் என்று தைரியம் பண்ணிக்கொண்டு 'நல்லது, ஒன்றும் பேசாதேயுங்கள்: அடா, நீ வெளிச்சத்தை எடுத்துக் கொண்டு முன் நட; அடா, நீ எனக்குக் கை கொடு: மற்றவர்கள் கூடவே வாருங்கள்' என்று கண்டித்துச் சொன்னேன். அப்படிச் சொல்லவே என்னமோ ஒரு மந்திரத்தால் கட்டுப்பட்டதுபோல் ஐவரும் நடுநடுங்கிக் கட்டளைப்படி நடந்தார்கள், என்கிறார். இவ்வாறாக இவர் மந்திரங்கால் மதி முக்கால் என்றபடி ஒரு தந்திரமான காரியத்தைத் துணிந்து செய்து ஜயித்தார். துணிந்தார்க்குத் துக்கமுண்டா, பணிந்தார்க்கு பாடுண்டா?

மிஸ். காப் கிரந்த கர்த்தாவென்று சொன்னேனல்லவா? இவர் எழுதியிருந்த கிரந்தங்களைப்பார்த்தால் ஒருவருடைய ஆயுட்காலம் முழுவதும் எழுதினாலும் முடியாதுபோலிருக்கிறது. அவையும் தாம் ஏற்றுக்கொண்ட தர்ம காரியத்தில் காலம்முழுதையும் போக்கி இடை யிடையே கிடைத்த ஒழிவு

நேரங்களில் எழுதின கிரந்தங்களேயன்றி வேறில்லே. அந்தக் கிரந்தங்களின் பேளைக் குறிப்பதற்கே பிரிட்டிஷ் மியூஸியம் புஸ்தகப்பட்டியில் ஒருபக்கம் வேண்டியிருக்கிறது. அவைக ளில் சில தம்முடைய சொந்த காரியமாகிய ஜீவகாருண்ய விஷயமாகவும், மற்றவைகள் யாத்திரை, மதவிசாரம் முத லான விஷயங்களாகவும் இருக்கின்றன. இதுமாத்திரமோ! பிளாரென்ஸ், ரோம் என்னும் பட்டணங்களிலுள்ள தின வர்த்தமானிக்குச் சிறிதுகாலம் நியத வர்த்தமானக்காரராக இருந்ததுமன்றி லண்டன் நகரத்து ஒரு தினவர்த்தமானிக்கு ஏறக்குறைய ஆயிரம் முக்கியமான பத்திரிகைகளும் எழுதி யனுப்பியிருக்கிறார். இதுவும் தவிர ஸ்டாண்டர்ட் என் னும் பத்திரிகையை நடத்தும் பத்திராதிபர்களில் ஒருவராக வும் இருந்தார். இப்படி யிருந்த காலத்தில் ஒரு நாள் "அடி நாக்கிலே நஞ்சும் நுனிநாக்கிலே அமிருதமும்" ஆகப்பேசி ஜந் துக்களை யறுத்துச் சோதிக்கும் சாஸ்திரவேஷதாரிகளுடைய 'கத்திவதை'க்கு அனுகூலமான ஒரு பத்திரம் அதில் அச்சிடப் பட்டிருப்பது கண்டு அதைச் சகிக்காமல், அந்த தினவர்த்த மானி சம்பந்தமே தமக்குக் கூடாதென்று கோபித்து வேலையை விட்டுவிட்டார். 'இழந்த நாயின் விக்கியாபனங்கள்' என் றும், 'கானறிந்த நாய்கள்' என்றும், பேர் வைத்து இவர் எழுதியிருக்கிற இரண்டு சிறிய புஸ்தகங்களைப் பார்த்தால் இவர் வாயில்லாப் பிராணிகளிடத்தில் வைத்திருக்கும் இரக்கமும் அன்பும் இவ்வளவென்று நன்ருய்த் தெரியவரும்.

இந்த பிரான்ஸிஸ் பவர் காப் என்னும் பெருமாட்டி ஐயர்லாண்டு தீவில் டப்ளின் நகரத்தில் பிறந்து ப்ரைட்டன் பட்டணத்துப் பாடசாலையில் கல்விப் பயிற்சிசெய்து படிப் பாளியானூர். ஸ்திரீகளுடைய உரிமைகளேயும் சுதந்தரங் களையும் நிலைநிறுத்தி ஆதரிக்க முயன்று பிரசங்கம்செய்த சபாவாதிகளில் சிறந்த ஸ்திரீ சிரோமணியென்றும் பிரசித்தி பெற்றிருக்கின்றனர்.



**BARONESS BURDETT COUTTS.**

*(The Friend of the Homeless Poor.)*

Born 1837.

## பர்டெட் கௌட்ஸ் என்னும் ஜநோபகாரி.

நாட்டார் நன்மையையேநாடிப் பாடுபடுகிறவர்கள் சிலர் இருக்கிறார்களாயினும் அவர்கள் இன்னாரென்பதை உலகத்தார் தெரிந்துகொள்ளாமலே யிருக்கிறார்கள். அடிக்கடி சில

சேனாவீரர்கள் போர்க்களத்தில் ஜயம்பெற்று மிகுந்த கீர்த்தி பெறுகிறார்களே. அவ்விதமாகவே "சித்திரம் கைப்பழக்கம் செந்தமிழ் நாவின்பழக்கம்" என்றபடி கவிராயர், சிற்பிகள், சங்கீத சாகித்தியர், சித்திரம் தீர்ப்பவர் முதலியவர்கள் ஒவ்வொருகாலத்தில் தோன்றி வியக்கத்தக்க காரியங்களைச் செய்கிறார்கள். அவர்கள் பேரும் பிரசித்தியும் பெற்று அவர்களுடைய காலத்தில் எவ்விடத்திலும் யாவராலும் விசேஷமாகக் கொண்டாடப்படுகின்றனர்.

இவர்களைப்போலன்றிச் சில உத்தம புருஷர்கள் தாம் செய்கிற காரியம் ஒருவருக்கும் தெரியாமலே ஏகாந்தமாக லோகோபகாரமான செய்கைகள் அநேகம் செய்கின்றனர். அவர்கள் ஒருவர் கண்ணுக்கும் தோன்றாமல் ஏழை ஜனங்களுடைய வீடுகளில் சென்று, அந்த ஏழைகளின் கஷ்டங்களைப் போக்கி அவர்களை மேலான நிலைமைக்குக் கொண்டுவருகிறார்கள். அதை எவ்விடத்தும் விளம்பரஞ் செய்வதேயில்லை. இக்காலத்தில் இவ்வாறு லோகோபகாரஞ் செய்து வந்த பல பிரபுக்களில் நமது ராஜாங்கத்துப் பிரதானமந்திரியாயிருந்த கிளாட்ஸ்டன் பிரபு ஒருவர். அவர் எப்பொழுதும் தமது கைப்பொருளை ஜனங்களுடைய நன்மைக்காகவே கொடுத்துவந்தாரென்பதை எவரேனும் அறிவார்களா? இந்தப் பரோபகாரந்தவிர மற்றொரு தொழிலும் அவருக்கு இல்லாதிருக்குமாயின் அவருடைய பெயர்கூட உலகத்தில் ஒருவருக்கும் தெரிந்திராது. அவர் பல தருமகாரியங்களுக்கு அனுப்பிய பெருந்தொகைகளைச் சமாசாரபத்திரிகை முதலியவற்றில் விளம்பரஞ் செய்தாரோ? இல்லை. "இவ்வுலகத்தில் இரண்டாவது பெருமாட்டி" என்று நமது புதிய சக்கரவர்த்தி முன்னே புகழ்ந்து கொண்டாடிய ஒரு உத்தமி செய்த நற்செய்கைகளும் அத்தன்மை யானவையேயாம். அவர் செய்த லோகோபகாரமான செய்கைகளை உலகத்தில் சாதாரணமாகத் தெரிந்துகொண்டவர் அருமையென்றே

சொல்லலாம். பர்டெட் கௌட்ஸ் என்னும் பெருமாட்டியின் பெயரையும் மகிமையையும் உலகத்தில் அநேகம் கேள்விப்பற்றிருக்கலாம்; ஆயினும் ஆயிரத்தில் ஒருவர்கூட அவர் செய்த அஸாத்தியமான காரியங்கள் இவ்வளவென்பதை நன்றாகக் கண்டறியவில்லை. அப்பெருமாட்டியோ 1837-ம் வருஷந் தொடங்கி நாளதுவரையிலும் அறுபது வருஷங்களுக்கும் அதிகமாக ஏழைஜனங்களிடத்தில் விசேஷமான உள்ளன்பு பாராட்டி வந்தார். அவருடைய செல்வமத்தனையும் ஏழைஜனங்களுக்கு உபகரிப்பதற்கே பயோகப்பட்டது. அவர் உதவிசெய்ய இன்னார் இப்படிப்பட்டவரென்று ஆலோசனை செய்ததில்லை. கஷ்டப்படுகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்களுக்கு உடனே உதவிசெய்வார்.

இது அதிசயோக்தியென்று எண்ணவேண்டாம். கௌட்ஸ் துரைசானி செய்துவந்த உபகாரத்திற்கு இவ்வளவென்று கணக்கில்லை. இவ்வுலகம் எவ்வளவு விஸ்தாரமுடையதோ அவ்வளவு விஸ்தாரமாகப் பரவியது; ஜீவகாருணியம் எவ்வளவுதூரஞ் செல்லுமோ, அவ்வளவுதூரஞ் சென்றது; ஆயினும் துர்விநியோகம் எவ்வளவு விலக்கக்கூடுமோ, அவ்வளவு விலக்கப்பட்டது. அவரிடம் விண்ணப்பஞ்செய்யப்பட்ட எந்தப் பெரிய முயற்சியும் காரியசித்தி பெறாமற்போகவில்லை. நாற்பது வருஷங்களுக்கு முன்னே லண்டன் நகரத்துக் கைநெசவுத் தொழிலாளர் பலரும் வேலை கிடைக்காமல் வருத்தமுற்றபோது, ஜீவனத்திற்காக அவர்களைத் தேசாந்தர மனுப்பியது இவரது பணமேயாம். அதற்குப்பின்பு தோல் பதனிடுவோர் தொழிலகப்படாமல் தவித்தபோது அவர்களுடைய துன்பத்தைத் தீர்த்ததும் இப்பெருமாட்டியே. அவருக்கு இருபத்துமூன்று வயதிலேயே திடீரென்று மிகுந்த செல்வம் கிடைத்தது. புதிதாக யாருக்காவது பணம் வந்தால் அதை உடனே செலவழித்துவிட மனம் வருமா? வராதே! இப்பெரு

மாட்டி விஷயத்திலோ அப்படியில்லை. இவருக்குப் பணமெவ்வளவு அதிகமாக வந்ததோ, அவ்வளவுக்கவ்வளவு ஏழைகளிடத்தில் அவருக்கு இரக்கம் அதிகமாயிற்று; தம்மால் கூடிய வரையில் ஏழை ஜனங்களுடைய சங்கடங்களை நிவிர்த்திசெய்தலும், சனஸ்திதியை அடைந்தவர்களைக் கைதூக்கி மேலான நிலைக்குக் கொண்டுவருதலும் ஆகிய பரோபகாரங்களிலேயே தமது வாழ்நாளைக் கழித்துவிட வேண்டுமென்கிற தீர்மானம் செய்துகொண்டாராம்.

தாம் கோரியபடியே அவர் தமது தொழிலைச் செவ்வையாகவே செய்யத்தொடங்கினார். எவ்விடத்தில் அவருடைய உதவி அதிகமாக வேண்டியிருந்ததோ, அவ்விடத்திற்கு அவர் உடனே சென்றார். லண்டன்மாநகரத்துக் கீழண்டையில் குற்றவாளிகளுக்கு ஏற்பட்டிருந்த மிகக் கொடுமையான சிறைச்சாலைகளைச் சீர்ப்படுத்தினார். ஊர்காப்பாளர்கூட அந்தச் சாலைகளில் பலர் ஒன்றாகக் கூடாமல் தனியே போவதற்குப் பயப்படுவார்களாம். அவ்வளவு பயங்கரமாயிருந்த சிறைச்சாலை சீர்ப்படுத்தப்பட்டது. நோவாஸ் கோஷியா தோட்டமென்னுமிடத்தில் ஏழை ஜனங்களுக்கு உசிதமான வீடுகள் கட்டிக்கொடுத்தாள்; வீடென்றால், ஒன்றிரண்டல்ல; இருநூறு வீடுகள் கட்டிக்கொடுத்தாள். அந்தக் கிரகங்கள் நாளைக்கும் லண்டன் பட்டணத்தில் ஏழைகள் வசிக்கும் ஆயிரக்கணக்கான வீடுகள் எல்லாவற்றிற்கும் மேன்மைபெற்றதாயிருக்கின்றன. இவ்வாறு வீடுகள் கட்டிப் பிரதிஷ்டை செய்தவிடத்திற்கு கொலம்பியா பேட்டையென்று பெயர். அதற்குச் சமீபத்தில் அந்தப் பேட்டையிலுள்ள எளிய ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்களை மலிவாக வாங்கிக்கொள்வதற்கு அநுகூலமாக மிகப் பெரிய கடையொன்று கட்டப் பிரயத்தனப்பட்டாள். இந்தப் பெருமாட்டி செய்த எந்த ஏற்பாடும் மிகக் கொண்டாடத்தக்கதுதான். ஆனு

லும் ராஜீகம் தைவீகம் எப்படியோ? "நல்லகாரியத்துக்கு நாற்கலத்தடை" என்றதுபோல் இது ஒன்றுமாத்திரம் அவரது எண்ணப்படி ஈடேறவில்லை.

அந்த அற்புதமான கடையைக் கட்டிமுடிக்க அப்பெருமாட்டி எழுபத்தைந்து லக்ஷம் ரூபாய் செலவு செய்தாராம். அது அவ்வளவு புதுமையான கட்டடம். அந்தக் கட்டடம் கடையாகவே அமைந்திருந்தால் எவ்வளவோ நன்மையாயிருக்கும். ஐயோ! லண்டன் பட்டணம் பண்ணிய துர்ப்பாக்கியம் அப்படி யமையவில்லை. அவ்விதமான கட்டடமுள்ள கடை உலகத்தி லெவ்விடத்திலும் கிடையாது. ஏழைகள் வசிக்கும் பேட்டையில் கட்டப்பட்டதாயினும், அவள் உத்தேசித்தபடி காரியம் நிறைவேறியிருந்தால் மிகவும் கொண்டாடத்தக்கதாயிருக்கும். ஆனாலும், சலவைக்கல்லினால் செய்த அற்புதமான ஸ்தம்பங்கள் நாட்டிய கூடங்களும், மிகப்பாடுபட்டுச் செய்த சிற்பவேலைப்பாடுகளும், காண்போர் கண்களைக் கவரும்படியான அக்கட்டடத்தின் சிறந்தகாட்சியும், அது ஒரு கடையாயிருப்பதினும் கோவிலாயிருந்தால் மேன்மையாயிருக்குமே! அவ்வாறே, இவ்வற்புதமான கட்டடம் ஒரு ஆலயமாவதற்கு ஒரு குறையுமில்லையென்றும், பிரசங்கப் பீடமொன்றுமாத்திரமே அமைக்கவேண்டுவது குறையென்றும் பிரதான குரு எடுத்தோதினர். பல பத்திராதிபர்களும் கடைவைப்பதற்கு இவ்வளவு அற்புதமான கட்டடமேதுக்கென்று அவருடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாகவே எடுத்துக் கூறினர்கள். அதனால் அவர் கருத்து ஈடேறாமற்போயிற்று. ஏழை ஜனங்களுக்கு நயமாக நல்லுணவு கிடைக்கும்படி செய்யவேண்டுமென்று ஒரு பெண் பட்ட பாடுகளுக்கு அக்கட்டடம் ஒரு அறிகுறியாக நாளைக்கும் காணப்படுகின்றதாயினும், உபயோகமற்றதாகவே கிடக்கின்றது. இவ்விதமாய் அந்தப்பெரிய கட்டடம் கடையாக உபயோகப்படவில்லையாயி

னும், லண்டன் பட்டணத்தில் கடைகள் கட்டவேண்டுமென்கிற விசாரத்தை எவருக்கும் உண்டாக்கி, இருப்புப்பாதை முடியும் ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு கடைகட்டிப் பிரதிஷ்டைசெய்யும்படி வழிகாட்டி விட்டது.

கௌட்ஸ் பெருமாட்டி கிழக்கு லண்டனிலுள்ள ஜனங்களின் கஷ்டங்களைத் தீர்க்கவும், துக்கங்களைப் போக்கவும் இவ்வாறு எவ்வளவு பொருள் செலவுசெய்தாரோ, அது ஒருவருக்கும் தெரியாது. அவர் அப்படிச் செய்தது அந்த ஒரு இடத்திலே மாத்திரந்தானோ; லண்டன் பட்டணத்துப் பற்பல பேட்டைகளிலும் அறுபது வருஷகாலம் அளவற்ற தருமங்கள் செய்தார். முப்பது வருஷங்களுக்கு முன்னே கீழண்டைப் பாகத்தில் விஷபேதியாகிய கொள்ளைநோய் கண்டு மிகக் கொடுமைசெய்ய ஆரம்பித்தது. அக்காலத்தில் பர்டெட் கௌட்ஸ் ஏற்படுத்திய வைத்தியர்களும், சிகிச்சோபசாரம் செய்பவர்களும், நகரசுத்தி விசாரணைத் தலைவர்களும், இராப்பகல் ஓயாமல் ஒழியலைந்து அந்நோய் தாக்கியவர்களைக் கைவிடாமல் பார்த்து உபசரித்தவண்ணமா யிருந்தார்கள்.

இவ்வாறு கீழ்ப்பாதியில் பற்பல தருமங்கள் செய்தபிறகு கலியாணமாகாத கன்னிகையான அந்தச் சீமாட்டி மேற்பாதிக்குச் சென்றார். அவ்விடத்திலுள்ள ஏழை ஜனங்களுக்கு இவ்வளவென்று கணக்கில்லை; அங்கே ஏழைகள் அளவுகடந்து அடர்ந்திருந்தனர். அவ்விடத்தில் அந்த ஜனங்களுக்கு உபயோகமாகப் பல பாடசாலைகளும் ஆலயங்களும் கட்டினாள். அவற்றில் ஸெய்ண்ட் ஸ்டீபன் ஆலயமென்பது 1847-ம் ௵ பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்தக் கட்டடங்கள் கட்டுவித்ததோடு அவை எதற்காகக் கட்டப்பட்டனவோ, அந்தக் காரியங்களுக்கு வேண்டிய செலவும் அன்றுமுதல் அவரே கொடுத்து நடப்பித்துவருகிறார். அந்தக் கட்டடங்கள் கட்டுவதற்கு லக்ஷம்பவுண்டு செலவாயிற்றாம். லண்டன் பட்டணத்தி

லுள்ள மற்றப் பாடசாலைகளினும் இப்பாடசாலைகளை மிகச் சிறப்புற்றிருக்கின்றனவென்பது யாவரும் கொண்டாடத்தக்க விஷயமாம். இப்பாடசாலைகளுடன் வெஸ்ட் மினிஸ்டர் சிற்ப சித்திர வித்தியாசாலையும் ஒன்று ஸ்தாபித்தார். அதனால் எல்லாக் கல்விகளும் கைத்தொழில்களும் அங்கேயே குறைவறக் கற்க அநுகூலமாயிற்று. முதலில் சிற்பசித்திர வித்தியாசாலை யென்பது, பகலில் வேலைசெய்யும் கூலிவேலை யாட்களுக்கு அந்தந்த வேலைகள் கற்பிக்க வேண்டுமென்றே ஸ்தாபிக்கப்பட்டது. அப்படி பாலபோதத்திற்காக ஏற்பட்ட அந்தப் பாடசாலையில் சிற்பசித்திரங்கள் கற்பதற்கு வேண்டிய பல வகுப்புகளும் ஸ்தாபிக்கப்பட்டகளால், கல்விகளைப் பூரணமாகக் கற்க அது போதுமானதாயிற்று. இப்பெருமாட்டி பரோபகாரமே பெரிதாகக்கொண்டு அனைநூற்றாண்டுவரையில் மிகப் பெரிய தருமங்கள் செய்யத் தலைப்படாதிருந்தால் குருக்கள்மாரும் சமயபோதகரும் அவருக்கு உதவியானவர்களும் அத்தேசத்தில் செய்ய ஆரம்பித்திருந்த பல நற்காரியங்கள் வெகுவாகத் தடைபட்டுப் போயிருக்கும். அத்தேசத்துப் பெயர் பெற்ற பெருமாட்டிகள் சிலர் செய்த அற்புதமான ரத்தினைகம்பளமொன்று வெஸ்ட் மினிஸ்டர் தேவாலயத்தில் பரப்பப்பட்டு இப்பெருமாட்டியின் பெருமையைப் பிரசித்தப்படுத்திக்கொண்டிருக்கின்றது. வெஸ்ட் மினிஸ்டர் தேவாலயத்தில் அப்பெருமாட்டிக்குப் பலகாரணத்தினால் அதிகமான அபிமானமிருந்தாலும், கிறிஸ்து தேவாலயங்களுக்கென்று அவர் தனியே நியமித்துவைத்திருந்த திரவியம் முழுமையும் அவ்விடத்திலேயே செலவுசெய்துவிட்டாரோ? இல்லை; ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா தேசங்களிலுள்ள அங்கிலேய ஜனக்கூட்டத்தாரும் தம்முடைய பெயரைக் கொண்டாடும்படி அடிலேட், கேப்டவுன், பிரிட்டிஷ் கொலம்பியா என்னும் பிரதேசங்களிலும் மதவிஷயங்களைப் போதிக்கக் குரு

பிடம் ஸ்தாபித்து அவற்றிற்கு வேண்டிய செலவைக் கொடுத்துப் பரிபாலித்துவந்தார். லண்டன்மாநகரத்தில் சற்றுப் பேர்போன தருமம் எதுவாயினும் இப்பெருமாட்டியின் கைப்பொருளுதவி கலவாத தருமம் ஒன்றேனும் கிடையாது.

கதியற்ற குழந்தைகளைக் காக்கும்பொருட்டு 'பாலபோஷண சங்கம்' என்று ஒரு சபை லண்டன் பட்டணத்தில் ஏற்பட்டதற்கு இப்பெருமாட்டியே முதற்காரணம். அவரே அதற்காக ஒரு சட்டமும் பார்லிமெண்டு சபையில் ஏற்படுத்தும்படி செய்தார். அவர் வசித்திருந்த வீதிவழியே ஆயிரக்கணக்கான ஏழைச் சிறுவர்கள் செல்வதையும் அங்கே கூட்டங்கூடுவதையும் அவர் பலதரம் பார்த்தபோது, அப்பேதைப் பிள்ளைகளைப் பரிபாலிக்க ஏதேனும் ஒரு தகுந்தவழி ஏற்படுத்தவேண்டுமென்கிற எண்ணம் அவருடைய மனத்தில் தோன்றியது. எப்படியாயினும் இதற்கு முதலில் வழியுண்டாக்கினவர் இவரே. இவருடைய மாளிகையிலேயே அதற்காக முதல் சபை கூட்டப்பட்டது. இவர் ஜீவப்பிராணிகளிடத்திலும் மிகுந்த அன்புள்ளவராதலால் இவர் ஆதிமுதல் ஜீவஹிம்சை நிவாரண சங்கத்திலும் அங்கத்தினர்களில் ஒருவராக ஏற்பட்டிருந்தார்.

பாதரக்ஷைகளுக்குக் கறுப்பு வர்ணம் தடவும் பெண்களிடத்திலும், பூப்பறிக்கும் சிறுமிகளிடத்திலும் இவருக்கு அன்பு மிகவும் அதிகம். இவர் விக்டோரியா சக்கரவர்த்தினியாரினும் ஐந்து வயது முத்தவராயிருந்தாலும், இப்போது சில மாதங்களுக்கு முன்புதான் நெருப்புவர்த்தி செய்யும் சிறுமிகளைப்பற்றிப் பரிந்து பேசினார்.

ஸ்திரீகளுக்கு நாகரிக விருத்திசெய்யத் தலைப்பட்டவர்களில் இவர் முதன்மையானவராயிருந்தார். 'அன்னதானத்துக்குச் சமம் என்னதானம் இருக்கிறது' ஏழைச்சிறுவர்

அன்னதான ஸமாஜத்திற்குப் பிரதான போஷகராயிருந்தார். அதில் பிரதிவருஷம் லண்டன் பட்டணத்து ஏழைச்சிறுவர்கள் 3 லக்ஷம்பேருக்கு உணவு அளித்துவந்தனர். இப்படியே அயர்லாந்திலும் ஏழைகள் விஷயத்தில் அளவற்ற பொருள் செலவுசெய்தார். அத்தேசத்தில் மீன்பிடிக்கும் செம்படவர்களுக்காக இச்சீமாட்டி பதினாயிரம் பவுன் செலவுசெய்ததால், அத்தேசத்து ஆண் பெண் அனைவரும் அவரிடத்தில் அதிகமான அன்புடையவரானார்கள். அத்தேசத்துச் சிறுவர் நன்மைக்காக அங்கே நிலைமையான பாடசாலையொன்று ஸ்தாபிக்கப்பட்டது. அது முக்கியமாக இப்பெருமாட்டியின் தருமத்தினாலேயே ஏற்படுத்தப்பட்டது. இந்த அயர்லாந்துக்கும் கிறிஸ்து பிறந்தவிடத்திற்கும் அதிக தூரமல்லவா? ஆயினும் பர்டெட் கௌட்ஸின் தருமவெள்ளம் பெருகியோட அது அதிகதூரமாகக் காணப்படவில்லை. கிறிஸ்தவர்களுடைய புண்ணியக்ஷேத்திரமான அவ்விடத்திலும் பலவிதமான தருமங்கள் செய்தார். முக்கியமாக அங்கே ஜலாதாரத்தையுண்டாக்கினார். அப்படியே லண்டன் பட்டணத்திலும் மற்றும் பலநாடுகளிலும் பல பாடசாலைகளும் கிறிஸ்து தேவாலயங்களும் ஸ்தாபித்தார்; இன்னும் பலவற்றிற்கு மிகுதியாகப் பொருள்கொடுத்து உதவினார். ஸ்திரீகளுக்காக ஏற்படுத்திய தையல்வேலைப் பாடசாலை அவைகளில் ஒன்று. ஏழை ஸ்திரீகளுக்குத் தையல்வேலை கற்பித்துக்கொடுக்கவும் அவர்கள் பகற்காலத்தில் வீண்பொழுது போக்காமல் லாபங்கிடைக்கத்தக்க உபயோகமான தொழில் செய்யவும் அநுகூலமாகவே அப்பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டது. இந்தப் பாடசாலையினால் ஏழைஸ்திரீகள் பலர் விருத்தியடைந்து சௌக்கியமான நிலை பெறும்படியாயிற்று. லண்டன் பட்டணத்தில் இப்பெருமாட்டி தருமஞ்செய்யாதவிடம் ஒன்றேனுமில்லை: ''அன்புள்ளகுணம் அலையில்லாநதி'' என்ற

படி தாராளமான மனதுடன் செய்த அந்தத் தருமங்கள் யாவும் இப்பொழுது விசேஷமான நன்மை விளைவித்துக்கொண்டிருக்கின்றன.

இவர் வைத்திருந்த மிகவும் விலைபெற்ற ஆஸ்திகள் பல வற்றில் ஒன்று வெள்ளியினாற் செய்த சிறு கழுதையாம். அது ஒரு புகழ்ச்சிப் பத்திரிகையுடனே வீதிவர்த்தகக்கூட்டத்தார் இவருக்குப் பரிசாயளித்தது. அந்த வர்த்தகக் கூட்டத்தாரிடத்தில் அவர் எப்பொழுதும் அன்பு மாறாதிருந்தவர். பாவலர் அருமை நாவலர் அறிவாராகையால் இவர் ஒரு சமயத்தில் இவ்வர்த்தகக் கூட்டத்தாரில் சிலரை, ஷேக்ஸ்பியர் இயற்றிய ஹாம்லெட் என்னும் நாடகத்தை ஆட்டத்தில் பார்த்துக்களிக்கும்படி நாடகசாலைக்கு அனுப்பினார். அந்த ஆட்டத்தைப் பார்ப்பதில் அவர்களுக்கு அதிகமான இனிப்பு உண்டாகும்படி முன்னதாகவே இவர் அவர்களுக்கு அதன் கதையை விளங்கச்சொல்லி யனுப்பினார். இப்படியிருக்கச் சில நாளைக்கு முன்னே இந்த வர்த்தகர்கள் ஒரு வியவஹாரத்தில் அகப்பட்டுக்கொண்டு நியாயஸ்தலத்தில் விசாரணை நடக்கும்படி நேரிட்டது. அப்பொழுது அவ்வர்த்தகர்களுக்காக வாதிக்கும்படி தன்னுடைய சொந்தமான வக்கீலை யனுப்பினார்.

செடிகளிலும் பூக்களிலும் ஏழை ஜனங்களுக்கு அதிகமான விருப்பம் உண்டாக்கவேண்டுமென்று இவர் பல வருஷகாலம் பாடுபட்டார். எளிய மாகாணங்களிலுள்ள ஏழை ஜனங்கள் கையிலே வருஷாரம்பத்தில் பல செடிகளைக் கொடுத்து, அந்தச் செடிகளை நன்றாக வளர்த்துப் பின்னும் செழிப்பாகக் கொண்டுவந்து காட்டுகிறவர்களுக்குக் கோடைகாலத்து முடிவில் வெகுமதியளிக்கப்படுமென்று ஏற்பாடு செய்தார். இவ்விதமாகப் பூஞ்செடிவைத்துப் பயிராக்குவதில் அவரால் பழக்கப்பட்ட எளியபெண்கள் ஆயிரம்பேருக்கு அதிகமிருக்கும். பலவாறு சொல்லியென்ன?

இவருடைய தருமசிந்தையினாலாகிய நன்மையைப் பெறாத எளியவர்கள் ஒருவரேனு மில்லையென்று சொல்லலாம். அவர் ஆலயங்களுக்குச் செய்வித்த மணிகளும், பலபேர்களுக்கும் உபயோகமான பொதுஸ்தானங்களில் நிருமித்த தண்ணீர்க் குழாய்களும் தடாகங்களும் எண்ணிறந்தவை. ஆப்பிரிக்காவில் பருத்தி வியாபாரம் நடந்தேறுவதற்காக அவர் அதிகமான உதவிசெய்தார்.

இதேவிதமான இந்த கௌட்ஸ் பெருமாட்டியின் சரித்திரம் முழுவதும் எழுதப்புகுந்தால், இவ்வாறே பல அதிசயங்கள் எழுதலாம். தேசத்து ஜனங்களுடைய உரிமைகளையும் சுவாதந்திரியங்களையும்பற்றிப் பரிந்து பேசினதற்காகச் சிறையில் அகப்பட்ட ஒரு பெரிய ஜனாபிமானியினது புத்திரி இவர். ஜனங்களின் சுவாதீனம் இக்காலத்தில் உள்ளது போலன்றிக் கேடுகெட்டிருந்த முற்காலத்தில் நடந்த ஆச்சரியமான விஷயங்களெல்லாம் இவருக்கு நன்றாய்த் தெரியும். பார்லிமெண்டு மஹாஜன ஸபையில் ஜனங்களுக்குச் சுவாதந்திரியமளிக்கும் சீர்திருத்தச் சட்டத்தைப்பற்றி முதல் முதல் எடுத்துப் பேசியவர் இவரது தந்தையே. இப்பொழுது இப்பெருமாட்டி வசிக்கும் மாளிகையில் அவர் வசித்திருந்த காலத்திலேதான் அவர் சிறையாகப் பிடிபட்டது. முதலில் அவரைப் பிடிக்கச் சேவகர்களுக்கு வழியேவிடாமல் வெகுநேரம் குடிகள் வழிமறுத்துத் தடுத்தார்கள். ஆயினும் அவர் கடைசியில் காவலாட்கள் கையில் அகப்பட்டுக்கொள்ளும்படியாயிற்று. பரோபகாரமே பெரிது என்று நடந்த அவரைப் பிடித்துக்கொண்டு சென்ற காவலாட்களின்மீது ஜனங்கள் கல்லெடுத்து எறியலானார்கள். பர்டெட் பிரபு இவ்விதமாகச் சிறையில் அகப்பட்டாராயினும் அதில் அதிககாலம் வருந்தவில்லை; கெடுக்கினும் தருமம் பழுதுபடாதாகையால் உடனே விடுபட்டுக் குடிகள் அனைவராலும் கொண்டாடத் தக்கவரானார்.

ஆதலால் இத்தன்மையான தந்தை இறந்துபோன ஏழு வருஷங்களுக்குப் பிறகு அளவற்ற செல்வம் கிடைத்தபோது இந்த கௌட்ஸ் பெருமாட்டி முதலில் ஏழைகளைப்பற் றியே ஆலோசிக்கலானரென்பது ஒரு அதிசயமன்று. அதே வருஷந்தான் விக்டோரியா சக்கரவர்த்தினி சிங்காதன மேறியது. இங்கிலாந்து தேசத்துச் சகலமான ஜனங்களு டைய நோக்கங்களும் இவ்விரண்டு ஒப்பற்ற உத்தமிகள் மேலேயே முதன்மையாக நிலைபெற்றிருந்தன. இவர்கள் இவற் றைக்கொண்டு என்னசெய்வார்கள் என்று அப்பொழுது ஒவ்வொருவரும் இதேபேச்சுப் பேசிக்கொண்டிருந்தனர். இப்பொழுது அறுபது வருஷங்களுக்குப் பிறகும் மாட் சிமைபெற்ற இவ்விரண்டு உத்தமிகளே பிரிட்டிஷ் ராஜ்யத் துப் பெருமாட்டிகள் பலரிலும் மிகச் சிறப்புற்றுக் குன்றின் மேலிட்ட விளக்காக விளங்கிநின்றனர். நமது நூதன சக் கரவர்த்தியான 7—வது எட்வர்டு மன்னவர் முன்னொரு சம யத்தில் மகிழ்ந்து கூறியதாவது, 'இங்கிலாந்து தேசத்துப் பெருமாட்டிகள் பலருள் நமது தாயாருக்கு இரண்டாவது பெருமாட்டி பாரனெஸ் பர்டெட் கௌட்ஸ்' என்னும் உத் தமியேயென வியந்து கூறினர்.

பர்டெட் கௌட்ஸ் பெருமாட்டியின் சரித்திர புத்தகத்தி னது முதல் பக்கமே அதிசயங்கள் நிறைந்திருக்கின்றது. இவர் சிறுபிராயத்தில் தன் தந்தையினது பூஸ்திதியிருக்கு மிடமான ராம்ஸ்பரியென்னும் கிராமத்தில் வசித்திருந்தார். இவரது பாட்டனர் ஒரு காசுக்கடைக்காரர். பாட்டியார் அற்பாயுசாக இறந்துபோகவே பாட்டனர் மறுபடி ஒரு நாடகசாலைப் பெண்ணை விவாகம் செய்துகொண்டார். அப் பால் அந்தப் பாட்டனர் இறந்துபோக, அவரது மனையாட்டி செயின்ட் ஆல்பன்ஸ் டச்செஸ் எனும் பட்டம் பெற்றாள். அந்த டச்செஸ் பெருமாட்டியின் மூலமாகவே நமது கௌட்ஸ்

பெருமாட்டிக்கு அவ்வளவு அதிகமான ஐசுவர்யம் கிடைத்தது. இவர் தமது பாட்டனாரது இரண்டாவது மனையாட்டியின் அளவு கடந்த அன்புக்கு இடமாயிருந்தார். ஆயினும் இதனால் இவ்வளவு ஸம்பத்து கிடைக்குமென்று எவரும் கனவிலு மெண்ணவில்லை. இப்படியிருக்க அந்த டச்செஸ் பெருமாட்டி மரணமடைந்தாள். அப்பொழுது நமது பர்டெட் என்னும் சிறுமிக்கு வயது இருபத்து மூன்று. அத்தருணத்தில் இவருக்குத் திடீரென்று 13 டன் எடையுள்ள இங்கிலீஷ் ஸவரன்கள் கிடைத்தன. அந்தப் பொருளின் மொத்தத் தொகை பதினெட்டு லக்ஷம் பவுண்டுக்கு அதிகப்பட்டிருந்ததாம்.

பிறகு பல வாரங்களளவும் இந்த கௌட்ஸ் பெருமாட்டிக்குக் கடிதங்கள் கொண்டுவருவதே தபால்காரனுக்கு ஒரு பெரிய வேலையாயிருந்தது. நல்லெண்ணமுள்ளவர்கள் ஒவ்வொருவரும் உலகத்திற் பற்பல இடங்களிலிருந்தும் இவருக்குச் சோபனவார்த்தைகளும், நல்ல புத்திமதிகளும் சொல்லிப் பற்பல கடிதங்கள் எழுதலானார்கள். தபால் வருகிற மணி ஒவ்வொன்றிலும் கலியாணஞ் செய்துகொள்ளும்படி கட்டுக்கட்டாக வந்த கடிதங்களுக்குக் கணக்கில்லை. பணமென்றால் பேயாய்ப் பறக்கிறவர்கள் இப்படி வேண்டினாலும் விவாகஞ் செய்துகொண்டு இல்வாழ்க்கை செய்யாமல் அவரது மனம் வேறொரு துறையில் இழிந்திருந்தது. அத்தேசத்தில் தாம் யாவரினும் மிகுந்த தனவந்தராகி மேலான பதவியடைந்திருப்பதை அவர் நினையாமற்போகவில்லை. பற்பல சங்கங்களிலும் அவர் பிரவேசித்திருந்தார். விக்டோரியா மகாராணியாருக்கு மகுடாபிஷேகம் நடந்த காலத்தில் சிறப்புற்று விளங்கியவர்களில் இவரொருவராம். அவ்வாறிருந்தும் லோகோபகாரமான மற்றும் பல காரியங்கள் செய்யப் பலருடனும் கூடிக் களிப்படையும் இயல்புடையாயிருந்தார்.

தமது கடமையைக் கருத்தாகச் செய்வதில் அவருக்கு விருப்பமதிகம். அவருக்கு முகமறியாத மனிதர்கள் நற்போதனைசெய்து எழுதிய கடிதங்கள் ஸ்டிராட்டன் வீதியிலுள்ள அவரது மாளிகையில் ஆயிரக்கணக்காக வந்து நிறைந்தனவாயினும், அவற்றை அவர் கவனிக்கவில்லை. டியூக் ஆவ் வெல்லிங்டன் என்னும் வல்லபர் நற்போதனைசெய்யும் அந்தரங்கமான நண்பர். அத்தேசத்தில் மிகவும் மேலான பதவியிலிருந்த ஸ்திரீகளையும் புருஷர்களையுமே அவர் தம்முடைய நேசர்களின் பட்டியில் சேர்த்துக்கொண்டார். இப்பெருமாட்டியும் சார்லெஸ் டிக்கென்ஸ் என்கிற பண்டிதரும் லண்டன் பட்டணத்துக் கீழ்ப்பாதியில் எளிய ஜனங்கள் வசிக்கும் தாழ்ந்த இடங்களுக்கு அடிக்கடி போய் விசாரித்து வருவதுண்டு. "சற்சனர் உறவு சருக்கரைப் பாகுபோல்" என்றபடி அந்தக் கவிராயரது நட்பை இப்பெருமாட்டி இன்னும் நினைத்துக்கொண்டிருக்கிறார். இப்பெருமாட்டிக்கு ஏழைகளிடத்தில் அநுதாபமுண்டாகிற விஷயத்தில் அவர் அதிகமான உதவிசெய்தார். பண்டிதர் வாக்குப் பலமிருந்தால் மனோ பலம் வருமல்லவா?

பாரனெஸ் கௌட்ஸ் பெருமாட்டியின் தருமகாரியங்கள் பலவற்றில் டிக்கென்ஸ் அவருக்கு உதவிசெய்திருக்கிறார். அவற்றில் முக்கியமானவொன்று ஒரு சிறு பட்டணத்தில் ஸ்தாபித்த வித்தியாசாலைக்கு அவர் செய்த ஸகாயமாம். அந்த வித்தியாசாலைக்கு வேண்டிய சட்டதிட்டங்களையெல்லாம் அவரே ஏற்படுத்திக்கொடுத்தார். தாமே விசாரணை கர்த்தராயிருந்து, அதற்கு வேண்டிய நிலம் வாங்கிக் கட்டடங்கட்டி, அதற்கு வேண்டிய சகல உபகரணங்களையும் சேகரித்து அமைக்கலானார். அந்தப் பண்டிதர் சிறைச்சாலைகளை நேரில் போய்ப் பார்த்தார். மாஜிஸ்திரேட்டுகளையும் கவர்னர்களையும் கண்டு பேசினார். பிறருடைய உதவியை வேண்டுகிற

பல பேதைப் பெண்களுக்குத் தாம் "அடக்கமே பெண்டி ருக்கழகு" என்பதுபோல் பணிவான சொற்களால் கடிதங்கள் பல எழுதினர். அந்தக் கடிதங்கள் ஒவ்வொன்றும் எத்தனையோ பொன் விலைபெறும். அந்தக் கடிதங்களை இங்கு எடுத்தெழுதுவதென்றால் புத்தகம் மிகப் பெரிதாகிவிடும். அக் கடிதங்கள் ஒவ்வொன்றும் கையெழுத்தில்லாமலே ஏழை ஸ்திரீகளுக்கும் அனுப்பப்பட்டன. அவற்றில் எழுதிய தென்ன வென்றால், "வயிறார போஜனமும், இடுப்பார வஸ்திரமு மில்லாமல், புதிதாக ஜீவனோபாயந்தேடிப் பிழைக்க விருப்ப முடையவர்களுக்கு ஜீவனோபாயம் தேடிக் கொடுக்க ஒரு ஸ்தல மேற்படுத்தப்பட்டிருக்கின்றது; இங்கே எவ்விதமான நிர்ப்பந்தமும் கிடையாது; கொடுமையான ஏற்பாடுகள் ஒன்று மில்லை; ஒரேவிதமான உடையே யாவரும் தரிக்கவேண்டு மென்கிற விதியுமில்லை; சென்ற நாளைப்பற்றிய விசாரமுமில்லை. உங்கள் விஷயத்தில் உங்களைப்பார்க்கிலும் எனக்கு அதிகம் தெரிந்ததாக நான் எண்ணி இதை உங்களுக்கு எழுதினேன் என்றாவது, உங்களுடைய நிலைமையை உங்களுக்குத் தெரிவித்து உங்களுக்கு மனவருத்த முண்டாக்க வேண்டுமென் கிற எண்ணமுடையவனா யிருக்கிறேன் என்றாவது நீங்கள் சிறிதும் நினைக்கலாகாது. கடவுள் உங்களுக்கு அவ்விதமான எண்ணமுண்டாக்கா திருக்கவேண்டும். கேவலம் உங்களி டத்திலுள்ள அன்பின் மிகுதியால் உங்களை எனது சகோதரி யாகவெண்ணி இப்படி யெழுதலானேன்" என்று முன்பின் அறிமுகமில்லாதவருக்கு டிக்கென்ஸ் பண்டிதர் "சொற்றிறம் கூறல் கற்றவர்க்கழகு" என்றபடி சாதுர்யமாக எழுதினர்.

இன்னும் அவர் எழுதுவதாவது,—"இந்நகரத்தில் ஒரு பெருமாட்டி யிருக்கின்றனள். அவள் நேற்றிராத்திரி தன் வீட்டுச் சாளரத்தினின்றும் வெளியே பார்த்துக்கொண்டிருந் தாள். அப்பொழுது வீதிவழியே போனவள் உன்னைப்

போலவே தோன்றினள். அத்தோற்றத்தைப் பார்த்தவுடனே அப்பெருமாட்டியின் மனம் மிகவும் உருகியது. அவள் மிருந்த மாட்சிமைபெற்ற மாதுசிரோமணி. தன்னைப்போன்ற பெண்பாலார் இப்படி வருத்தப்படும்படி யாயிற்றேயென்று வீதியில் சென்றவளைக் கண்ணுற்றவளவிலே அப்பெருமாட்டி மிகவும் இரக்கமும் பரிதாபமுமடைந்தவளாகி, அப்படிப்பட்ட பெண்களுக்காக ஒரு ரக்ஷகஸ்தானம் ஸ்தாபிக்கலானள். அந்த ஸ்தானம் நாட்டுப்புறம் போன்றதான ஒரு தனித்தோட்டத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றது. இஷ்டமுண்டாளுல் அவ்விடத்தில் ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு சிறிய பூந்தோட்டம் ஏற்படுத்திக்கொள்ளலாம். அவர்கள் அனைவரையும் அதிகமான அன்புடனே ஆதரிக்கப்படும். ஒவ்வொருத்தியும் ரம்மியமாயும் ஆரோக்கியமாயும் சுறுசுறுப்பாயும் வாழ்நாள் கழிக்கலாம்; அவசியமான பலவிஷயங்கள் கற்றுக்கொள்ளலாம்; தங்களுடைய சுபாவமறிந்து பழகிய மனிதர்கள் பலரையும் விட்டுப் பிரிந்து வரவேண்டியிருந்தாலும், இங்கே நூதனமான ஒரு ஜீவனோபாயந் தேடிக்கொண்டு நல்ல யோக்கியதையும் பிரசித்தியும் பெறலாம். அங்கேவந்து பழகித் தாங்கள் வீண்காலம் போக்கியதைப்பற்றிப் பச்சாத்தாபமடைந்து தாங்கள் செய்யவேண்டிய கடமை இன்னதென்று நன்ருய்த் தெரிந்துகொண்ட சிறுபெண்கள் மூலையில் அடைபட்டிருக்க வேண்டுமென்பது அப்பெருமாட்டியின் கருத்தல்ல ஆதலாலும், அப்படிப்பட்டவர்களை உலகத்தாருடன் கூடிப் பழகும்படி செய்விக்கவேண்டுமென்பதே அவருடைய முதன்மையான கருத்தாதலாலும், அவர்கள் நன்ருகத் திருந்தி ஊக்கமுடையவர்களா யிருக்கின்றனரென்பது விளங்கும்பக்ஷத்தில், அவர்களுக்கு வேண்டிய பற்பலவிதமான ஸ்தானங்களையும் தேடிக்கொடுத்து அவர்களை வெளித்தேசங்களுக்கு அனுப்பி அங்கே மிகவும் யோக்கி

யர்களான புருஷர்களை விவாகஞ் செய்துகொண்டு அவர்களுடனே சுகமாக வாழ்ந்து விசாரமின்றிக் காலங்கழிக்கும்படி செய்யலாகும்" என்று எழுதுகிறார். சார்லெஸ் டிக்கென்ஸ் ஒருவர்தவிர வேறு யார், இவ்வளவு சாதுரியமாய், ஸ்திரீகளுக்குள் ஒருவர்க்கொருவர் உண்டாக்கக்கூடிய நேசத்தை நன்கு வெளியிட்டு இவ்விதமான கடிதமெழுத வல்லவராயிருக்கின்றனர்? அப்படியே ஸ்திரீவித்தியாசாலையில் படித்து நன்றாய்த் தேறியபெண்கள் இருவரும், மூவருமாகப் பலர் வெளித்தேசத்திற்கு அனுப்பப்பட்டனர். அந்தக் கல்விச்சாலையின் பதிவு புத்தகங்களைப் பார்த்தால், அந்தத் தருமஞ்செய்தவர்களுக்கு அதைவிடப் பேரானந்தமுண்டாக்க வேறொன்றுமில்லை யென்னலாம். இப்படியே இப்பெருமாட்டி இன்னும் அநேகம் உத்தம புருஷர்களுடன் நட்புச் செய்துகொண்டு அநேகவிதமான நன்மைகள் செய்திருக்கிறார்.

எவ்வளவு பெரிய புத்தகமெழுதினாலும், இப்பெருமாட்டி செய்த காரியங்கள் பலவற்றையும் பூர்ணமா யெடுத்தெழுத எவராலும் சாத்தியமன்று. இவரது சரித்திரத்தில், ஜநோபகாரமான காரியங்களையும், தனித்தனி ஒவ்வொரு இனத்தாருடைய நன்மையை நாடிச்செய்த பல தருமங்களையும்பற்றிய அளவற்ற உபாக்கியானங்கள் அடர்ந்திருக்கின்றன. அவர் செய்த அநந்தமான செய்கைகளில் சிலவற்றை யாத்திரமே இங்கே சுருக்கமா யெடுத்துரைத்தோம். அவரது சுயமான போக்கியதையையும், சொந்தமான காரியங்களையும்பற்றி எடுத்துரைக்க இங்கு இடமேயில்லை. அவர் வாய்திறந்து பேசுவதைக் கேட்கையிலேயே அவரது அற்புதமான வாசாலகத்துவமும், தட்டுத்தடையின்றிச் சொற்கள் சித்தமாகப் புங்காநுபுங்கமாய்ப் பிரவகித்து வருவதும் நன்கு விளங்கும். தாம் செய்த பற்பல நன்முயற்சிகளை அந்தந்தச் சமயங்களில் அவசியமாக எடுத்துரைக்க வேண்டியதாக நேரிட்ட நிர்ப்பந்

தத்திற்காகவே இந்த விசித்திரமான சாமர்த்தியத்தை அவர் விருத்திபண்ணிக்கொண்டார்..

மற்றும் பல விஷயங்களுக்குள் இப்பெருமாட்டிக்கு முக்கியமாக பிரிட்டிஷ் இராஜ்யத்தினிடத்தில் அபிமானம் மிகவும் அதிகம். ராஜ்ய தந்திர நிர்வாகப் பயிற்சிப் பாடசாலையேற்படுதற்கு வெகுநாள் முன்னமே இப்பெருமாட்டி வெளிநாடுகளுக்கு யோக்கியர்களான ஸ்திரீகளையும் புருஷர்களையும் அனுப்பி, அங்கெல்லாம் அங்கிலேய அரசாட்சியை ஸ்தாபிக்க அடிகோலினார்.

இவர் தமது சொந்தமான வாழ்க்கையைப்பற்றிச் செய்துகொண்ட ஒரு அதிசயமான செய்கையை மாத்திரமே இங்கு எடுத்துரைக்கச் சாத்தியப்படும். இவர் "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை" என்பதையறிந்து தமது அறுபத்தேழாவது வயதான 1881–ம் ௵ முப்பது வயதுள்ள தமது நண்பரான மேஸ்தர் வில்லியம் பர்டெட் என்பவனை விவாகம் செய்துகொண்டதே அவ்வதிசயமான செய்கையாம். இந்த விவாகத்தை இன்னும் விசித்திரமாகச் செய்யவல்ல அற்புதமான கதையொன்று சொல்வதுண்டு. அதென்னவென்றால், இப்பெருமாட்டி பல வருஷங்களுக்கு முன்னே ஏதோ ஒரு பாடசாலையிலுள்ள பிள்ளைகளை அவர்களுக்கு இஷ்டமான ஒருதினத்தில் தம்வீட்டிற்கு வந்து விருந்துண்ணும்படி கேட்டுக்கொள்ள, ஒரே ஒரு பிள்ளைமாத்திரமே வந்தானும். அவன் இந்த வில்லியம் பர்டெட் என்பவனேயாம் என்று அக்கதை சொல்லுகிறது. இது முற்றும் கட்டுக்கதையே. இது பலநாளாகச் சொல்லப்பட்டுவந்தாலும், இதில் அணுவளவும் உண்மையானதன்று. இவ்வாறே இவர் கௌட்ஸ் பெருமாட்டியினது காசுக்கடையில் உத்தியோகமா யிருந்தாரென்பதும் உண்மையன்று. கௌட்ஸ் பெருமாட்டிக்குக் கீழ்ப்பட்டு இவர் எந்தவிதமான வேலையும் செய்தவரன்று. டர்க்கியில்

யுத்தம் நடந்தபோது வருத்தமுற்ற குடிகளுக்காக இப்பெரு மாட்டி சிலநாளைக்குள் 30,000 பவுண்டு திரவியம் சேகரித் தார்; அப்பொழுது இவர் அத்தேசத்தைப் பார்க்கப்போனதும், பிறகு 1880-ம் ஷு பஞ்சமுண்டானபோது அயர்லாந்து தேசத்துமேலண்டைப் பாகத்திற்கு யாத்திரைபோய் வந்ததும் அவர் தாமே வேண்டுமென்று உபகாரமாகச் செய்த காரியங்க ளாம். பின் என்னவெனில், சிறுபிராயம் முதற்கொண்டே அவர் இந்தப் பாரனெஸ் பெருமாட்டிக்கு அந்தரங்க நேசரா யிருந்தார். அன்றியும் இப்பெருமாட்டி செய்யத்தொடங்கிய பற்பலவிதமான நற்காரியங்களிலும் மிகவும் பிரியமுள்ளவ ராயிருந்தார். இந்த விவாகம் இங்கிலாந்து தேசத்தார் அனைவ ருக்கும் அதிகமான வியப்பை உண்டாக்கியதாயினும், அதை விட வேறுவிதமான ஏற்பாடு செய்துகொள்ள அவரால் ஸாத் தியப்படாமற் போயிற்றென்று தெளிவாக விளங்குகின்றது. இந்தக் கௌட்ஸ் பெருமாட்டி மிகவும் சுகமாயிருந்த தனது வாழ்நாளில் தம் கணவனோடு கூடிவாழும் கடைசி பதினொரு வருஷகாலமே மிகச் சிறந்தகாலமென்று அவளை இளமைமுதற் கொண்டு அறிந்த ஒரு நண்பர் சொல்லுகிறார். மேஸ்தர் கௌட்ஸ் என்பவளைப்போலத் தன் பாரியையினிடத்தில் அவ்வளவு அதிகமான பிரீதியும், விசுவாஸமுமுடைய பர்த்தா வேறொருவருமில்லை யென்னலாம்.

"அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது."

தமது அற்புதமான ஸாமர்த்தியங்களுக்காக விக்டோரி யாளிடம் பியர் என்னும் பட்டம் பெற்ற இப்பெருமாட்டி இப் பொழுது 86 வயதுள்ளவராயிருந்தும், காரியம் செய்வதில் மிகுந்த பாலியப் பருவமுள்ளவராகவே யிருக்கின்றார். அவர் கைகள் எப்பொழுதும் இளைப்படைவதில்லை. நாம் அவரி டத்தில் எவ்வளவு நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்

கிறேமோ, அது நமக்கே தெரியாது. அவரிடத்தில் எத்தனையோ ஆயிரம் பிரஜைகள் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டவரா யிருக்கின்றனர். இப்படி இவரைப்போல மகாராஜா முதல் ஏழைஜனங்கள் வரையுமுள்ள அனைவராலும் அன்புடனே அபிமானித்துக் கொண்டாடத்தக்கவர், விக்டோரியா மகாராணியார் ஒருவர் நீங்கலாக, வேறொரு பெண்மணி இவ்வுலகில் எவ்விடத்திலுமில்லை.

# MARY CARPENTER.

*(The Friend of Female Education in India)*

1807–1877.

---

## மேரி கார்ப்பெண்டர்

என்னும்

## ஸ்திரீ வித்தியாபிமானி.

---

மேரி கார்ப்பெண்டர் என்னும் உத்தமியின் சரித்திரம், இந்துதேசத்துப் பெண்பிள்ளைகளுக்கு நற்புத்தியும் நல்லொழுக்கமும் போதிப்பதற்குச் சிறந்த மேல்வரிச் சட்டமாக விளங்குகின்றது. தாய்க்கு மக்களிடத்தி லுள்ளது போலத் தமக்கு இந்துதேசத்துப் பெண்பிள்ளைகளிடத்தில் அன்பு உள்ளதாக அப்பெருமாட்டி தாமே கூறியிருக்கிறார். அவர்களுக்காக அவர் தாம் பட்ட பிரயாஸங்களாலும், அடுத்தடுத்து நான்குதடவை இந்துதேசத்திற்கு வந்து, "ஐங்காதம் போனாலும் அறிமுகம் வேண்டும்" என்றதுபோல பலரைக் கண்டு நேசித்துத் தாமே வேண்டிய காரியங்களை நேராக நடத்தியதாலும், தாம் தாயைப்போன்ற அன்புள்ளவர் என்று வாயினாற் சொன்னதைச் செய்கையிலும் பிரத்தியக்ஷமாகக் காட்டினார். அவர் இந்தியாவுக்கு எப்பொழுது வந்தார் என்கிறீர்கள்? "இனிமேல் ஒருவேலையும் செய்ய முடியாது; இனி மற்றக்காலத்தை எங்கேயாயினும் ஏகாந்தமாகச் சுகமே கழிக்கவேண்டும்" என்று மற்றவர்கள் நினைக்கும்படியான தள்ளாத வயதிலேயாம்.

இந்த மேரி கார்ப்பெண்டர் 1807-ம் ௵ ஏப்பிரல்மீ 3உ இங்கிலாந்தில் எக்ஸிடர் என்னும் கிராமத்தில் பிறந்தவள். இவளோடுகூடப் பிறந்தவர்கள் மூன்று பெண்களும்,

மூன்று பிள்ளைகளுமாக ஆறுபேர். அவர்களில் இவளே மூத்தவள். வீட்டில் பெரிய்பெண் மேற்போட்டுக்கொண்டு செய்யவேண்டிய காரியங்களில் இவள் எப்பொழுதும் சற்றேனும் பாராமுகமாயிருந்ததாகத் தெரியவில்லை.

இவளுடைய தகப்பனுரான டாக்ட்டர் ரஸ்ஸல் லாண்ட் கார்ப்பெண்ட்டர் என்பவர், அங்கிலேயமதச் சபைக்கொள்கையை அநுசரியாத ஒரு மதாசாரியர். அவர் பிறப்பிலேயே தெய்வபக்தி குடிகொண்டவர். இவரும் இவருடைய மனையாளும் தம்மால் கூடியவரையில் பாடுபட்டு, தமது குழந்தைகளைச் சீராக வளர்த்து "இளமையில் முயற்சி முதுமையிற் காக்கும்" என்னும் மூத்தோர் சொற்படி அவர்களுக்குத் தெய்வபக்தியும், அண்டையயல் மனிதர்களிடத்தில் அன்பும் இயற்கையிலேயே உண்டாகும்படி செய்துவந்தார்கள். இந்த அன்புள்ள தந்தையாரிடத்திலேதான் இப்பெருமாட்டி முதலில் வித்தியாப்பியாசம் செய்யத் தொடங்கியது. அப்பொழுது கல்வியழகே அழகென்று நினைத்து அத்தந்தையார் போதித்த போதனுசக்தியே இப்பெருமாட்டிக்கு வாழ்நாள் முழுவதும் வழிகாட்டிவந்தது.

இவளுடைய தாயார் தனது ஆயுள் முடிவுவரையில் தினசரிக் குறிப்பு ஒன்று எழுதிவந்தாள். அந்தக் குறிப்புப் புத்தகத்தில் அவளது மூத்த மகளின் இளமைப்பருவத்தில் உண்டான சில விசேஷங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. இப்பெருமாட்டி இளமை முதற்கொண்டே மிகுந்த சாமர்த்தியமும் பரோபகார சிந்தையுமமைந்த உத்தமியாயிருக்க வேண்டுமென்று அதனுல் விளங்குகின்றது. இரண்டாவது குழந்தை பிறந்தவுடனே தாயார் மூத்தமகளைப்பற்றி யெழுதியிருப்பதாவது: "இந்தச் சிறிய அறிவாளியின் சிரிப்புண்டாக்கத்தக்க செய்கைகளும், சாதுரியமான பேச்சுக்களும், நான் சந்தோஷமாயிருந்தாலும் வெறுப்பாயிருந்தாலும் எப்பொழு

தும் நான் அவளுடனே பொழுதுபோக்கும்படியான மன மகிழ்ச்சியுண்டாக்கின. அப்படிச் செய்யாவிட்டால், ஆட்டுக்குட்டியின் அழகான செய்கைகளையே பார்த்து நான் பொழுதுபோக்கியிருப்பேன். சிறு குழந்தையான மேரிக்கு நான் அறிவாளி என்று பேரிட்டுச் சொன்னது உங்களுக்குச் சற்று ஆச்சரியமாயிருக்கலாம். ஆனால், அது நான் வைத்த பேரல்ல; அக்குழந்தை தானே வைத்துக்கொண்ட பேர். சில நாளைக்கு முன்னே மேரி என்று பெயரிட்டு அழைப்பது அச்சிறுமிக்குச் சந்தோஷமாயிருந்தது. அதன்பின்பு தன்னை மிஸ். மேரி என்று பெயரிட்டு அழைக்கும்படி வேண்டிக் கொண்டாள். அதுவும் தகாதென்று அப்புறம் மிஸ். கார்ப்பெண்ட்டர் என்று பேர் கூறும்படி கேட்டுக்கொண்டாள். கடைசியாக அதுவும் தனக்குச் சரியானபேரல்லவென்று தனது தாதியுடன் சொன்னாள். அதுகேட்டுத் தாதி, ஆனால், உன்னை நான் வேறே என்ன பெயரிட்டு அழைக்கிறதென்று கேட்க, டாக்ட்டர் (= அறிவாளி) கார்ப்பெண்ட்டர் என்று பெயரிட்டு அழைக்கவேண்டும் என்று சொன்னாள்" என்பதாம்.

இவள் குழந்தைப்பருவத்திலே பதுமைகளிடத்தில் அதிகமான ஆசைகொண்டு அவைகளை வைத்துக்கொண்டு குற்றமற்ற விளையாட்டுக்கள் விளையாடிவந்தாள். அவள் தனக்கு வயதுவந்தகாலத்தில் எவ்வளவு ஊக்கத்துடனே மற்ற வேலைகளைச் செய்யத்தொடங்கினளோ, அதே ஊக்கத்தோடு அச்சிறுவயதிலும் பொம்மைகளுக்கு உடுப்புத் தைத்து அழகு செய்வது முதலான காரியம் செய்துவந்தாள்.

தாய் தனது தினசரிப் புத்தகத்தில் மற்றொரு ஸங்கதி எழுதி வைத்திருக்கிறாள். அது கேட்போர் அனைவரும் வியக்கத்தக்கதாயிருக்கும். அதனால், குழந்தைக்கு நற்குணம் அப்பொழுதே அரும்பெடுக்க ஆரம்பித்ததென்று கண்டு தாய் மனமகிழ்ந்தாளென நன்றாய் விளங்குகின்றது. அதாவது:

“கோடைகாலத்தில் நன்ருக வெயில் காய்ந்துகொண்டிருந்த ஒருநாள், கார்ப்பெண்ட்டர் பண்டிதர் தம் இரண்டு பெண்குழந்தைகளுடனே வெளியே உலாவிவரும்படி புறப்பட்டு, புதிதாகப் புல் அறுத்துப்போட்டிருந்த ஒரு புலத்திற்கு அப்பெண்களை அழைத்துக்கொண்டு போனார். சாதாரணமான மற்றப் பிள்ளைகளைப்போல அன்னி என்னும் இரண்டாவது மகள் வெயிலில் குளிர் காய்ந்துகொண்டு விநோதமாயிருக்கிற அத்தருணத்தில், மதுரமான இளம்புல் போரின்மேல் விழுந்து புரண்டு விளையாடிக்கொண்டிருந்தாள். மேரிக்கோ அப்படிப் புரள்வது சிறிதும் சம்மதமில்லை. “நான் ஏதாவது சகாயம் செய்யவேண்டும், நான் ஏதாவது சகாயம் செய்யவேண்டும்” என்று கூவினாள். அதைக்கேட்டுத் தந்தை அண்டையிலிருந்த வேலியில் ஒரு கொம்பு தறித்துக் கொடுத்த பிறகுதான் அவளுடைய மனம் திருப்தியடைந்தது. அந்தக் கொம்பைக் கையில் வாங்கிக்கொண்டு அச்சிறுமி, புலத்தில் வேலை செய்பவர்கள் செய்வதைப் பார்த்து அவ்விதமாகவே, தானும் தன் தங்கை இறைத்து விட்ட புற்களையெல்லாம் கூட்டி ஒன்ருகச் சேர்க்கலானாள்” என்பதாம்.

“கை உண்டாவது கற்றவர்களுக்குத்தானே” என்பது போல் இளமைப் பருவத்திலேயே கற்று அறிந்த மேரி கார்ப்பெண்ட்டருடைய திறமைகளெல்லாம் தாமே நன்ருக விளங்கலாயின. இவளுடைய தாய் தகப்பன்மார் இருவரும் கல்வி கற்பிப்பதில் மிகத் தேர்ச்சி பெற்றவர்கள். அதனால் அவர்களின் மகளுடைய படிப்பு வெகு சீக்கிரமாக விருத்தியடைந்து வந்தது.

1817–ஞ அந்தக் குடும்பம் எக்ஸிடாரிலிருந்து பிரிஸ்ட்டல் பட்டணம் போய்ச் சேரும்படியாயிற்று. அப்பொழுது மேரியாளுக்கு வயது பத்திற்கு அதிக மில்லையானாலும், அவ்விடத்திலுள்ள ஜனங்களுக்கு உபகாரமான நன்மைசெய்யும்

பொருட்டுத் தகப்பனுர் மேற்கொண்ட முயற்சியில் இச்சிறுமி தானும் துணைசெய்யத் தொடங்கினதாகத் தெரியவருகிறது. அவர் ஏற்படுத்திய பாடசாலையில், மற்றப்பிள்ளைகளுடனே மேரியாளும் படிக்கத்தொடங்கி, லத்தீன், கிரீக் பாஷைகளும், கணிதசாஸ்திரமும் கற்றுக்கொண்டாள். இவ்வளவோடு திருப்திகொள்ளாமல், பிரகிருதி சரித்திரம், பிரகிருதி தத்துவசாஸ்திரம் முதலானவைகளும் கற்கவேண்டுமென்கிற விருப்பம் அவளது மனத்தில் குடிகொண்டிருந்தது. அந்தக் காலத்தில் இங்கிலாந்திலேகூட இப்படிப் பற்பலவிதமான விஷயங்களைப் படிக்க மற்றெந்தப் பெண்களும் முயற்சி செய்ததில்லை. இவைகளோடுகூடத் தந்தையின் பாடசாலையிலுள்ள பிள்ளைகள் படித்த வேறுபல விஷயங்களையும் அவள் கற்றறிந்ததாகத் தெரியவருகிறது. "கல்லாததைக் கற்கப் பண்டிதராவார்" என்றபடி அவளுக்கு ஒவ்வொரு விஷயத்திலுமிருந்த ஆசையும் புத்திகூர்மையும் அவளை எல்லா விஷயங்களிலும் விசேஷமாக விருத்தியடையச் செய்தன. ஆதலால், அவள் அதிசீக்கிரத்திலே தன் தந்தைக்குப் பாடசாலைக்காரியத்தில் உதவிசெய்யும்படியான சாமர்த்தியமுடையவளாயினளென்பது ஒரு ஆச்சரியமன்று. அவர் பிள்ளைகளுக்குப் படிப்பிப்பதற்கும் இவள் எப்பொழுதும் உதவியாயிருந்தாள். "ஆலே விழுது தாங்குகிறது" போல் அவருக்குத் தேகம் அசௌக்கியமாயிருக்கிற காலத்தில் அவருடைய ஸ்தானத்திலுமிருந்து நிர்வகிக்கலானுள். தனக்குச் சரிவயதான புருஷப பிள்ளைகள்நிறைந்த மிகப்பெரிதான பாடசாலையில் அவள் அத்தனை பிள்ளைகளும் ஊக்கமுடைமையுடன் அடக்கமாகத் தான் சொல்வதைக் கேட்டறியும்படி செய்துவந்தாளென்பதைக் கேட்கையிலேயே அவளது சாதுரியமும் சாமர்த்தியமும் இத்தன்மையனவெனத் தெளிவாக விளங்கும். இப்படியிருக்கையில் டாக்டர் கார்ப்பெண்டருக்குத் தேக

சௌக்கியம் குறைவுபட்டது. அப்பொழுது அவருடைய மூத்தமகளுக்கு வயது இருபத்திரண்டு. தேகம் அசௌக்கியப்பட்டதனால் அவர் படிப்பிக்கிற தொழிலைவிட்டு, மத விஷயபோதனை ஒன்றைமாத்திரமே மேற்கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

இந்தக் காலத்தில் மேரியாள் வீண்பொழுது போக்கவில்லை. 1827-ம் வருஷத்தில் அயல் அவ் உவைட் என்னும் இடத்திலே அவள் சில சிறுபெண்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களுக்குப் படிப்பிக்கலானாள். இப்பொழுது தந்தையின் துணையில்லாமல் தன்புத்தியே துணையாகக் கொண்டு படிப்பித்தாள். சிலநாள் கழித்து அவள் பிரிஸ்டல் பட்டணம் போய்ச் சேர்ந்தாள். அங்கே இன்னும் சில வேறு வித்தியார்த்திகள் வந்துசேர, இன்னும் அதிகமான ஊக்கத்துடனே அவர்களுக்குக் கல்விப்பயிற்சி செய்வித்து வந்தாள்.

இப்படியிருக்க ஒரு சமயத்தில் கண்நோவு உண்டாகி அதனால் அவள் அதிகமாக வருத்தப்படலானாள். கண்ணே போய்விடுமோவென்றுகூட அச்சப்படும்படியாக இருந்தது. அப்படிப்பட்ட குணபூஷணியான பெண்மணிக்கு இந்தக் கொடியநோய் வரத்தகுமா? நல்லகாலமாய் அந்தக் கொடிய நோய் குணமாகிவிட்டது. அவள் நோயினால் வருந்தின பொழுது நிமிஷநேரங்கூட அவளை விட்டுப்பிரியாமல் அவளது தங்கை அன்னி யென்பவள் கூடவேயிருந்து கண்ணை இமை காப்பதுபோல் அன்புடனே உபசாரம் செய்துவந்தாள். அதைப்பற்றி மேரியாள் தானே சில பாட்டுக்கள் எழுதியிருக்கிறாள். அவள் செய்த பாட்டுக்களையெல்லாம் எடுத்தெழுத இங்கு இடமில்லாமையால், அதற்கு நிதர்சனமாகச் சிலவற்றின் கருத்தைமாத்திரம் சுருக்கமா யெழுதுகிறேன்.

"சிறிதும சந்தோஷமில்லாமல் இரண்டு சகோதரிகள் ஒரு இருண்ட அறையில் உட்கார்ந்திருந்தனர். மூத்தவள் நோய்

வருத்தம் பொறுக்கமுடியாமல், இனி நமக்கு நல்ல பொழுது கூட விடியுமோவென்று விசனப்பட்டுக்கொண்டிருந்தாள். வெயிலென்றால் அவளுக்கு விஷமாயிருந்தது. இருள் மூடின அவ்விடத்தில் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

மற்றொருத்தி அழகே உருவமெடுத்து வந்தது போன்ற அருமைச் சிறுமகள். அச்சிறுமி தனது விளையாட்டுக்களை யெல்லாம் விட்டு, பிரீதியும் பரிதாபமுமாக அக்காளண்டை உட்கார்ந்து அவளுக்கு இனிப்பாகப் புத்தகம் படித்துவந்தாள். அவளது பேச்சிலேயே இரக்கமும் அன்புமமைந்திருந்தன. அவளது இனிய குரலைக் கேட்டு அந்தநோயாளியே உள்ளமுருகி, வெகு வருத்தப்பட்டுத் தலையைத் தூக்கித் தன் அருமைத் தங்கையின் அழகிய முகத்தை நோக்கினாள். சாளரத்தின் வழியாக நுழைந்துவந்த சூரியகிரணத்தில் அவளது சோதிமுகம் சுந்தரமாக விளங்கியது. மூத்தவள் இராத்திரி காலங்களில் நோய் அதிகமாகி நித்திரையில்லாமல் தவிக்கையிலும், பகலிலும் அந்தகாரத்தில் பொழுதுபோகாமல் புலம்புகையிலும், சிறுமகள் சாந்தமாக உபசாரஞ்செய்து சமாதானப் படுத்திவந்தாள். கண்களைத் திறக்க முடியாத கஷ்டகாலத்திலும் தன் தங்கையினது அழகிய முகத்தை மனதில் நினைத்துக்கொண்டு வருத்தந்தீர்ந்தாள்" என்னும் இக்கருத்து அடங்கிய பாட்டை யெழுதியிருக்கிறாள்.

அன்னி யென்கிற அந்தச் சகோதரியினது நேசமானது மேரியாளுக்கு வாழ்நாள் முழுவதுமே நீங்காத் துணையாயிருந்தது. மூத்தமகள் தன்னிடத்திலுள்ள குறைபாடுகளை நினைத்துப் பலதடவை விசனப்பட்டு இருக்கிறாள். கண்டவர் மனத்தைக் களிக்கச் செய்யும்படியான தன்மை தன்னிடத்திலில்லை யென்றும், தனக்கு நண்பர்கள் அதிகமாகச் சேராமைக்கு அதுவே காரணமென்றும் அவளுக்கே நன்றாக விளங்கியது.

உண்மையிலேயே அவ்விருவரிலும் அன்னியென்பவள் கண்டோர் கண்களைக் கவரும்படியான அழகு வாய்ந்தவள், மேரியாளுக்கு அது இல்லை. அன்னிக்கோ மேரியாளுக்கு இருந்த புத்தியுமில்லை; இளமை முதற்கொண்டு பரோபகாரம் செய்வதே பெரிய காரியமெனக் கொண்டிருந்த மனோதைரியமும் உத்தமகுணமுமில்லை.

பிறரை வடிவத்தினால் வசிகரிக்கும்படியான சிறப்பில்லாவிடினும், பேச்சினால் எவரையும் சுவாதீனம் செய்துகொள்ளும்படியான சொற்றிறமும் சாதுரியப்பேச்சும் தெய்வாதீனமாக மேரியாளிடத்தில் அமைந்திருந்தன. இவற்றோடு தனனிடத்திலுள்ள குற்றங்களும் இவையென்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அவள் தன் குற்றங்களைத்தானே கண்டறிந்து அதற்காக மிகவும் விசனப்பட்டிருக்கிறாள். "இளமைகுற்றம் கண்ணுக்குத் தெரியாது" என்பது உண்மைதான. இந்த விஷயம் அவள் எழுதிய பத்திரிகையினாலேயே பிரசித்தமாகத் தெரிகின்றது.

"அசலார் குற்றம்போல் தன் குற்றம் பார்த்தால், பின் தீது உண்டோ மன்னுயிருக்கு" என்பதுபோல இப்படி ஒருவன் தன்னிடத்திலுள்ள குணதோஷங்களை ஆய்ந்தோய்ந்து பார்ப்பது எவருக்கும் நல்லதுதான். ஆயினும் அது மிதம் மிஞ்சாதிருக்கவேண்டும். அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சன்றோ? நம்மில் அநேகர் இப்படித் தம்மனத்திற்குள் மறைந்து கிடக்கின்ற குற்றஙகளை வெகுவாய் உற்றுப் பார்ப்பதேயில்லை; தம்மிடத்திலுள்ள குற்றங்குறைகளை உற்றுப் பார்க்கிற சுபாவம் சிலருக்கு இருக்கின்றதாயினும், அவர்கள் வேறு சிந்தையின்றித் தம்மிடமுள்ள குறைகளையே நினைத்து நினைத்து வருந்துகிறார்கள். அந்த நினைப்பு அவர்களுக்கு மென்மேலும் மிகுந்த அதைரியமும் அதிகமான விசனமுமுண்டாவதற்குக் காரணமாகின்றது. அது அவர்களுக்கு

மாத்திரமேயன்றி அவர்களைச் சூழ்ந்திருப்பவர்களுக்கும் சக தோஷமின்றி வீணான வருத்தத்தை உண்டாக்குகின்றது. அப்படியே, இந்த எண்ணத்தினால் மேரியாளுக்கிருந்த மன மகிழ்ச்சியும் குறைந்துபோகலாயிற் றென்பதில் சந்தேகமில்லை. ஆயினும், அந்நியர்களுக்கிருந்த செருக்கும் தம்மிடமுள்ள தோஷங்களை நினையாமையும் இவளிடத்திலில்லாமலிருந்தது பெரிய பாக்கியம். அதனோடு சிறந்த புத்தியும் சாமர்த்தி யமும் கடவுள் கொடுத்திருப்பதற்காக அவள் மிகுந்த நன்றி யுள்ளவளாகி, கடவுள் அளித்த அந்த சக்திகளை அவள் வெகு பிரயாசப்பட்டு மேன்மேலும் விசேஷமாக விருத்தி செய்துகொண்டாள்.

அவள் தனக்காகவே எழுதிய ஒரு பத்திரிகையில் தான கற்றறிந்தவைகளையெல்லாம் வரிசையாக அடுக்கி யெழுதியி ருக்கிறாள். அதென்னவெனில், "நான் கற்றறிந்த விஷயங்க ளாவன: பிரஞ்சு பாஷை எனக்கு நன்றாகத் தெரியும். கிரீக், லத்தீன், இத்தாலியன் இப்பாஷைகளைப் படித்துப் பொருள் தெரிந்துகொள்ளத் தெரியும். கடைசியாகச்சொன்ன இரண்டு பாஷைகளைத் தட்டாமல் படிப்பேன். இப்பொழுது தான் ஜர்மனி பாஷை படிக்கத்தொடங்கினேன். பிரகிருதி தத்துவசாஸ்திரம், ஜந்துலக்ஷண சாஸ்திரம், கனிஜவஸ்து சாஸ்திரம், பூமி தத்துவசாஸ்திரம் ஆகிய இவைகளிலும் வேண்டிய விஷயங்களைத் தெரிந்துகொள்ளும்படி போதுமான வளவு கற்றறிந்திருக்கிறேன். க்ஷேத்திர கணிதம், பீஜகணி தம் இவைகளும் சிறிதளவு தெரியும். அவைகளைக் கற்க வேண்டுமென்கிற ஆசை எனக்கு மிகவும் அதிகம். அப் படியே சரித்திரம் படிக்கவேண்டுமென்கிற ஆசையும் எனக்கு அதிகமாயுண்டு. ஆயினும் அதில் அவ்வளவு மிகுதியாகப் பழகவில்லை. சித்திரம் வரையவும் பயின்றேன்; ஆனால் அவ்வளவு திருத்தமாகக் கை பழகவில்லை. சங்கீதமும் கற்றுச்

சங்கீத சாஸ்திரத்தின் முக்கியமான அம்சங்களையும் ஒரு வாறு உணர்ந்தேன். ஆயினும் கடைசியில் ஐந்து வருஷங்க ளாக அதை முற்றும் உபேக்ஷை செய்துவிட்டேன்" என்று இவ்விதமாக எழுதி, பின்னும் தன் மனதில் ஒவ்வொரு மூலை முடக்குகளிலும் நுழைந்து அங்குள்ள ஒவ்வொரு எண்ணங்களையும் விவரமாக எடுத்துக் காட்டுகிறாள். ஆனால் இப்படி காட்டியது "எனக்கு எதிரில்லை, நெல்லுக்குப் பத ரில்லை" என்று தற்புகழ்ச்சி செய்ய எழுதியது அன்று.

அவள் இவ்விதமாகப் புதிய வழியில் வாழ்நாள் கழிக் கத் தொடங்கியது அழகுதான். தனக்கு எப்படிப்பட்ட சங்கடங்கள் சேர்ந்தாலும் அவற்றைச் சிறிதும் எண்ணாமல் அலக்ஷியம் செய்திருந்தது அதினுமழகான குணம். "போதும் என்கிற மனமே பொன் செய்யும் மருந்து." தான் கலியாணஞ் செய்துகொள்வது கடவுளுக்குத் திருவுள்ளமில்லையென்று கொண்டு கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்கிற எண் ணத்தையும் ஆசையையும் சிறிதும் கொள்ளாமலே ஒருபுற மாக ஒதுக்கிவிட்டிருந்தது எல்லாவற்றினும் உத்தமமானதே.

கடைசியாக அவள் 1832-ம் ௵ இங்கிலாந்திலே விஷ பேதி கண்டபோது, விரததினமாக ஏற்படுத்திய ஒருநாள் தன்னைக் கடவுளுக்கே அர்ப்பணமாகச் செய்து சுயநயத்தைச் சிறிதேனும் பாராட்டாமல் லோகோபகாரமான வேலைகள் செய்தே காலங்கழிக்கவேண்டுமெனத் தீர்மானஞ்செய்கிறாள். அதாவது, "கடவுளுக்கு முன்னிலையில் யாவரும் தமக் குள்ள தெய்வ பத்தியையும் தரும சிந்தையையும் வெளிப் படுத்துவதற்காக ஏற்படுத்திய இந்தத் தினத்தில், பிறர்க்கு உபகாரம் செய்வதிலேயே என் காலம் கழியவேண்டுமென் பது என் மனப்பூர்வமான எண்ணம் என உறுதியாகச் சொல் லுகிறேன். கடவுள் தமது கிருபையாகிய நல்லொளியைக்

கொடுத்து என்னை நல்வழியில் நடத்தவேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்" என்று உறுதியாகக் கூறினாள்.

இவ்விதமாக அவள் கொண்ட தீர்மானங்கள் நிறைவேறிய வகை இப்படிப்பட்டதென்பது பின் குறிக்கும் சிறு கதையினால் தெளிவாக விளங்கும்.

இவளது தந்தையான டாக்டர் கார்ப்பெண்ட்டர் தான் வைத்திருந்த ஆண்பிள்ளைப் பள்ளிக்கூடத்தை மூடிவிட்ட பின்பு, அவரது மனையாளும் மகளுமாகிய இருவரும் பெண் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளிக்கூட மேற்படுத்தி, பல வருஷ காலம் அதைப் பரிபாலித்து வந்தார்கள். ஆயினும் அவர்களுடைய காலம் முழுமையும் இந்தக் காரியத்திலேயே ஒழிந்துபோகவில்லை. தங்களைச் சுற்றிலுமுள்ள ஏழைகளும் திக்கற்றவர்களுமான பல பேதை ஜனங்களுக்குப் பலவிதமான உபகாரம் செய்யவும் அவர்களுக்குப் போதுமான அவகாசம் கிடைத்திருந்தது. புதிதுபுதிதாக ஏற்பாடுகள் தோன்றுகிற மேரியாளுடைய மனதில் ஏழைகளைக் காப்பாற்ற நூதனமான ஆலோசனை ஒன்று தோன்றியது. அவள், 'தீனஜன போஷண சபை' என்று ஒரு சபை ஏற்படுத்தி, அதற்காகப் பல நண்பர்களிடம் போய் வேண்டி அவர்களையும் அந்தச் சபையில் சேரும்படி செய்தாள். அதிற் சேர்ந்த ஒவ்வொருவரும், தேகம் பலவீனப்பட்டவர்களுக்கும், நோயினால் வருத்தப்படுகிறவர்களுக்கும் அவசியமான பண்டங்களைத் தேடிக் கொடுப்பதே தமக்குத் தொழிலாகக்கொண்டிருந்தார்கள். ஆடையில்லாதவர்களுக்கு ஆடைகள் வாங்கிக்கொடுக்கவும், நோயாளிகளின் நோய்களைத் தீர்க்கும் வழிகளைத் தேடவும், பலதரம் கூட்டங்கூடிப் பேசினார்கள்.

கல்கத்தாவாசியாகிய ராஜா ராம்மோஹன்ராய் என்பவர் இங்கிலாந்திற்குச் சென்றது, நமது கார்ப்பெண்ட்டர் பெருமாட்டியின் கொள்கைகள் பின்னும் மேன்மைப்படுவதற்கு

ஏதுவாகியது. தெய்வபக்தி அதிகரித்தவரான இந்த ராம் மோஹன்ராய், டாக்ட்டர் கார்ப்பெண்ட்டருடைய காரியங் களைக் கண்டு மிகவும் கொண்டாடி அவரை நேராகவே காணப் போனார். அந்த டாக்ட்டர் கார்ப்பெண்ட்டரும் அவ்விடத் திற்கு வரும் அவருடைய மற்றும் பல நண்பர்களும் இவரை வரவழைத்து மிகவும் கொண்டாடினார்கள். "மனப்பொருத் தம் இருந்தால் மற்றப்பொருத்தம் பார்க்கவேண்டுமோ" என் பது நமது நாட்டுப்பழமொழியல்லவா?

மேரி கார்ப்பெண்ட்டரது அருமை பெருமைகளைச் சொல்லப்புகுந்த இச்சிறு புத்தகத்தில் ராம் மோஹன்ராயி னது கொள்கைகளையெல்லாம் எடுத்துக்கூற இடம் கிடைக் காதன்றே? அவர் பிரிஸ்ட்டல் நகரத்திலிருந்தகாலத்தில் அவ ரிடமிருந்து மேரியாளும் அவளது தந்தையும் பற்பல சங்கதி களைத் தெரிந்துகொண்டார்கள். ஐயோ! சில மாதங்களுக் குள் அவர் இறந்துபோனார். அப்பொழுது இவர்களுக்கு அத்தன்மையான சிறந்த நண்பனை இழந்ததனால் உண்டான நஷ்டமும் கஷ்டமும் நன்றாகப் புலப்பட்டன. அவர் இந்து தேசத்தைப்பற்றியும் இந்துதேசத்துப் பெண்பிள்ளைகளுடைய குறைபாடுகளைப்பற்றியும் எடுத்துக் கூறியது மேரியினுடைய உள்ளத்தில் நன்றாய்ப் பதிந்துபோயிற்று. அப்பெருமாட்டி அப்பொழுது தனக்கு உண்டான ஆசையை வெளியிடத் தக்க முதன்மையான செய்கை யேதேனுமொன்று அந்த நிமிஷமே செய்ய விருப்பங்கொண்டிருப்பாள். மனதில் ஏதேனுமொரு நல்ல விஷயந்தோன்றினால், அதை உடனே செய்து முடிப்பதேயன்றி, வீணெண்ணமாயும் பயனற்ற சொற்களாயும் போக்கிவிடுவது அவளுடைய சுபாவமன்று. ஆயினும் அப்பெருமாட்டி மிகுந்த புத்திசாலி; தான் பிறந்த விடமான தேசத்திற்கு வேண்டிய நன்மைகளைச் செய்வது ஸ்திரீகளின் முதன்மையான கடமையென்றும், அதிலும்

தாய்தந்தையர் சகோதரர் முதலிய உற்ருருறவினரைப் பரி பாலிப்பது மிகச் சிறந்த கடமையென்றும் அவள் நன்ருய் அறிந்தவள். அதனுல் தான் நேராகவே இந்தியாவைப் போய்ப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையை அப்பால் முப் பது வருஷம் வரையில் வெளிக்குக் காட்டாமலே அடக்கி வைத்திருந்தாள்.

தமது சுதேசத்தில் தாம் செய்யவேண்டிய காரியங்களெல் லாம் செய்து முடிந்து, ஓய்வு உண்டான பிறகுதான் இந்தியா தேசத்தைப்பற்றி அவள் கொண்டிருந்த அபேக்ஷையை நிறை வேற்றவேண்டியதாயிற்று. உற்ருரை ஆதரித்தபிறகு ஊராரை ஆதரிக்க முயலவேண்டுமென்பதும், கையிலுள்ள காரியத்தை நன்ருகச் செய்து முடித்தபின் மற்ருெருகாரியத்தின்மேல் ஆசைப்படவேண்டுமென்பதும் ஆகிய சிறந்த நீதிகள் இத ஞல் நன்கு புலப்படுகின்றனவல்லவா?

பெண்கள் கல்வி நாளுக்குநாள் விருத்தியடைந்துகொண் டும், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் அவர்களுக்கு உத்தி யோகம் கொடுக்கப் பல புதியவையான தொழில் துறை கள் ஏற்படுத்தப்பட்டும் வருகிற இக்காலத்தில், "அடுப்பே வன வாசம் வயிறே கைலாசம்" என்றிராமல், ஸ்திரீகள் தாம் லோகோபகாரமான பெரிய காரியங்களில் பிரவேசித்துப் புகழ்ச்சி பெறுவது மேன்மையேயன்றி, இருக்கிற இடம் தெரி யாமல் அடுப்பங்கரையில் அடைத்துக்கொண்டிருப்பது புத்தி யீனம் என்று சிலர் நினைப்பதற்கு ஏதுவுண்டு; அது மிகவும் புத்தியீனமான நினைப்பு. தம் வீட்டைத் தாம் பரிபாலிப் பது தாழ்மையான காரியமோ? இதுவுமல்லாமல்,

"குழலினிது யாழினி தென்ப தம்மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்"

என்றபடி அதன் பெருமை அநுபவித்தவர்களுக்கே தெரி யும். இளங்குழந்தையை ஊட்டி வளர்ப்பவளே உலகமா

ளுவாள் என்பது பழமொழி. வீட்டு வேலைகளைப் பூர்ண மாகச் செய்து முடித்தபிறகுதான், பெண்கள் மற்ற வேலை களுக்குத் தம்மாலான உதவி செய்ய ஒழிவு தேடிக்கொள் ளவேண்டும்.

மேரி கார்ப்பெண்ட்டர் பிறகு முப்பதுவருஷகாலம் பட்ட பிரயாசைகளெல்லாம் இக்கொள்கையையே முதன்மையாக மனத்திற்கொண்டுதான். இப்பெருமாட்டி தனது அன்புக்கு இருப்பிடமும் தெய்வமுமாக நினைத்திருந்த தகப்பனார் சில வருஷகாலம் தேக சௌக்கியம் தப்பியிருந்து 1840-ம் ஞு இம்மகளை விட்டுப் பிரிந்துபோயினார். இடம் மாறிக் குளிரில் லாத இத்தாலியாவிலே போய்ச் சிலநாளிருந்தால் தேகம் சௌக் கியப்படுமென்று வைத்தியர்கள் சொல்லி அப்படியே அனுப் பினார்கள். லெக்ஹாரனிலிருந்து மார்ஸல்லேக்குப் போகும் வழியில் அவர் கடலிலே முழுகிப்போயினார்.

இத்தன்மையான பெரிய ஆபத்துத் திடீரென்று நேரிட்ட பொழுது, அவருடைய மக்கள் அனைவரும், கைம்பெண் ணாகிவிட்ட தமது தாயார்க்குத் தேற்றரவு சொல்லி அவ ளுக்கு உபசாரம் செய்வதிலே மனஞ்செலுத்தியிருந்தார் கள். அவர் இறந்த புதிதில் அவர்களுடைய துக்கத்தை யாற்ற ஒருவராலும் ஆகாமற்போயிற்று. தனியே உட்கார்ந் திருந்து எவ்வளவுநேரம் தவிப்பார்கள்! அக்காலங்களில் "அயனிட்ட எழுத்தில் அணுவளவும் தப்பாது;" எல்லாம் தெய்வச்செயலென்று நினைத்துச் சற்று மனந்தேறுவதும், இஷ்டர்கள் வந்து பொழுதுபோக்காகச் சற்றுநேரம் பேசிக் கொண்டு இருப்பதுமே ஒருவாறு துக்கம் தணிய ஏதுவாயின.

பிறகு முப்பது வருஷகாலம் மேரி கார்ப்பெண்ட்டர் தமது தாயோடுகூடவே வசித்துக்கொண்டிருந்தாள். அவர் களுக்கு உண்டான விசனத்தினாலேயே அவர்கள் அப்படிக் கூடி வாழவேண்டியதாக நேரிட்டது. அப்பொழுது அவர்

களுடைய தாய் சும்மா இருப்பதில்லை; ஏதேனுமொருவேலை செய்தவண்ணமா யிருப்பாள். அதற்கு அம்மக்கள் தம்மாலான உதவி செய்துகொண்டும், விசனம் வந்தபோது "திருவாக்குக்கு எதிர்வாக்குண்டோ" எனச் சமாதானப்படுத்திக் கொண்டு மிருந்தார்கள்.

இவ்விதமாக மேரி கார்ப்பெண்டருக்கு உண்டான கஷ்டங்களையும், அவற்றை ஒருபொருட்டாக நினையாமல் மனோதைரியத்துடன் அவற்றை மிதித்துக்கொண்டு மேலெழுந்ததையும் இங்கே சொல்வதென்றால் ஏடு இடங்கொள்ளாது. அவற்றில் பாதி எடுத்துரைப்பதென்றாலும் மிகப் பெருகும். எப்பொழுதும் அவளுடைய மனதுமாத்திரம் ஒரே நிலையிலிருந்ததென்பதை வெளிப்படையாகக் காட்டத்தக்கதாய் அவள் செய்த இரண்டொரு நற்செய்கைகளை மாத்திரமே இங்கெடுத்துச்சொல்வது போதுமானது.

பேதைப் பிள்ளைகளுக்குத் தனியே பள்ளிக்கூட மேற்படுத்த அடிகோலினவர்களில் இவள் ஒருத்தி; அந்தப் பள்ளிக்கூடங்கள் மிகவும் எளியவர்களும் திக்கற்றவர்களுமான பிள்ளைகளுக்கே ஏற்படுத்தப்பட்டவை. இங்கிலாந்திலே தனவந்தர்களுடைய பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடங்களில் இந்த ஏழைப் பிள்ளைகளைச் சேர்த்துக்கொள்வதில்லை. ஏனெனில், அந்தப் பிள்ளைகள் அழுக்கற்ற சுத்தமான வஸ்திரம் தரித்துக் கண்ணுக்கு லக்ஷணமாயிருப்பார்கள்; ஏழைப் பிள்ளைகளுக்கோ அப்படிச் செய்துகொள்ள வழியில்லையல்லவா?

பிறகு அவர் ரிங்வூட் என்னும் ஊரில் நன்னெறிப்படுத்தும் பாடசாலையொன்று ஸ்தாபித்தார். திருடியும், வேறுவிதமான தப்புகள் செய்தும் குற்றவாளிகளான சிறிய பெண்களையும் பிள்ளைகளையும் சேர்த்துப் படிப்பித்து நல்வழிப்படுத்த உபாயம் செய்தார். அந்தப் பள்ளிக்கூடம் இல்லாவிட்டால்

அப்பிள்ளைகள் சிறைச்சாலையில் அகப்பட்டு வருந்தவேண்டு வதுதானே. இந்தச் சிறு குற்றவாளிகளுடனேயிருந்து அவர் பல வருஷகாலம் பாடுபட்டு அவர்களைப்பற்றிய எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டார். இச்சிறு குற்றவாளிகளுடனே பழகப் பழக, பெரிய குற்றவாளிகளைப் பார்க்க வேண்டுமென்கிற பேரவா அவருக்கு உண்டாகியது. சிறைச்சாலைகளில் அடைபட்டு வருந்தும் குற்றவாளிகளைப் பார்க்கையில் அவர் மனம் பரிதாபமடைந்தது. அன்புள்ள அவரது உள்ளத்தில், அக்குற்றவாளிகளை நல்வழிப்படுத்த எவ்வளவு வேண்டுமோ அவ்வளவே தண்டிக்கவேண்டுமென்றும், மறுபடியும் அவர்கள் அயலாருக்கு உபத்திரவஞ் செய்யாதவிடத்தில் அவர்களை வைத்திருப்பது போதுமானதென்றும் தோன்றியது. அன்றியும், அவர்களுக்கு அவிவேகத்தை ஒழிக்கும் அறிவும் யோக்கியதையும் உண்டாகும்படி கற்பித்து, அப்படி விருத்தியடையப் பாடுபடுகின்றவர்களுக்குச் சிறந்த வெகுமதி கொடுக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் அவர் மிகுந்த ஆவல் கொண்டவராயினர்.

இப்படி அவர் ஏழைப்பிள்ளைகளுக்கும் குற்றவாளிகளுக்கு முண்டான குறைகளைத் தீர்க்கவேண்டிய வழிகளில் பழகப்பழக, அதனோடு சம்பந்தப்பட்ட இன்னும் பல வியாபாரங்களிலும் பாடுபட வேண்டுமென்று எண்ணமுண்டாகி விட்டது.

அவர் தம்முடைய அபிப்பிராயங்கள் நன்றாக விளங்கும்படி பல புஸ்தகங்களும் ஸஞ்சிகைகளும் எழுதினர். ''தான் கற்று ஒன்றைத் தரிக்க உரை'' என்பதுபோல் தமது சொல்லை ஏற்றுக்கொள்ளத் தக்கவர்களான பல பிரபுக்களுக்கும், மந்திரிமார்களுக்கும் தம்மை அபிப்பிராயம் கேட்ட மற்றும் பலருக்கும் கடிதமெழுதித் தெரிவிப்பதிலேயே வெகுவாகக் காலம் போக்கினர்.

அவரது நற்றாயும் 1856-ம் ஹு இறந்துபோனாள். இதை விடக் கொடிய சோதனை வேறென்னவேண்டும்? விசனமிப் படிப்பட்டதென்பது அப்பொழுதுதான் அவருக்கு நன்றாகத் தெரிந்தது. தாயாருடைய அன்பும் ஆசையும், நல்வாழ்த்தும் அவளோடு ஒழிந்துபோயினவன்றோ! இனித் தனக்கு ஆற்று வாருமில்லை தேற்றுவாருமில்லை என்று நினைக்கும் அக்கா லத்தில் அவருக்கு நண்பர்கள் பலர் ஏற்பட்டிருந்தார்கள். அவர்களுடனே அன்னி என்கிற சகோதரியும், அவளு டைய புருஷனும் தாயிறந்த துக்கம் மேரியாளுக்கு அதி கமாகத் தோன்றாதபடிசெய்து வந்தார்கள்; யார் என்ன செய் தாலும் பெற்ற தாயாவார்களோ? தாயார் இல்லாத குறையை நீக்க ஒருவராலுமாகவில்லை. தாயை யிழந்த விசனம் மனத்தை அதிகமாக உறுத்தாதிருக்கும்படி மேரி கார்ப் பெண்ட்டர், பரோபகாரம் செய்வதாகிய தமது காரியத்தில் பின்னும் அதிகமான ஊக்கம் கொள்பவரானார். முக்கியமாக ரிங்ஷூடிலும், ரெட்லாட்ஜிலும் தாமேற்படுத்திய பாடசாலைக ளில் படிக்கும் சிறுவர் சிறுமிகள் விஷயத்தில் அதிகமான ஆஸ்தையுடையவரானார்.

எபபொழுதும் பிறருக்காகக் கஷ்டப்படுவதே அவரு டைய சுபாவம். இவ்வளவு காலத்தில் அவருக்கு ஐம்பத் தொன்பதாவது வயது வந்துவிட்டது. அப்பொழுது அவரு டைய நண்பர்கள் எல்லாரும், இனி இவர் வேலையொழிந்து சுகமாகக் காலம் கழிக்கவேண்டுமென்று நினைத்திருந்தார்கள்.

அவரோ அப்படிச் செய்யவில்லை. முப்பது வருஷத்திற் குப் பிறகு அவரது எண்ணம் மறுபடி இந்தியாவின்மேல் ஓடியது. இச்சஞ்சிகை யாருக்காக எழுதப்படுகின்றதோ, அவர்களுக்கு அப்பெருமாட்டி மிகவும் முக்கியமான நன்மை கள் செய்யத் தொடங்கியது இப்பொழுதுதான்.

அவருடைய நண்பர்கள் அநேகர் அவளை இந்தியாவுக்குப் போகக்கூடாதென்று தடுக்கப் பாடுபட்டுப் பார்த்தார்கள். அறுபதுக்குச் சமீபமான அந்த வயதிலே நெடுந்தூரம் கப்பல் யாத்திரை செய்வதும், ஒருநாளும் போய்ப் பழகாத உஷ்ண தேசத்தில் ஸஞ்சரிப்பதும், ஜனங்களும் தேசாசாரமும் முற்றும் நூதனமான தேசத்திலே ஸஞ்சரிப்பதுமாகிய இவற்றால் உண்டாகும் பல கஷ்டங்களையும் ஆலோசித்து அவர்கள் மிகவும் பயந்தார்கள். ஆயினும் அவர்களுடைய வார்த்தை மேரி கார்ப்பேண்ட்டர் இடத்தில் பயன்படவில்லை; இங்கிலாந்திலே தாம் செய்யவேண்டிய வேலை முற்றும் செய்தாகிவிட்டதென்றும், இனிமேல் தனது ஸகாயமில்லாமலே அவ்விடத்தில் வேலைகள் நடந்தேறி வருமென்றும் அவருக்கு நன்றாக விளங்கியது. இவ்வுலகத்தில் எந்தத் தேசத்திலாயினும் நன்மை செய்வதற்குப் போதுமான அநுபவமும் அறிவும் அவருக்கு உண்டாகிவிட்டன. அன்றியும் அவரது வாக்கு எவ்விடத்திலும் தடையின்றிச் செல்லும்படியான பிரசித்தியும் சிலாக்கிய பாக்கியமும் இப்பொழுது அவருக்கு உண்டாகிவிட்டது.

உள்ளூரிலேயே இருக்கும்படியான கால்கட்டுகள் இப்பொழுது அவருக்கு ஒன்றுமில்லை. அதனால் அவரது மனம் இந்தியாவிலுள்ள ஸ்திரீகளின்மேலே சென்றது. இங்கிலாந்து தேசத்து ஸ்திரீகள் அநுபவிக்கின்ற நன்மைகளில் சிலவற்றை இந்தியாவிலுள்ள ஸ்திரீகளும் பெறும்படி செய்யவும், அவ்வளவுகாலமாகத் தாம் பெற்றுக் களஞ்சியமாகச் சேர்த்துவைத்திருக்கும் அறிவையும் அநுபவத்தையும் அவர்களுக்கும் அவர்களுடைய தேசத்திற்கும் தத்தம்பண்ணி உபயோகப்படுத்தவும் ஆசைகொண்டார்.

வீணான தொல்லைகளைத் தாமே வேண்டுமென்று மேற்போட்டுக்கொண்டு தமக்குச் சம்பந்தமில்லாத காரியங்களிலே தாமே தலையிட்டுக் கொள்ளுகிறாரென்று சிலர் அவளைப்பற்றி

நினைப்பார்கள். அப்படியும் அநேகர் நினைத்தார்கள். ஆனால் சிறந்த விவேகிகளும், அவருடனே நன்றாகப் பழகியவர்களும் அப்படி நினைத்தவரல்லர்; உசிதமான முயற்சியென்றே மெச்சினார்கள். ராஜாங்கத்து மந்திரிமார்களும், மதக்கோட்பாடுகளில் வேறுபட்டவர்களும், நானாவித காரியங்களிலும் தொழில்துறைகளிலு மிருக்கின்றவர்களுமான பல துரைசானிகளும் துரைமாருமாகிய ஸஜ்ஜனர்களும் இந்தியாவை ஆளும் ராஜப்பிரதிநிதிக்கும், ஒவ்வொரு ராஜதானியின் கவர்னருக்கும் இப்பெருமாட்டியை அறிமுகமாக்கும்படி புகழ்ந்து பேசிக் கடிதமெழுதினார்கள்.

அவர்களில் இந்துதேசத்துப் பிரதான மந்திரியான லார்டு ஸாலிஸ்பெரி பிரபுவும் பரோபகாரியான நைத்திங்கேல் என்னும் உத்தமியும் முக்கியமானவர்கள். இந்துதேசத்துப் பிரதான மந்திரி எழுதிக்கொடுத்த கடிதத்தைக் கைக்கொண்டு அவர் இங்கிலாந்தினின்றும் புறப்பட்டார். அந்தக் கடிதத்தின் பல பிரதிகள், வித்தியாவிசாரணை, சிறைச்சாலை விசாரணை முதலான பல அதிகாரங்களின் தலைவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியே அனுப்பப்பட்டன. அந்தக் கடிதத்தில் கண்ட பல விஷயங்களில் முக்கியமான சங்கதியாவது, "........ இப்படிப்பட்ட பலவிதமான விஷயங்களில் மேரி கார்ப்பெண்ட்டர் பெருமாட்டியின் அபிப்பிராயத்தையே இங்கிலாந்தின் மந்திராலோசனைச் சபையாரும், ராஜ்ய தந்திர நிர்வாகிகளும் முதன்மையாகக் கேட்டு அநுசரித்து வருகின்றனர்" என்பதாம். இதுவே அவருடைய யோக்கியதாபத்திரிகையாக மதிக்கப்பட்டது.

பரோபகார சிந்தையினாலுண்டான ஒருவகை அபிமானம், தவிப்பு, ஊக்கம், மேலான காரியத்தைச் சாதிக்க வேண்டுமென்கிற மனோரதம் ஆகிய மனோவியாபாரங்களாலேயே, இந்த நூதனயாத்திரை ஆரம்பமானது. இந்துதேசம் ஒருநாளும் தாம

பாராத புதிய தேசமென்றும், அத்தேசத்தைப்பற்றித் தாம் தெரிந்துகொள்ள வேண்டியவை அநேக மிருக்கின்றனவென் றும் அவருக்கு நன்ருகத் தெரியும். ஆதலால் முதலில் அத் தேசத்தைப்பற்றிய பலவற்றையும் தாம் தெரிந்து கொள்வ தோடு திருப்தியடைய வேண்டுமேயன்றித் தாம் ஒன்றையும் அவ்விடத்தில் போதித்து நிறைவேற்ற முடியாதென்று உணர்ந் தார்.

இங்கிலாந்திலிருந்த இந்துதேசத்துப் பிரபு ஒருவருக்கு அவர் எழுதியதாவது: "பெரிய காரியங்களைச் சாதிக்க வேண்டுமென்கிற ஆசையிலே நான் இந்தியாவுக்குப் போகிறே னென்று ஒருவர்க்கும் தோன்ருதபடி ஜாக்கிரதையாகப் பார்த் துக்கொள்ளவேண்டும். உங்கள் தேசத்து ஸ்திரீகளுடைய நன்மைக்காக நீங்கள் செய்யும் நற்காரியங்களைக்கேட்டு நான் மிகவும் சந்தோஷித்து, அத்தேசத்தார் விஷயத்தில் ஏதேனும் நன்மை செய்யத் தக்கதிறமை எனக்கும் உண்டாக்கிக் கொள் வதற்காக, அத்தேசத்து நிலையை ஒருவாறு அறிந்துகொள் ளுமபடி நான் போகின்றேன்" என்பதாம்.

"ஊக்கமுடைமை ஆக்கத்திற்கழகு" ஆகையாலே இந்து தேசத்திற்கு யாத்திரை செய்கிறேமென்கிற சந்தோஷத்தி ஞல் அவருக்குப் புதிதான உற்சாகமுண்டாகியது. இந்த மேரி கார்ப்பெண்ட்டரைப்போல நன்ருகப் பயிற்சிசெய்யப் பட்ட மனமுடையவர்களுக்கும், புதிது புதிதாகப் பல சங் கதிகளை யறியப் பழகிய புத்தியுடையவர்களுக்கும், மேலான மகிழ்ச்சி யுண்டாக்கத்தக்கது அயல்நாடுகளில் யாத்திரை செய்வதைவிட மற்றென்றில்லை. "கண்ணிருந்தும் குருடு" என்று ஒரு கதை உண்டே; அதை யெப்பொழுதேனும் கேள் விப்பட்டிருக்கிறீர்களா? அதாவது, ஒரு சிறிய பையன் தூர தேச யாத்திரை போயினன். எங்கேபோனலும் அங்கங்கே அவனுக்கு அதிசயமான ஏதேனும் ஒருபொருள் புலப்பட்டுக்

கொண்டேயிருந்தது. பிறகு மற்றொருவன் அதேவழியில் நடந்துபோனான்; அவனுக்கு ஒரு அதிசயமும் அங்கே புலப் படவில்லை.

இது ஒரு பழையகதையே யானாலும், இதனால் விளங் கும் நீதிமாத்திரம் எப்பொழுதும் புதிதாகவேயிருக்கின்றது. நாம் எவ்வளவு விஷயங்களைக் கற்கிறோமோ, அவ்வளவுக் கவ் வளவு நன்றாக நமது புத்தியும் மனமும் பண்படுத்தப்படுகின் றன; அவ்வளவுக் கவ்வளவு இவ்வுலகத்திலுள்ள பண்டங்கள், பொருள்கள், பிராணிகள், ஆண் பெண் ஆகிய மானிடர் கள் ஆகிய பலவற்றில் எதைக்கண்டாலும், அதில் இனிப்பும் அதிசயமும் உண்டாக்கத்தக்க புதுமைகள் பல தோன்று கின்றன. மந்தபுத்தியுடையவர்களான மூடர்களும், அன்பும் ஒற்றுமையும் இல்லாதவர்களுமே எவ்விடத்திலிருந்தாலும் ஒரு அதிசயத்தையும் காணமாட்டார்கள்.

ஆதலால் மத்தியதரைக்கடலிலே இராக்காலங்களில் அழ காக நிலவுகாய்ந்ததும், செங்கடலில் செவ்வானம்பட்டுச் சூரி யன் அஸ்தமித்ததும், கீழே அகாதமான கடலும் மேலே மிகப் பரந்தவானமும் விசித்திரமாகத் தோன்றியதும், அழகிய பம் பாய் பட்டணத்தை அவர் முதல் முதல் கண்ட சிறப்பான காட்சியும், நாநாவிதமான நிறத்துடனே பற்பல நடையுடை பாவனையுள்ள அவ்விடத்துப் பிரஜைகள் தோன்றிய தோற்ற மும், மேரி கார்ப்பெண்ட்டருக்கு மேலான மகிழ்ச்சியை உண்டாக்கி அவருடைய இளைப்பையும் ஆற்றின.

இந்தியாவுக்கு வந்துசேர்ந்தவுடனே மேரி கார்ப்பெண்ட் டர் தம்மால் கூடியவரையில் பிரயத்தனப்பட்டு, இத்தேசத் துப் பிரஜைகளையும் வழக்கங்களையும் கையாளும் பொருள் களையும்பற்றித் தெரிந்துகொள்ள முயன்றார். இத்தேசத்துச் சிறைச்சாலைகள், வைத்தியசாலைகள், வித்தியாசாலைகள், போதனப்பியாஸ பாடசாலைகள் ஆகிய பலவற்றையும்

போய்ப் பார்த்தார். இத்தேசத்துப் பிரபுக்கள், பெருமாட்டி களில் சிலருடைய கிருகங்களுக்குத் தாமே சென்றும், சிலர் தாமிருக்குமிடத்திற்கு வரப்பெற்றும், அவர்களைக் கண்டு பேசி, தேசமரியாதை அறியாதார்க்கு மகிமையில்லையாகை யால் இந்துக்களுடைய ஒழுக்கங்களையும் மரியாதைகளையும் தம்மால் இயன்றவளவு தெரிந்துகொண்டார்.

முதலில் இந்தியாவிலிறங்கினவுடனே பம்பாயில் சிலகால மிருந்து அவ்விடத்தை நன்றாகப் பார்த்துக்கொண்டு, பிறகு சென்னைக்கு வந்தார். சென்னையில் அப்பெருமாட்டி, அப் பொழுது இந்தியாவில் பிரதான வித்தியாவிசாரணைத் தலைவ ராயிருந்த இ. பி. பவல் துரைவயர்களின் வீட்டிலிறங் கினார்.

அப்பால் சென்னையிலிருந்து கல்கத்தாவுக்குப் போனார். அவ்விடத்திலே கேசவ சந்திரசேனன் என்பவர் இப்பெரு மாட்டியின் பழைய நண்பனான ராஜா ராம்மோஹன்ராய் போலவே கடவுள் ஒருவரே என்று வாதிக்கும் பிரம்ம ஸமா ஜமதத்தைப் பிரசாரம் செய்தவர். அந்த மதத்தில் இப்பெரு மாட்டிக்கும் அதிகமான நோக்கமுண்டு.

பிறகு கல்கத்தாவிலும் சென்னையிலும் அவருக்காகக் கூடிய பல சபைகளையும், அந்தச் சபைகளில் அவர் செய்த பிரசங்கங்களையும், கண்டகாட்சிகளையும், செய்த செய்கை களையும் முற்றுமெடுத்துரைப்பதென்றால் மிகப் பெருகும். கல் கத்தாவிலே அவர் லார்டு லாரென்ஸ் பிரபுவின் வீட்டில் விருந்தாகச் சென்றிருந்தார். திரும்புகாலில் அவர் மறுபடி சென்னைக்கு வந்து, நேப்பியர் பிரபு, நேப்பியர் துரைசானி இவர்களுடனே துரைத்தனமாளிகையில் இறங்கியிருந்தார்.

இங்கே சிறைச்சாலைகளைச் சீர்ப்படுத்தவும், பாலிய குற்ற வாளிகளுக்குப் பாடசாலைகள் ஏற்படுத்தவும் அவர் வேண்டிய யுக்தி யுபாயங்கள் எடுத்துக் காட்டினார். பெண்களது கல்விப்

பயிற்சி விஷயத்தில் விசேஷமாகப் பிரசங்கித்தார். அவருக்கு உண்டாயிருந்த அதிகமான அநுபவத்தினால், அக்காலத்திலி ருந்த பெண் கல்விப் பயிற்சியிலுள்ள முதன்மையான குறைவு இன்னதென்பதைச் சீக்கிரமே கண்டுகொண்டார். அதாவது, பெண்களுக்குப் பாடசாலையில் கற்பிக்கப் பெண்பாலரே உபாத்திமாராகக் கிடைக்காமையேயாம். அது கண்டுகொண்டு அவர் ஸ்திரீகளுக்குத் தனியே போதனுப்பியாஸ பாடசாலை யொன்று அவசியம் வேண்டுமெனத் துரைத்தனத்தாருக்கு உறுதியாகத் தெரிவித்தார்.

இப்படியிருக்கச் சீக்கிரமே அவர் இந்தியாவை விட்டுப் போகும்படியான தருணம் வந்துவிட்டது. அவர் இந்தியா வுக்கு வரும்பொழுது எதிர்பார்த்திருந்ததைப்பார்க்கிலும் மிக வும் அதிகமான நன்மைகளை இத்தேசத்திற்கு உண்டாக்கி விட்டு, மிகுந்த விசனத்துடன் 1867-ஆம் மார்ச்சுமீ 10உ பம் பாயைவிட்டுக் கப்பலேறினார்.

திரும்பி அவர் இங்கிலாந்திற்குச் சென்றபோது நமது மகாராணியாரை நேராகப் போய்த் தரிசிக்கும்படியான அநு மதி கிடைத்தது. இந்துதேசத்து ஸ்திரீகளைப்பற்றி மேரி கார்ப் பெண்ட்டர் சொல்லிய எல்லா விஷயங்களையும் சக்கரவர்த் தினியார் அதிக ஆதரவுடனே கேட்டு, அப்பெண்களிடத்தில் தமக்குள்ள தாய்க்குச் சமமான விசுவாஸத்தை வெளிப்படுத் தினார்.

பெண்களுக்காகப் போதனுப்பியாஸ பாடசாலை ஏற் படுத்தவேண்டியது அவசியமென்பதைப்பற்றி மேரி கார்ப் பெண்ட்டர் அவ்வளவு உறுதியாகச் சொல்லியும், அதற்காக இந்தியா துரைத்தனத்தார் ஒவ்வொரு ராஜதானி நகரத்திற் கும்.1,200 பவுண்டு கொடுப்பதாகத் தீர்மானித்து, அது ஐந்து வருஷம் வரையில் நீடித்து நடத்தப்படுமென்று உத்தரவு பண்ணியும், போதனுப்பியாச பாடசாலை ஸ்தாபிக்கத் தாம

லப்பட்டது. அதனால் 1868-ஆம் மேரி கார்ப்பெண்ட்டர் மறுபடி இந்தியாவுக்கு வரலானார். இந்தத்தடவை பம்பாயில் ஸ்திரீகளுக்காக ஏற்படுத்தும் போதனாப்பியாஸ பாடசாலைக்குத் தாமே விசாரணைத்தலைவரா யிருக்கவேண்டுமென்கிற நோக்கத்துடனே வந்தார். அவருடைய பிரேரேபணையின்மேல் சென்னப்பட்டணத்திலும் ஸ்திரீகளுக்குப் போதனாப்பியாஸ வித்தியாசாலை யொன்று ஸ்தாபிக்கப்பட்டது. பல மாதங்கள்வரையில் அவர் இதற்காக மிகப் பாடுபட்டு உழைத்தார். அப்படியிருக்க, ஐயோ! 1869-ஆமாண்டில் கொடிய நோயொன்று கண்டு அவர் திடீரென்று அவ்வேலையை விட்டு ஒழியும்படி நேரிட்டது. அன்றியும், அவ்வளவு முதிர்ந்தவயதில் அதிக உஷ்ணமான தேசத்திலேயிருந்து வித்தியாப்பியாசம் செய்வித்துக்கொண்டிருப்பது அபாயத்திற்கு இடமானதென்று பிரத்தியக்ஷமாகத் தெரியவந்ததனால், தேகத்தை அநுகூலப்படுத்திக்கொள்வதற்காக இங்கிலாந்திற்குத் திரும்பிவிட்டார். ஆயினும் அவ்விடத்திலேயே நின்றுவிடவில்லை. அடுத்த வருஷம் மறுபடி மூன்றாந்தடவை இந்தியாவுக்கு வந்தார். இந்தத்தடவை வந்து பார்த்தபொழுது தாம் செய்த முயற்சிகளில் சில காரியசித்திபெற்று வருகின்றனவெனக் கண்டு களிப்படையலானார். ஆயினும் பலவிஷயங்களில், யாவரும் விருப்பத்துடனே தமக்கு உதவி செய்வார்களென்று அவர் எதிர்பார்த்திருந்ததற்கு முற்றும் மாறாகப் பலர் அதற்கு உடன்படாமல் விரோதமாக இருந்ததைக்காண அவருக்கு அதிகமான மனவருத்த முண்டாகிவிட்டது.

ஆனால் இது எவ்விடத்திலும் இயற்கையான விஷயமே. இந்தியாவில் பின்னும் விசேஷம். லோகோபகாரமாக என்ன காரியம் செய்யப் பிரயத்தனப்பட்டாலும், அதற்கு முதலில் இவ்விதமான தடைகளும் உற்சாக பங்கமும் உண்டாகுமென்பது நிச்சயம். ஆகையால், எதுவந்தாலும் அதற்கு நாம் சலிக்

காமல். மேற்கொண்ட முயற்சியைக் கைவிடாமல் முனைந்து பாடுபடச் சித்தமா யிருக்கவேண்டுமென்று மனவுறுதி கொண்டு மேரி கார்ப்பெண்ட்டர் தம் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டவிதமாகவே, போகப்போக நல்லகாலம் வரும்; நல்லகாலம் வருமென்று எதிர்பார்த்துக்கொண்டு, விடாமுயற்சி யாகப் பாடுபட்டுக்கொண்டிருந்தார்.

எப்பொழுதேனும் கடற்கரையிலே போய் நின்று அலை யெழும்பி வருவதை உற்றுப்பார்த்திருக்கிறீர்களா? முதலி லேயே அலை மிகப் பெரிதாக மேலே யெழும்பிக் கரைமேல் வெகுதூரம் உள்ளே வந்து மோதுவதில்லை. அலைகளை உற் றுப் பார்த்துக்கொண்டேயிருந்தால், ஒவ்வொரு அலையும் அதற்குமுன் வந்த அலையைப்போலவே சற்று மேலெழும்பி வந்து அடங்கிப்போகுமென்று தோன்றுகிறது. ஆனால் உண்மை அப்படியில்லை; அலைகள் ஒன்றின்பின் ஒன்று சிறிது சிறிதாக உயர்ந்து மேலெழுந்துகொண்டு வர, சற்று நேரத்திற்குள் ஒரு அலை மிகப் பெரிதாய் அதிக உயரம் வானத் தில் எழும்பிக் கரைமேல் வெகுதூரம் வந்து மோதுகின்றது. சரியான ஏற்பாடுகளின்மேல் நடத்தப்படுகிற ஒவ்வொரு காரி யமும் இத்தன்மையானதே. சில சமயத்தில் அது அப்படியே நின்றுபோனதாகத் தோன்றும்; சில சமயம் அதற்கு ஆதாரமே அற்றுப்போனதாகத் தோன்றும்; ஆயினும் கடைசியில் காரி யம் கைகூடும். இந்தியாவிலே பெண்கள் கல்விப்பயிற்சியும் இத்தன்மையானதாகவே யிருக்கின்றது. ஸ்திரீகளுக்கு வித் தியாப்பியாசம் செய்விப்பதில் சில தீமைகளும் தவறுகளும் உள்ளனவென்றாலும், அதிகமான கல்வித்தேர்ச்சியும், ஸ்வா தீனமுமுள்ள ஸ்திரீகளே நன்மக்களும், நன்மனையாட்டியும், நற்றாயுமாவார்களென்று ஒவ்வொரு ஸ்திரீயும் அநுபவத்தி னால் காட்டி இந்த நன்முயற்சியை ஈடேறச்செய்வார்களென் பதுமாத்திரம் எப்பொழுதும் நிச்சயமென்று நினையுங்கள்.

மேரி கார்பெண்ட்டர் இந்தியாவைவிட்டுத் திரும்பிச் சென்றபொழுது, பாபூ கேசவ சந்திரசேனன் இங்கிலாந்திலிருந்தார். இப்பெருமாட்டி அவரை பிரிஸ்ட்டல் நகரத்தில் ரெட்லாட்ஜ் என்னுமிடத்திலே தமது மாளிகைக்கு வரவழைத்து, அவருடன் பரோபகாரமான பல விஷயங்களையெடுத்துப்பேசினார். அவர்களுக்குப் பிரஜைகளிடத்திலிருந்த அன்பினாலும், அவர்களுடைய சம்பாஷணையினாலுமே நாஷனல் இந்தியன் அஸ்ஸோஸியேஷன் என்கிற பெயருடன் தாபிக்கப்பட்டுப் பிரசித்திபெற்றிருக்கும் சங்கமானது இப்பொழுது இத்தேசமெங்கும் முகமை செலுத்தத் தலைப்பட்டது.

இந்தச் சங்கம் ஏற்படுத்தினதற்கு முதன்மையான நோக்கங்களாவன:—இந்தியாவில் படித்துத் தேறிய வித்தியார்த்திகள் இங்கிலாந்திற்குப் போவதற்கு வேண்டிய உதவிசெய்வதும், பெண்களுக்குக் கல்விப்பயிற்சியை விருத்திசெய்வதும், சுதேச ஸ்திரீகளும் அங்கிலேய ஸ்திரீகளும் ஒருவர்க்கொருவர் கூடிப் பழகி அதிகமான நட்புள்ளவர்களாகவேண்டு மென்பதுமேயாம். அப்பொழுது ஆரம்பித்த அந்தச் சங்கம் மேன்மேலும் சீராகவே நடந்தேறிவருகின்றது.

அந்தச் சங்கத்திற்கு இப்பொழுது இத்தேசத்து மூன்று ராஜதானிகளிலும் கிளைச்சங்கங்கள் பல ஏற்பட்டிருக்கின்றன. அந்தச் சங்கத்திற்குக் காரியதரிசியாயிருக்கின்ற மிஸ். மானிங் பெருமாட்டியைவிட, இந்துதேசத்து ஸ்திரீகளுக்குச் சுயநபத்தை விசேஷமாகப் பாராட்டும் உண்மையான நண்பர் வேறொருவருமில்லை. அதேகாலத்தில் அச்சங்கத்தின் நோக்கங்களை விவேசனம்பண்ணி, "இந்தியன் மாகஜீன்" என்னும் பெயருள்ள ஒரு பத்திரிகை துவக்கப்பட்டது. அது இப்பொழுதும் விடாமல் பிரதிமாதம் பிரசுரம் செய்யப்பட்டுவரு

1870-ல் மேரி கார்ப்பெண்டருக்குப் புதிதாய் மிகக் கொடிய மற்றொரு விசனம் சம்பவித்தது; அதாவது, ஹெர்பர்டு தாமஸ் துரைக்கு வாழ்க்கைப்பட்டிருந்த அன்னியென்கிற அவளுடைய சகோதரி மரணமடைந்தாள். அவள் ஒரு சமயத்தில் ஒரு நேசனுக்கு எழுதிய கடிதத்தில், 'நம்மிருவருக்கும் பரஸ்பரம் உள்ள நேசம் இவ்வளவென்பதை நாம் ஒருவர்க்கொருவர் ஒருபோதும் சொல்லிக்கொண்டதில்லையே. மலரில் மணமும், எள்ளில் எண்ணெயும், உடலில் உயிரும் போல் நமக்குள்ளிருந்த நேசம் இவ்வளவென்பதை வாயினால் விளங்கச்சொல்வது அசாத்தியம்' என்று கண்டிருக்கிறாள். குடும்பத்திலே நேர்ந்த இந்தத் துன்பமானது மேரி கார்ப்பெண்டர் மேற்கொண்டிருந்த லோகோபகாரமான பல காரியங்களைச் சிறிதும் தடைபண்ணவில்லை. அவற்றோடு மேரி கார்ப்பெண்டர் தம் சகோதரி செய்ய உத்தேசித்திருந்த சில காரியங்களையும் தாம் நிறைவேற்ற முயன்றார். மறுவருஷம் அவ்வாறே அந்தச் சகோதரியின் ஒரு மனோரதத்தை நிறைவேற்றலானார். பாபூ சசிபாத பானர்ஜியை அவருடைய மனையாட்டியுடனே இங்கிலாந்திற்கு வரவழைக்கலானார். தமது தேசத்துக் கைத்தொழிலாளிகளின் அபிவிருத்தியைப்பற்றி அவர் மேற்கொண்டிருப்பதாகச் சொன்ன முயற்சிகளில், தாமும் அதிக ஆவலுடனே கலந்துகொண்டார்.

இந்தியாவிலுள்ள பிராம்மண ஸ்திரீ முதலில் இப்பொழுது இங்கிலாந்துக்குப் போக வழிகாட்டியதனால், இதைக் கண்டு இன்னும் பல பிராம்மண ஸ்திரீகளும் அவளைப் பின்தொடரும்படியாகி, இந்துதேசத்து ஸ்திரீகள் மேன்மைப்படிப்படி ஆகுமென்று அவர் மகிழ்ச்சிகொண்டார்; அந்தப் பெண்மணியைத் தமது வீட்டிலேயே வரவழைத்து உபசரித்தார்.

பானர்ஜியின் மனையாட்டி கோடைகாலத்தில் அந்த மாளிகையிலேயேயிருந்து ஆநந்தமாகக் காலம் கழித்தார். அப்பொழுது அவ்விடத்தில் அவருக்குக் குமாரன் ஒருவன் பிறந்தான். அவனுக்கு *ஆல்பியன் என்று பெயரிடப்பட்டது. "கிணறு இறைக்க இறைக்கச் சுரக்கும்" என்பது போல் தமது மனத்திலே ஓயாமல் ஊறிக்கொண்டிருந்த அன்பின் வெள்ளத்தை மேரி கார்ப்பெண்ட்டர் ஆதரவில்லாத அந்தச் சிறு குழந்தையின்மீதும், சுதேசத்தைவிட்டு நெடுந்தூரம் வந்திருந்த அதன் பெற்றோர்களின்மீதும் பெருக்கினாள். "அன்பே பிரதானம் அதுவே வெகுமானம்."

நாளாக நாளாக மேரி கார்ப்பெண்ட்டருடைய நற்போதனையும் நல்லுதவியும் விசேஷமாக வேண்டப்பட்டன. இதனால் அவரைத் தருமஸ்தானம் என்னுமிடத்திற்கு வரவழைத்தார்கள். அங்கே காலஞ்சென்ற நம் மகாராணியாரின் அருமை மகளான பிரின்ஸெஸ் ஆலிசும், பிரின்ஸெஸ் லூயிசும் ஸ்திரீகளுடைய வேலைகளைப்பற்றி யுண்டான கேள்விகளைக்குறித்து ஆலோசிக்க ஒரு மஹாசபை சேர்க்கும்படி அப்பொழுது ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள். அங்கே கார்ப்பெண்ட்டர் பெருமாட்டி அரண்மனையிலேயே போயிறங்கினார். அந்த ராஜகுமாரத்தியும் கண்டமாத்திரத்தில் அவரை அறிந்துகொண்டார். அன்றியும் "உம்மைக் கண்டவளவிலே எனக்கு மனோதைரியமும் மேலான நன்மையும் உண்டாயின" என்று மிஸ். கார்ப்பெண்ட்டருக்கு உபசாரணையாக ஒரு கடிதத்திலெழுதிப் பிரியப்படுத்தினார்.

அந்த தருமஸ்தானத்தைப் பார்த்தபிறகு, ஸ்விட்ஜர்லாந்தில் பலவிடங்களைப் போய்ப் பார்த்துவரும்படியாக நேரிட்

* இந்த ஆல்பியன் பெனார்ஜி இந்தியா ஸிவில் ஸெர்விஸ் பரீக்ஷையில் 1894-ஆம் தேறி இப்பொழுது சென்னை ராஜதானியில் பெரிய உத்தியோகத்திலிருக்கிறார்.

டது. அப்பால் மறுவருஷம் அமெரிக்காவுக்குப் போயினர். அங்கேயிருந்த சிறைச்சாலைகளின் நிலையைப் பார்க்க மிகவும் பரிதாபமாயிருந்தது.

இந்தியாவைக் கடைசியாக வந்து பார்த்து இப்பொழுது ஐந்து வருஷங்களாயின. இந்த வருஷங்களில் சொந்த நாட்டிலும் மற்றும் வேறு நாடுகளிலும் அவருக்கு வேலை மிகவும் அதிகமாயிருந்தது. பிறகு அவர் மறுபடி ஒருதரம் இந்தியாவுக்குச் சென்று, தாம் மனத்திலெண்ணியிருக்கும் பல காரியங்களையும் செய்து முடிக்கவேண்டுமென்று அபேக்ஷைகொண்டனர். அன்றியும், அவரது குடும்பத்தில் கண்ணுக்குக் கண்ணாயிருந்தவர்களெல்லாம் காலவசத்தினால் பிரிந்துபோகவே "மனக்கவலை பலக்குறைவு" என்றபடி தனியேயிருந்து தவிக்கப்பொறாமல், இந்தியாவிலுள்ள மனமொத்த நண்பர்களை மறுபடியும் போய்ப் பார்க்க ஆசைகொண்டார்.

இங்குள்ள மூன்று இராஜதானிகளிலும் மேரி கார்ப்பெண்டர் போய்வந்த பல இடங்களையும் இங்கு எடுத்துரைப்பதென்றால் வளரும். மிகவும் முதிர்ந்த வயதான அறுபத்தெட்டாம் பிராயத்தில் இப்பொழுது நாலாந்தரம் அவர் இந்தியாவுக்கு வந்தார். "நற்றோர்க்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்பு" என்றபடி அவர் எவ்விடம் சென்றும், அங்கங்கே ஐரோப்பியரும் இந்துக்களுமாகிய பலரும் அவரது நல்வரவைக் கொண்டாடி, இந்து தேசத்து நன்மையின்பொருட்டு அவர் சுயநயத்தைச் சிறிதும் பாராட்டாமல் படுகிற பிரயாசைகளுக்காக மிகவும் புகழ்ந்து பேசினார்கள். பெருமையும் சிறுமையும் வாயால் வருமல்லவா?

மேரி கார்ப்பெண்டர் முன்னே தாம் அடிகோலிய காரியங்களெல்லாம் அநேகமாய்க் கைகூடி வருகின்றனவென்று கண்டு ஆநந்தமடைந்தவராகி, இத்தேசத்தார் அனைவரும்

றியுள்ள நன்மனத்துடனே வாழ்த்தி வந்தனஞ்செய்ய, கடைசியாக 1876-ஆம் மார்ச்சு௴ 27உ சுதேசம் செல்லக் கப்பலேறினார்.

இந்தத்தடவை அவர் தம்முடனே பாபூ சசிபாத பானர்ஜியின் பெரிய பிள்ளைகளிருவரை இங்கிலாந்தில் கல்வி கற்பிக்கவேண்டுமென்று அழைத்துக்கொண்டு போயினார்.

இவருடைய வாழ்நாளில் கடைசி வருஷம் தம்முடைய சகோதரர் அமெரிக்காவி லிறந்துபோனாரென்கிற துக்கச்செய்தியைக் கேட்கும்படியாக நேரிட்டது. ஆயினும், அவரடைந்த முதுமைப்பருவமும், அவருக்குச் சம்பவித்த பல துயரங்களும் அவருடைய குணங்களைப் பின்னும் அழகாகப் பக்குவப்படுத்தினவென்று அவருடன் பழகியவர்களுக்கெல்லாம் நன்றாக விளங்கியது. அந்தக் குணமே முதுமைப் பருவத்தில் மிகக் கொண்டாடத்தக்கதாயிருந்தது. அப்படிப்பட்டவர்களையே மற்ற வாலிபர்களெல்லாம் விசேஷமாக விரும்புவார்கள். இந்தச் சிறப்பை அவரும் தாமே உணர்ந்திருக்கலாம். அவர் சிறு பருவத்திலே அதிகமாய் ஆசைப்பட்டுக்கொண்டிருந்தது இதுவே. யாவரும் தம்மை விரும்பிக் கொண்டாடத்தக்க உத்தமகுணத்தைத் தாம் பட்ட பல பிரயாசைகளாலும், கஷ்டங்களுக்கு ஈடுகொடுத்ததனாலும் அவர் சம்பாதித்துக் கொண்டாரென்று சொல்லத் தடையில்லை. கடைசியில் அவருக்கு எழுபதாவது பிறந்தநாள் வந்தது. அப்பொழுது, அவரிடத்தில் அனைவரும் நட்பும், அன்பும், மரியாதையும், வியப்பும் உடையவரானார்கள். அவரும் இங்கிலாந்திற்குப் பேரும் பெருமையும் உண்டாக்கிய உத்தமிகளுள் ஒருவரானார்.

அவர் தமது வாழ்நாளை எவ்வளவு அழகாகக் கழித்தாரோ, அவ்வளவு அழகாகவே அவ்வாழ்நாளும் முடிவுபெற்றது

தேசத்தில் ஒருவிதமான அசௌக்கியமுமில்லா.
தாட்டியமும் சாமர்த்தியமும் குறைவுபடாமல் ஒரு சுக
மான ஸ்திதியிலேயே படுத்துத் தூங்குவதுபோல, 1877-ம் வ
ஜூன் மாதம் 14-உ மனக்களிப்புடனே தேகவியோகமானார்.
கடவுள் அவரைக் கைக்கொண்டார்; நித்தியநித்திரையடைந்தார்.

அவருடைய தாய், சகோதரியான அன்னி இவர்களை
இடையிலேயே அவருடைய தேகம் அடக்கம் செய்யப்பட்டது.
தரித்திரர் தனவந்தர் ஆகிய அனைவரும் பெருங்கூட்டமாய்
சமாதிசெய்யுமிடத்திற்கு அவரது உடலைப் பின்தொடர்ந்து
போனார்கள். அவர்களுடன் பேரிபார்ப்பென்டர் கைவிசு
பாக ஆதரித்துவந்த இந்துதேசத்துச் சிறுவர் இருவரும் அப
றுப சண்ணீருமாகக் கைகோத்துக்கொண்டு பின்தொடர்ந்து
போனார்கள்.

> "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லால்
> பொன்றுது நிற்பதொன் றில்."

> "வாழ்வு முயற்சிக்கு மாண்பா ருலேவின்றித்
> தாழா துஞற்று பவா."

S. P. C. K. PRESS, VEPERY, MADRAS—1901.